# ஸ்ரீவாதிராஜரின்

# குண்ட க்ரியெ

திரு. தாவணகெரெ பீமராவ்
அவர்களின் கன்னட உரையை
அனுசரித்து

தமிழில்

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஸ்ரீவாதிராஜரின்
# குண்ட க்ரியெ

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தரின் ஆராதனை நாளான
19-12-2021 அன்று இந்தப் புத்தகம் வெளியிடப்பட்டது

வெளியீடு:
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
8904458276 haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

அட்டைப்படம்:
ஸ்ரீவாதிராஜரின் பஞ்ச பிருந்தாவனம்,
பாகல்குண்டெ பெங்களூரு

**சலுகை விலையில் இந்தப் புத்தகம் வெளிவருவதற்கு பொருளுதவி புரிந்த ஹரி பக்தர்கள் அனைவருக்கும் நன்றி!!**

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

# ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் அருளிய குண்ட க்ரியெ

ஸ்ரீ மத்வ மதப் பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ சித்தாந்தத்தில் வ்யாஸ ஸாஹித்யம் மற்றும் தாஸ ஸாஹித்யம் என இரண்டுக்குமே தனது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வ்யாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன், கன்னடத்திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்திரையிலே பலதரப்பட்ட க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார். அந்த வரிசையில் ஸ்ரீ வாதிராஜர் ரசனை செய்துள்ள கிரந்தமே 'குண்ட க்ரியெ' என்பதாகும்.

மத்வ ஸித்தாந்த தத்வ ரகசியங்களையும், ஸ்ரீ ஹரியின் ரூப, குண கார்யங்களை தம்முடைய பலதரப்பட்ட கன்னட பதங்களிலே வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர், வேதங்களில், உபநிஷத்துக்களில், ஸாத்வீக புராணங்களில், இதிஹாஸங்களில் தெளிவாக விளக்கப்பட்டுள்ள ஸாஸ்திர விஷயங்களை ஸமஸ்க்ருதம் அறியாத பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் கன்னடத்தில், ஸாஸ்திரக் கடலில் முத்தெடுத்து, சுவையாக, ஸஜ்ஜனர்களின் மேல் கருணை கொண்டு இதனைப் படைத்துள்ளார்.

பகவான் கஜேந்திரனுக்கும் அஜாமிளனுக்கும் அருள் புரிந்த விதத்தை விவரித்து, துர்வாதிகள் என்னும் மத யானைகளுக்கு சிம்மத்தைப் போல் விளங்கும் ஹயவதனன் வேதத்தை பிரம்ம தேவருக்கு உபதேசம் செய்ததையும், உலகிலே தம்மைத் தாமே ஸர்வக்ஞன் என்று சொல்லிக் கொள்பவன் தன் முகத்தைக் காண கண்ணாடியையும், நாடியை அறிய மருத்துவரையும், தினத்தைப் பற்றி அறிய பஞ்சாங்கத்தையும் நாடுவது ஏன் என வினவி, அனைத்து இடங்களிலும் வியாபித்துள்ள ஸ்வதந்திரன், ஸர்வக்ஞன் ஸ்ரீ ஹரி ஒருவனே; அவனே ஜீவனின் ஸ்வரூப யோக்கியதையை அறிந்து உத்தம கதியை அளிக்கிறான்

என்பதையும் ஸ்பஷ்டமாக எடுத்துக் கூறி, வீட்டின் மேல் உள்ள அக்னி சமையலுக்குப் பயன் படவில்லை எனில், காட்டில் உள்ள நிழல் வீட்டின் வெப்பத்தைக் களையவில்லை எனில், திருடனுக்குத் தக்க தண்டனையை அரசன் அளிக்கவில்லை எனில் எவ்விதம் பிரயோஜனமில்லையோ, அதுபோல் ஸ்ரீ ஹரியின் ஸங்கல்பம் இல்லையெனில் சாதனை மார்க்கம் இல்லை என்பதையும், "கர்மம் ஒன்றே போதும் எனில் பிரம்மம் எதற்கு ?" என்ற வாதத்தைக் கண்டித்து, கர்ம பலனையும், மோக்ஷத்தையும் அளிப்பவன் பகவானே என்பதையும் எடுத்துக்கூறி, பானையைக் கண்டவுடன் அதை உருவாக்கிய குயவனைப் பற்றி நினைப்பது போல, இந்த ஜகத்தைக் கண்டவுடன் அதை ஸ்ருஷ்டி செய்த பகவான் உண்டு; இந்த ஜகத் சத்தியம்; ஸ்ரீ ஹரியின் ரூபங்களில் பேதமில்லை என அறிந்து, பிரம்ம வஸ்து ஒன்றே உள்ளது எனத் தவறாகக் கூறாமல், ஜீவ ஈஸ்வர பேதத்தை மனதில் கொள்ள வேண்டும் எனவும் விவரித்துள்ளார் ஸ்ரீ வாதிராஜர்.

அரசன் தனது அன்பிற்கு பாத்திரமான சேவகனை செல்வத்தைக் கொடுத்து கௌரவப் படுத்துவதையும், "நானே அரசன்" எனக் கூறுபவனைத் தண்டிப்பதையும் போல, 'நானே ஸ்ரீ ஹரி" எனக் கூறுபவனுக்கும் தகுந்த கதியை பகவான் அளிக்கிறான் எனவும், ஸ்ரீ மஹாலட்சுமி ஸ்ரீ ஹரியின் பத்னி என்றிருக்க, ஸ்ரீ கௌரி தேவி சிவனின் பத்னி என்றிருக்க தன்னையே ஸ்ரீ ஹரி என்றும், சிவன் என்றும் கூறிக்கொள்ளும் சிலரின் பேச்சு சகிக்க முடியாது எனவும் கண்டித்து, தைத்யர்களுக்கு வரம் கொடுத்துத் துன்பத்திற்கு ஆளான போது, ஸ்ரீ ஹரியை சரணடைந்தவரும், விஷ்ணுவின் பாதோதகத்தைத் தலையில் தரித்தவருமான ருத்ர தேவர், ஸ்ரீ ஹரிக்கு எவ்விதம் சமானமானவராக இருக்க முடியும் எனவும் வினவி, நாயெனத் திட்டுவதால் கோபம் கொள்வதானால் "அனைத்து ஜீவர்களும் சமம்", "அனைவரும் பிரம்மம்" எனக் கூறுவது எப்பேர்பட்ட நிந்தை எனச் சாடி, ஸஜ்ஜனர்களுடன் சகவாசம் செய்து, பக்தியை கைக்கொண்டு நித்ய ஸுகமான மோக்ஷத்தை அடைய வேண்டும் எனவும், ஜீவ ஈஸ்வர பேதத்தைக் கூறும் த்வைத மதத்தை அடைந்து ஹயவதனனின் சரணத்தை வணங்குமாறு ஸ்ரீ வாதிராஜர் மிக அழகாக விவரித்துள்ளார்.

ஸ்ரீ ஹரியின் விஸேஷமான குணங்களை வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ ஹரி தன்னை சோதிப்பதற்காக வந்த பிருகு மகரிஷிகள் எட்டி உதைத்த போதும் கோபித்துக் கொள்ளாமல் ஸர்வோத்தமன் தானே என உணர்த்தியவன், அனைத்து இடங்களிலும் வ்யாபித்து இருப்பவன், ரோமகூபத்தில் பிரம்மாண்டத்தையும் தரித்தவன், பிரம்ம ருத்ராதி தேவதைகளைத் தனது தாஸர்களாகக் கொண்டவன், அனைத்து லோகங்களைக் காட்டிலும் மேலான வைகுண்டத்திற்கு அதிபதியானவன், அனைவருக்கும் பிதாமகன் என அறியப்படும் பிரம்ம தேவரையும் தனது நாபிக்கமலத்தில் ஸ்ருஷ்டித்து, பிரம்ம தேவருக்கும் ஸர்வ ஸ்வாமியாக விளங்குபவன், பிரளய காலத்தில் ஆலயிலையில் படுத்திருக்கும்போது பிரம்மாதி தேவதைகளையும் ஜீவராசிகளையும் தனது உதரத்தினுள் தரித்தவன், பிரளய காலத்தின் முடிவில் சிருஷ்டியின் போது ஜீவராசிகளுக்கு அவரவர்களுக்குரிய யோக்ய ஸ்தானத்தை அளிப்பவன், தாயைப் போல் தனது பக்தர்கள் செய்யும் தவறுகளை மன்னித்து அருள் புரிபவன், 84 லக்ஷ யோனிகளில் உள்ள அனைத்து ஜீவ ராசிகளுக்கும் பிம்ப ரூபியாக விளங்குபவன், பாற்கடலைக் கடைந்த போது தகுதி உடைய தேவர்களுக்கு அமிர்தத்தை ஊட்டியவன், யோக்கியதை உள்ளவர்களுக்கு மோக்ஷத்தை அளிப்பவன் எனப் பலவாறு விளக்கிக் கூறி, திருவிளையாடல்கள் பல புரிந்து திருப்பதியில் சன்னிதானம் கொண்டுள்ள ஸ்ரீ நிவாஸனுக்கு இணையான மற்றொரு தெய்வம் இல்லை என அழகாக வர்ணித்துள்ளார்.

இறுதியில் ஸ்ரீ வாதிராஜர் மனம் உருகும் வகையில் பகவானிடத்தில் வேண்டும் விதமாக, தன்னை "ஹரி பக்தன்" என அழைக்கும்படி, பாப கர்மங்களில் ஈடு படாதவாறு காக்க வேண்டும் எனவும், இல்லையேல் இந்த அபகீர்த்தி ஸ்ரீ ஹரியையேச் சேரும் எனவும் கூறி, பகவானையே எப்போதும் தரிசிக்கவும், வேண்டவும் அருள் புரியுமாறும், தம்மை மறந்து விட்டால் நஷ்டம் தமக்கல்ல ஸ்ரீ ஹரிக்கே, ஏனெனில் 'பக்தவத்ஸலன்' என்னும் அவன் புகழுக்கு அதனால் குறை வந்து விடும் எனவும் உருக்கமாக பிரார்த்தனை செய்து நிறைவு செய்கிறார்.

இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ வாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக !

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீ வாதிராஜர் அருளிய 'குண்ட க்ரியெ' என்ற உயரிய கிரந்தத்தின் மூலத்தையும், அதன் விஸேஷ அர்த்தங்களை பாமரரும் அறியும் வண்ணம் கன்னடத்தில் வழங்கிய திரு. தாவணகெரெ பீமராவ் அவர்களின் படைப்பை 'ஜகன்னாத கேஸவ' திரு.சத்ய நாராயணன் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவர் சமீபகாலத்தில் வெளியிட்டுள்ள ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் அருளிய கன்னட கிரந்தங்களான 'ஸ்வப்ன பதம்', 'ஹரி ஸர்வோத்தம ஸார', 'ஸ்ரீ கிருஷ்ண பால லீலே', 'வைகுண்ட வர்ணனெ' போன்ற நூல்களின் வரிசையில், இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீ வாதிராஜ தீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவ ரூபி பரமாத்மா ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் மற்றும் மனச்சாந்தி இவைகளை அருளி, இதுபோல் இன்னும் பல மொழிபெயர்ப்பு நூல்களை தமிழில் வெளியிட வேண்டும் என ப்ரார்த்தனை செய்கிறேன்.

ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து !!

மேடவாக்கம், பிரஸங்க பூஷணம்' 'பிரவசன பூஷணம்'
சென்னை 'மத்வ ரத்னா'
03 - Dec - 2021 **S.லக்ஷ்மி பதிராஜா**

## ஶ்ரீவாதிராஜரின்
## குண்ட க்ரியெ

ப3ரிதெ3 ஸம்ஸாரதி3 ஜரிதெ3 மரெதெ3
ஹரி நின்ன அனுஸரிஸுதிரதெ3
கரி தே3வதே3வயென்னெ
கருணி கண்தெரெதெ3 தரிதெ3 மகரிய
முக2வ நீ பே3ஸரதெ3
வரதே3ஷ பாஹியெனெ அஜமிளன
பொரெதெ3 முரிதெ3 யமப4டர
தரிதெ3 பா1ஷக3ள கரெதெ3ன்ன ஹயவத3ன
பரெதெ3 தத்வக3ள மெரெதெ3 மஹிமெய
நினகி3தொ3ந்த3ரிதெ3 ||1

தே3ஹவில்லதெ3 பே3ரெ ஜீவவில்லெம்ப3னெ
மோஹத3 நின்ன ஹெண்ட3தி ஸாயலேதகெ
ஹாஹா எந்த3ளுவெ வாதி3
நேஹபாதுரவாத3 பூர்வகாயக்கெ
நு ஹானி ப3ந்தி3து பேளா
பாஹுக3ளிந்த3த3னப்பி ரமிஸபே3கு
நீ ஹேளித3 ப1ந்த2கெ
ஶ்ரீஹயவத3ன இந்த1ல்லதி3த்3த3ரெ நகு3வ
ஈ ஹத3னரியத3வன மத1 து3ர்மத
ஸாஹஸ ஸாகு ஸாகு ||2

எல்லவித்3த3ரு ஷ்வாஸபொந்தி3ல்லவெம்ப3னெ
ப3ல்லித3 டொ3ம்ப3ன ஸதி பவனவ கட்டி
நல்லி வாக3ம்ப3ரதி3
குள்ளிர்த்த3 தா3ரவு கடி3த3 மேலெ தா
நில்வளு சலிஸத3ந்தெ
தொல்லகி3த3ஸு மத்ததெ3ல்லதெ3ம்ப3 யுக்தி
ஸல்லத3ல்ல நினகெ3
ப3ல்லவதூ4தரு ப்ராணமார்க்க3வ தடெது3
செல்வஹயவத3னன மெச்சிஸி ஷைலாக்3ரதி3
தலெயூரி தபிஸரெ ||3

ஸ்யாதெ3ம்ப3 வாதி3 நாவெம்ப3 ப்ரமேயவ
ஸாதி4ஸபே3காகி3 வாதி3பெயெந்தோ
பா3தி4ப மாதனக்ஞா
போ3த4 நிக்3ரஹ தானெ பா3ரதெ3 பி3ட3து3
மொத3லிகெ3 ஸோதெ1யல்ல
ஆதி3யனரியத3வன மத1வெந்தோ1
ஈ த4ராந்தகெ மெச்சரு
வேத3வனொயிது3 விதி4கெ3 போ3தி4ஸித3 து3
ர்வாதி3க3ஜேந்த்3ர பஞ்சானன ஹயவத3
நாதி3 நாராயணனு ||4

தானோர்வனைவராசார்யரெம்ப3 மத
ஹீனவெம்ப3னு மத்தொப்3ப3ன நுடியெந்தோ
நானாயுக்திய மாடு3வ
ஜனன மரண ஹஸிவு த்ருஷெ நானா வ்ய
ஸன ஸர்வரிகெ3 சரி
மானவரெல்லரு மருளரு நானே ப்ர
வீணனெந்த3ரெ நக3ரெ
ஆனெம்ப3ஹங் க்ருதியிந்த3 ஜக3தொ3ளு
நீனெ ஹீனனாஹெ ஹயவத3னன ப3ல்ல
ஜாணஜனர கேளு ||5

தானொப்3ப3னைது3 மதஜனரொட3னெ
ரணரங்க3தி நிந்து ஜயிஸுவுதெ3ந்தை1ய
நானாவசனங்க3ளு
நானாயுக்திக3ளொப்3ப3ன மாதினிந்த3லெ
ஹீனவாகி3 போபு(வெ)
அனாதி3ய வேத3வெம்ப3 ப3லு ப்ர
மாணனொல்லத3வகெ3 காணதெ3
மேலண பத3விய நொரெவ ப்ர
வீணதெ பா3ரதா3கி3 ஹயவத3ன
தா நிக3மவ தந்த3 ||6

இத்3த3 தே3வமானவர மாதினொளு
ஸ்ரத்3தெ4ய மாடு3வரு லோகத3வரு
பு3த்3த4ஸ்வரூபதி3ந்த3
ஆத்3யனாத3 நாராயணனெ ப3ந்தி3ல்லி
பேள்த3 ஸித்3தா4ந்தவனு
க3த்துக3ன்னவ மாட3லுத்3ப4விஸித3 கதெ
ஸித்3த4வாக3லில்லவெ
பு3த்3தி4வந்தரெல்ல பேள்த3 பேள்த3பரி
ஷுத்3த4 காரண ஸ்ருதியெனிப ஹயவத3ன
நுத்3த4ரிஸித3 வித்3யெய ||7

தன்னமொக3வ தா காணலரியத3லெ
கன்னடி3யனு தாஹ மனுஜஜாதிய
மொன்னெமொன்னெகெ3 ஸர்வக்ஞ
தன்னன்னெ கூடி3ர்த3 நாடி3ய தோரிஸி
தனுவின ஸ்தி2திய
அன்யர கேளனெ பஞ்சாங்க3தொ3ந்தொ3ந்து3
தி3ன தி3ன நோட3னெ
என்னாள்வ ஹயவத3ன குது3ரெமொக3தி3 வ்யா
க்2யான மாடு3வகெ3 கூடு3வுது3 காணோ
அனுபம ஷகுதி ||8

எல்லெல்லி தும்பி3த்3த3 விஷ்ணுவெ நீனவர
ப3ல்லெ ப3ல்லெ விஷ்வதஸ்சக்ஷு நீனெ க3ட3 தோ
ர(ல்லி) தோரதி3ரலி நீனெப3ல்லெ
ப3ல்லெ கைவல்யவ கொட3லு பி3ட3லு நீனெ
ப3ல்லெ ப3ல்லெ ஷரணரிகெ3
ஒலிது3 க2ளர கெ3ல்லுவுது3 ப3ல்லெ
ப3ல்லெ மாயாபதியெ
கல்லு கம்ப3தி3 மூடி3த3 ப4க்தவத்ஸல
ஸல்லுவுதோ3 ஹயவத3ன எ
ந்னாளுவ கருணி நீ ப3ல்லெப3ல்லெ ||9

ருத்3ரரோத3னவெம்ப3 ஹொன்னக3ண்ட3ன காய
த3ர்த்3த4வ ஸெளெவ ஹெண்ணனொப்3பொ3ப்3ப3ர
கு3த்3தி3ஸிகொல்வ மண்ண தொ
ரெது3 பா3ளுவ மானவனாவ சதுர்த்த3
பு4வனதொ3ளு
ஹொத்3தி3த்3த3 து3க்3த3வாரிதி4 மத்4யத3ல்லி
இத்3து3 தன்னத3ரத3லிப்ப
பத்3மிய ஸடெ3கொ3ள்ளதெ3 குவரன நாபி4
பத்3மதி3 பெ1த்த ஹயவத3னனொப்3ப3னெ
கெ3த்3த4சித்3த4 காணிரோ ||10

மனெய மேலண கிச்சு மனெயொளகி3ன கர்ம
கனுகூலவாத3 ப3கெ3ய பேளுவெ வாதி3
கானன மரத3 நெளலு
ஜனபத3தொ3ளக3ண தாப களெவுதெ3 க
ள்ளன களுஹதெ3 ஷூலக்கெ
அனக4ரிக3ப்பணெகொடு3வ அரஸினந்தெ
இனிது காரணராஷிய
க4னதர கார்ய ஸர்வேஷ்வர நம்ம
வினுத ஹயவத3னனொல்லதி3த்3த3ரெ மே
லணபத3கெந்தே1ருவெ ||11

கர்மவொந்தெ3 ஸாகு பொ3ம்மவேகெம்பு3வ
[நிம்மஹியொளு] யக்ஞாதி3 ஸத்கர்மவ
ஸூம்மனெ மாடு3வனெ
நிம்ம மக2வ மாட3பே3கெம்ப3 ஸ்ருதி நம்ம
பொ3ம்மன பேளிதாகி3
அம்மம்ம ஸத்வத3னுடி3 தப்பித3ரெ ஸாத்4ய
ஸம்மதி1ப்பதே3கோ
ஹெம்மெய பி3டு3 வாதி3 ஹயவத3னனெம்ப3 பர
பொ3ம்மன நம்பு3 கைவல்ய பே3காத3ரெ
இம்மன மாட3பே3ட3 ||12

இன்னொப்3ப3வாதி3 க4டபடாதி3 தத்வ
வன்னு நுடி3த3ன்ன ப3ந்த4 பரிபுதெ3ந்தோ1
மண்ணு தந்து3 ஷோதி4ஸி
என்னிதாக3பே3கோ அன்னிதவ கூடி3
நிர்ணயிஸி க4டவ மாட்3த3
சென்னய்யனெம்ப3 கும்பா3ரனேதகெ போ1க3
உன்னந்த முகுதிபத2க்கெ
என்னொடெ3ய ஹயவத3ன இந்தி3வர யுக்தி
ஷூன்ய மாதிகெ3 மெச்ச நான்ய:பந்த2வெம்ப3
ஆம்னாயவ பேள்த3வ ||13

தன்ன நாலிகெ3யன்னு தா கத்தரிஸுவவ
இன்னேனு நுடி3வனோ கடி3வ கொட3லியனு
மொன்னெய முரித3வனு
வனத3 தருக3ள கடி3வனேனோ மூட4
நின்ன வேதா3ந்தவனு
மன்னிஸதெ3 புஸியெம்ப3 வாதி3 ஜக3
வன்னு இன்யாதரிந்த3
ப3ன்னப3டி3ஸி கெடி3ஸுவெ நின்னர்த்த4வ
இன்னெந்து1 ஸாதி4பெ ஹயவத3னனவரொளு
எந்து நிந்து வாதி3பெ ||14

நேஹ நானாஸ்தி கிஞ்சனனெம்ப3 ஸ்ருதி நம்ம
ஸ்ரீஹரியல்லிப்ப கு3ணரூபங்க3ள
வ்யோஹக்கெ பே4த3வில்ல
ஸாஹஸ ஸத்வ நித்யத்வ
மஹத்வவெல்லவு ஸமவெந்து3
ஊஹிஸி ஏகமேவாத்3விதீய யெம்
பீ3 ஹாடு3 லயகாலதி3
ஈ ஹதி3னால்கு லோகவில்லெந்த3யிஸெ
மோஹவ பி3டு3 ஹயவத3ன மாடு3வ ஜக3
தா3ஹானி யாத1ரிந்த3 ||15

அன்யவிஷமெம்ப3 ஸ்ருதிய கேளு த்3வாஸு
பர்ணஸயுஜா ஸஹவெம்ப3 வேத3வ நம்போ3
நின்ன பெ3ன்ன பி3ட3தி3ஹ
அனேக ஜன்மத3 க்லேஷவ நோடு3 இ
ந்னன்யவெந்த3ரெ புஸியெ
அன்யஷ்னன்யன்யோ எனிஸி முகுந்த3னு
பூர்ணஸுக2னல்லவெ
மான்ய ஹயவத3ன்ன த்ரிவிக்ரம
நன்ன ஹயவத3ன்ன த்ரிவிக்ரம
நன்ன தா3ஸோஹம் என்னோ ஷாஸ்த்ரோக்தி
மன்னிஸி பா3ளோ ஜீவ ||16

அரஸின ஆளெந்து3 பா3ளுவ மனுஜர
ஸ்தி2ரத1ர பா4க்3யவ நீவெல்ல நோடி3ரோ
அரஸு தானெம்ப3வகெ3
தரதரத3லி பா3ஹ க்லேஷராஷிக3ள
ஸெரெமனெயல்லிக்கெம்ப3
ஹரி தானெயென்னலு பௌண்ட்ரக த3னுஜன
ஷிரவ செண்டா3டி3த3னு
நரனஹம்பி3ரம்ம எனெ கொல்லது3ளிபனெ
ஸர்வேஷ்வர வேத3வ தந்த3 ஹயவத3ன
இந்தெம்ப3ர கொல்லெம்ப3 ||17

லோகமாதெயெந்து3 லகுமிய நாம அம்
பி3கதே3வியெந்து3 கௌ3ரிய பெஸரு வி
வேகிக3ளெல்ல கேளி
ஈ குமதிக3ளச்யுதோஹம் ஷிவோஹம் எந்தே3கெ
பேளுவரெய
பே3காயிதேனோ மாத்ருகாமியெம்ப3
ஈ கஷ்டத3 ப3யிக3ளு
ஶ்ரீகாந்த ஹயவத3ன யோனꞏபிதாயெம்ப3
ஸூக்தக்கெ தே3வதெயாத3 காரண
இவன குவரரு நாவு ||18

அத்3வைதவாதி3 நின்ன வித்3வன்மதத3ல்லி
பு3த்3த4தே3வகெ3 பெஸரித்3த3 காரணதி3ந்த3
அத்3வயவாதி3யெந்து3
ராத்3தா4ந்தத3 கு3ரு ஷுத்3தோ4த3ன முனி பே
ளித3 பு3த்3த4 மதவ
ஷுத்3தா4கி3 ஷோதி4ஸி ஸித்3தா4ந்த கதெக3ள
ப3த்3த4வாது3தி3ல்லவெ
பு3த்3தி4வந்தரு கூடி3 த்3வைதமதவன்னெ
ஹொத்3தி3 ப3து3கி ஸிரிஹயவத3னன பாத3
பத்3மவன்னெ ப4ஜிஸிரோ ||19

வ்யோமகேஷனொப்3ப3 வ்யோமபாத3னொப்3ப3
ப்4ராமக வரவீவனொப்3ப3 கொல்லுவனொப்3ப3
க்ஷாமத3க்ஷாதி3க3ள
ஸீமெயரியெ கொந்த3வனொப்3ப3 ரக்ஷிஸி
த3 மஹாபுருஷனொப்3ப3
ராமாத்3யவதாரதி3ந்த3 முரித3 பி3ல்லு
ஆ மஹேஷனத3ல்லவெ
ஸ்ரீமுடி3யலி விஷ்ணுபதி3யெம்ப3 நதி3 பொத்த
ஆ மஹாதே3வ ஹயவத3னனெந்தாஹ
நீ மானவனெந்தாஹெயோ ||20

ஸ்துஹி ஸ்ருதம் க3ர்த்தஸதா3 யுவானெந்தா3
ஹரன கூடெ3 வேத3 பேளிதாகி3 ஆ
மஹாபுருஷனொப்3ப3
மஹிமெயுள்ள நரஸிம்ஹன தன்ன ஹ்ருத3ய
கு3ஹெயொளகி3ப்பன
ஸிம்ஹனந்தெ ப4யங்கரவீவன ஸ்துதி
கா3 ஹந்த ஹரியெ பே3கு
ஸ்ரீஹயவத3னனெ இவனெந்து3 ஸித்3த4 ந
ம்ம ஹிரியர மதவனு ஜரிவெயெந்தோ
ஸோஹம் எம்ப3 மனுஜ ||21

நீ நாயி எந்த3ரெ கோபவேகோ மனுஜ
ஹீனரைக்யவ பேளலது3 ப3யிகளாத3ரெ
மனெமனெக3ளிகெ3 போகி3
தீ3னதனவ தோரி தனுவ பொரெயுவ
நானா ஜீவரைக்யவ
ஶ்ரீநாத2கெ பேள்வதே3ஸு ப3யிக3ளோ மூட4
கு3ணஶூன்யனெம்பு3வுது3
மானவரிகெ3 ப3யிக3ளாத3ரெ ஹயவ
த3னகெ3 கு3ணவில்லவெம்போ3து3 ப3யிக3ள
ல்லேனெலோ ப3லுமூட4 ||22

நரரொளு பரநிந்தெ3 ஸல்லது3 ஸர்வே
ஷ்வரன நிந்தி3ஸுவுது3 த4ர்மவேனோ ஸஜ்ஜ
நரொடனாடெ3ந்தெ3ந்து3
து3ருளர கூட3ணாட1வ பி3டு3 ஹரிய
சரணஸேவெய மாடு3
து3ரித ராஶிக3ள நீட்3யாடு ப4க்திய பே3டு3
பரமபுருஷன நோடு3
ஸிரிஹயவத3ன கருணதி3ந்த3லி நினகெ3
ஸிரிஸேருதிப்புது3 பரக3தியப்புது3
நிருத ஸுக2வு தப்பது3 ||23

ஶோதி4ஸெ ப3ந்த3 ப்ருகு3வனரியதெ3 வ்ருதா2
க்ரோத4வ மாடி3த3காரண விதி4 ருத்3ர
ராதி4க்யராது3தி3ல்ல
வேத3 ஈஷ ஸர்வக்ஞ எந்து3 பேள்த3
ஆதி3வஸ்துவ காணய்ய
போ3த4வில்லதெ3 மானவரந்தெ இருதிப்ப
ஆ தே3வரெந்தப்பரய்
ஶ்ரீத4வனெதெ3யனொத்3தா3க3லெ ஸர்வ
வேதி3 ஹயவத3னாத3காரண கோ1பி1
ஸதெ3 ஹெத்3த3யிவனாத3 ||24

ஆவன்ன ரோமகூபதொ$^3$ளகீ$^3$ ஜீவ
ராவாஸவாத$^3$ பி$^3$ரம்மாண்ட$^3$ ராசிக$^3$ளு
தீவிப்புத்$^3$யத்$^1$ரப்ரியா
ஹி விஷ்ணு பரமாண்வாத்$^3$யயெந்து$^3$ பேள்த$^3$
ஸ்ரீ வேத$^3$வ்யாஸ தானே
ஈ விஷ்ணு ரோமக்கெணெயில்லவென்னெ ஈ
தே$^3$வகின்யாவனெணெ
ஸ்ரீ வாஸுதே$^3$வ ஹயவத$^3$ன ஸர்வேஷ
தே$^3$வரெல்ல இவன தா$^3$ஸதா$^3$ஸரின்னு
விவாத$^3$வ்யாகோ ஜீவ ||25

ஸ்வர்க்கா$^3$தி$^3$ ஸத்யந்தவாத$^3$ மேலணலோக
கக்$^3$ரணிக$^3$ளாத$^3$ தே$^3$வர நோடு$^3$ மத்$^4$யதொ$^3$
ளொக்$^3$கி$^3$ஹ பூ$^4$லோகதி$^3$
முக்$^3$கி$^3$ஹ மனுஷ்யராஷிய நோடு$^3$ கெ
ளக்$^3$க$^3$ண பாதாளதி$^3$
து$^3$ர்க$^3$ர்வி தை$^3$த்யர நோடு$^3$ த்ரிவித$^4$ஜீவ
வர்க்க$^3$பதா$^3$க$^3$மக்கெ
ஸவர்க்க$^3$வெ ஸாக்ஷி எல்லத$^3$ரிந்த$^3$ மேலண
து$^3$ர்கா$^3$தி$^4$பதி ஹயவத$^3$னவனொப்$^3$ப$^3$னெ ஸ
ர்வாக்$^3$ரேஸர காணிரோ ||26

மூர்த்திய நோட$^3$லு விஷ்வதஸ்சக்ஷு எம்
உக்தியர்த்த$^2$வாத$^3$ ஸ்ரீஹரிய பிரிய
வ்யாப்திய நோட$^3$லாகி$^3$
தத்வவெஷ்டெஷ்டு அஷ்டஷ்டரல்லி வே
தோ$^3$க்தியிந்த$^3$லி ஸர்வ
வ்யாப்தி நாராயணஸ்தி$^2$த எம்ப$^3$ ஸ்ருதிகீ$^3$
நீதிகெ$^3$ ப்ரதியில்ல
க்$^2$யாதகு$^3$ணக$^3$ளிந்த$^3$ அப்ரதிமல்ல ஸ்ரீ
நாத$^2$ ஹயவத$^3$ன மஹிமனந்தகு$^3$ண
யாதகிந்து வாதி$^3$பெ ||27

ஆருஷாஸ்த்ர ப3ல்லவரெல்ல கேளிரோ
நாராயணன நாரியராத3 தா4ருணி
ஸிரிதே3வியரிவன
தூ3ரிதா3க3லெ நினகெ3 தூ3ரவாக3லு கால
நூரலு நெலவ காணெ
பா3ரது3 பா3யிகெ3 கூளு இதெ3ல்லவு
ஆரேனெம்ப3ரு கேளய்யா
ஊரொளகி3ன பதிவ்ரதெயரிரவ கண்டு3
ஸாரஹ்ருத3யரெல்ல ஹயவத3னன பாத3
ஸரோஜனவனெ ஸாரிரோ ||28

நரககூபதொ3ளேளுத முளுகு3த
ஹரித்3வேஷிக3ளெல்ல மலமூத்ரக3ள திந்து3
கா3ரஹரெந்த3ரிய
புராண பா4ரத ராமயணங்க3ள
பிரியரிந்த3லி கேளி
ஓரந்தெ ஷாஸ்த்ரார்த்த2க3ளன்னெல்ல வி
சாரிஸி திளிது3கொள்ளி
நாராயணனெந்து3 சேரித3 அஜாமிள
ஸேரனெ ஹயவத3னன்னரமனெய
ஸாரி தா ப3து3கிரனெ ||29

ஆ தே3வ ஈ தே3வனெந்த்3யாகெ கலஹ நா
நா தே3ஷத3வரிகெ3 பே3டி3தி3ஷ்டவனீவ
ஸாதி4ஸித3 த4னதி3
ஈத4ரெயொளகி3ர்த்த3 ராமகெ3 கோடி த்3ர
வ்யாதி3 கட3ன கொட்ட
வாத3வ முரித3 வெங்கடகி3ரிராயனம்
தா2தே3வனன்னு தோரோ
ஸ்ரீதே3வியுரத3 திம்மய்யராயகெ3 ப்ரத்ய
க்ஷதி3 எணெகா3ணெ ஹயவத3ன்னன
பாது3பது3மதா3ணெ ||30

ஆவன நாபி4கமலத3ல்லி புட்டித3
தே3வ பிதாமஹா எனிஸிகொம்பு3வனாகி3
ஜீவராஷிகெ3 எல்ல
ஈ விஷ்ணுவிகெ3 ஆ தி3விஜரேனாஹரெந்து3
ஆவ ஸர்வேஷனெந்து3
நீவிட்ட பிண்ட3வு ஆர பா1லாஹுதெ3ந்து3
பா4வக்3ஞரெல்ல கேளி
தே3வ ஹயவத3னனொல்லத3 வாதி3கெ3
தாவுதி3ஸி தாயில்ல எம்ப3கா3தெ3 ப3ஹுது3
ஸேவிஸவன ஜீவ ||31

ஆதிகாலத3ல்லி ஆலதெ3லெய மேலெ
ஶ்ரீதே3வியரொட3னெ மலகி3த்3தா3க3
ஆ தே3வரெல்லிஹரோ
மாத4வனக3ரிகெ3 மொத3லாத3 விதி4
போதா3க3 போத3ரெல்ல
ஆதா4ரவாத3 தத்வங்க3ளெல்லவு அ
ளிதா3க3 அளித3ரெல்ல
வேத3 ஏகோ நாராயணாஸீதெ3ந்து3 பே
ளித3 காரண ஹயவத3னனெ ஜக3தொ3
ளதி4க தெ3ய்வவாத3 ||32

ஹொட்டெயெம்ப3 பொன்ன தொட்டிலொளகி3ட்டு
விட்2ட2ல ஜீவர நித்3ரெகொ3ளிஸுவனு
ஸ்ருஷ்டிகால ப3ந்தா3க3
ஹுட்டிஸி ப3ஹுரூபதா3ட1வனாடி3ஸி
இஷ்டங்க3ள கொடு3வ
து3ஷ்டமக்கள மண்டெ3 ஹெட்டுவ கெலவர
கட்டலெயனு பி3டி3ஸ
ஸிஷ்டரெத்திகொம்ப3 ஹயவத3னன பாத3
பி3ட்டிய காம்ப3ந்தெ காணதெ3 மன
முட்டி ப4ஜிஸோ ஜீவ ||33

மக்கள தப்புக3ள லெக்கிஸதெ3 தாயி
மிக்க க2ளர தப்பு உக்கு தக்3கி3ஸுவளு
பக்ஷிவாஹன னொம்மொம்மெ
ஸொக்கி நடெ3த3ரு ப4க்குதர காவ
நக்கு காருண்யத3லி
உக்கித3 ரக்கஸர ஷிக்ஷிஸதெ3 பி3ட3
க்ஷிபாம்யஜஸ்ரவெம்ப3
அக்கொ பத3வ மக்கர்மக்ருன் மத்பரமெம்ப3
உக்தியனேனெம்பெ3 ஹயவத3னன ப4ஜிஸி
முக்திபே3கெம்பு3வரு ||34

எம்ப3த்து நால்குலக்ஷ யோனிக3ளல்லி
தும்பி3ர்த்த3 ஜீவரிகீ3ருபங்க3ளெ
இம்பா3த3 ப3ஹரூப
ஸம்ப்4ரமதெ3 நிஜரூபதி3ந்தெ3ஸெவ
கம்பு3 சக்ராதி3க3ள
எம்போ3 மாதிகெ3 ஸந்தே3ஹ ஸல்ல மே
லும்ப3 ஸுக2வனீவ
ஷம்பு4 முக்2யகு3ருக3ளிந்த3 கேளிரோ நா
நெம்ப3 ஹங்க்ருதியிந்த3 ஹயவத3னன பா
தா3ம்பு3ஜகிந்தேருவ ||35

ஒந்தெ3 அம்பு3தி4 ஒந்தெ3 கட3கோ3லு நேணொந்தெ3
ஒந்தெ3 ஸாத4ன ஸர்வஸாத4னங்க3ளு ஸரி
முந்தெ3 பரிவ தை3த்யர
வ்ருந்த3க்கெ ஸுதெ4யில்ல வ்ருந்தா3ரகரிகு3ண்டு
எந்து3 நிர்ணயிஸிதாகி3
முந்த3ண முகுதியோக்3யரிகு3ண்டு இதரரி
கெ3ந்தெ3ந்தி3கா3க3தைய்ய
தந்தெ3 ஹயவத3னனொல்லத3 வாதி3கெ3
ஸந்தே3ஹ ஸல்ல பூ3தி3ய ஹோமத3ந்த3தி3
எந்தெ3ந்தி3க3ஹுதெய்ய ||36

கள்ளப4க்தரிகெ3 ஸல்லது3 ஷுப4ப2ல
எல்ல பீ3ஜகெ ஸல்லது3 ஸல்லிகெ1
எல்லி யோக்3யதெயுண்டோ
அல்லியெ ப2ல அதி3ல்லத3வரிகி3ல்ல
ப3ல்லபு3த4ரு கேளிரோ
எல்ல ஸாத4னக3ளொல்லத3வகெ3 ஈ
ப2ல்ல து3ர்லப4காணிரோ
ப3ல்லித3 ஹயவத3னனொல்லிதா3க3லெ அ
ஹல்யெயித்3த3 ஷிலெ ஹெண்ணாத3வோலு இம்
துளித3த்3து3 ஹெண்ணாயிதெ ||37

எனகெ நின்னலி ப4க்தி இரலி இல்லதி3ரலி
ஜன ஹரிப4க்தனெந்தெ3ன்ன கரெயலாகி3
மன பாபகெரக3த3ந்தெ
அனுதி3ன நீனின்ன காயபே3காயிது
அனிமித்த ஸுஜனப3ந்து4
கனரிஸி யமப4டரு முந்தெ3 கொந்த3ரெ நின்ன
க4னதெகெ3 ஸாலத3ய்ய
தன்னவர ஹயவத3னனய்யரிகொ3ப்பிஸித3
நென்னுவ து3ர்வார்த்தெ தப்பிஸிகோ தந்தெ3
முன்னி ஜனவந்த்3யபாத3 ||38

நின்னனெ நோடு3வ நின்னனெ பாடு3வ
நின்னனெ பே3டு3வ நின்ன கொண்டா3டு3வ
ஜனரொளெந்தி1ப்புதை
கண்ணு குக்கி கிவியோள் ஸுண்ணஹொய்து3 ஷிர
வன்னு கத்தரிஸுவ
ப3ன்னப3டி3ஸி கி3லிகி1ய மெட்டிஸுவ
க4ன்னனரகத3 பா3தெ4
நின்ன மஹிமெகி3து3 ஸாகெ தே3வரதே3வ
என்னாள்த3 ஹயவத3ன்ன விசாரிஸோ
அன்னந்த கு3ணபூர்ண ||39

நா நின்ன மரெத3ரு நீனென்ன மரெத3ரெ
ஹானி நினகெ3 நின்ன ப4க்தவத்ஸதெகெ3
ஹீனதெ ப3ந்தி3தாகி3
ஆ நருதே த்வத்கியதே கிஞ்சனாரேயெம்
பா3ம்யாய ஏனெந்தி3தாகி3
நீனுதா3ஸீனனாகெ3 க2ளர ஸேனெ ஸ
ஜ்ஜனர கொந்தி3தாகி3
ஸ்ரீநாத2 ஹயவத3ன ஷிஷுக3ள தப்பனு
ஜனனி ஜரெத3ரெ ஜக3வெல்ல நகு3வுதோ3
ஜாணர ஜாண நீனு ||40

**|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||**

***

|| ஸ்ரீ: ||

ந மாதவஸமோ தேவோ ந ச மத்வஸமோ குரு: |
ந தத்வாக்ய ஸமம் ஷாஸ்த்ரம் ந ச தக்ஞஸம: புமான் ||
ஆசார்ய: பவனோऽஸ்மாகம் ஆசார்யாணீ ச பாரதி |
தேவோ நாராயண:ஸ்ரீஷ: தேவீ மங்களதேவதா ||
காமதேனுர்யதா பூர்வம் ஸர்வாபீஷ்ட பலப்ரதா |
ததா கலௌ வாதிராஜ ஸ்ரீபாதோऽபீஷ்டத: ஸதாம் ||

ஸ்ரீமத்வாதிராஜ தீர்த்த ஸ்ரீபாதங்களவர் இயற்றிய
குண்டக்ரியெ

**ப$^3$ரிதெ$^3$ ஸம்ஸாரதி$^3$ ஜரிதெ$^3$ மரெதெ$^3$**
**ஹரி நின்ன அனுஸரிஸுதிரதெ$^3$**
**கரி தே$^3$வதே$^3$வயென்னெ**
**கருணி கண்தெரெதெ$^3$ தரிதெ$^3$ மகரிய**
**முக$^2$வ நீ பே$^3$ஸரதெ$^3$**
**வரதே$^3$ஷ பாஹியெனெ அஜமிளன**
**பொரெதெ$^3$ முரிதெ$^3$ யமப$^4$டர**
**தரிதெ$^3$ பா$^1$ஷக$^3$ள கரெதெ$^3$ன்ன ஹயவத$^3$ன**
**பரெதெ$^3$ தத்வக$^3$ள மெரெதெ$^3$ மஹிமெய**
**நினகி$^3$தொ$^3$ந்த$^3$ரிதெ$^3$ ||1**

ஸம்ஸாரதி - ஸம்ஸாரத்தில் இருந்து (குடும்பத்தில் இருந்து). பரிதெ - வீணாக. ஹரி - ஹே ஸ்வாமியே. நின்ன - உன்னை. அனுஸரிஸுதிரதெ - வணங்கியவாறு வாழ்க்கையை நடத்தாமல். ஜரிதெ - (நீ ஸ்வதந்த்ரகர்த்தனான ஸ்வாமி என்பதை) புறக்கணித்தேன். (ஸ்வதந்த்ரன் என்று சொல்லும் ஞானிகளின் மொழிகளை கேட்கவில்லை). மரெதெ - மறந்தேன். கரி - கஜேந்திரன். தேவதேவ என்னெ - ஹே தேவோத்தமனே என்று அழைக்க. கருணி - ஹே கருணைக்கடலே. கண்ணெரெதெ - அதனைக் கேட்டு அல்லது கஜேந்திரனுக்கு தரிசனம் அளித்து (அஞ்ஞானத்தை பரிகரித்து). நீ - நீ. பேஸரதெ - சிறிதும் தாமதம் செய்யாமல் (தடமாடதெ - புறக்கணிக்காமல்). மகரிய முகவ தரிதெ - முதலையின் வாயினைக் கிழித்தாய். வரதேஷ - ஹே

அபீஷ்டங்களை கொடுப்பவனே. பாஹி - அருள்வாயாக. யெனெ - என்று அழைக்க. அஜமிளன - அஜமிளனை. பொரெதெ - அருளினாய். யமபடர - யமதூதர்களின். பாஷகள - (அஜாமிளனை கட்டுப்படுத்திய) பாசக்கயிற்றினை. தரிதெ - கத்தரித்தாய். கரெது - (என்னை) அழைத்து. ஹயவதன - ஹே ஹயமுகனே. தத்வகள ஒரெதெ - தத்வங்களை உபதேசித்தாய் (உபதேசத்தினால் ஞானத்தை கொடுத்தாய்). மஹிமெய - உன் மகிமைகளை. மெரெதெ - புரியவைத்தாய். நினகெ - (சர்வஷக்தனான) உனக்கு. இதொந்தரிதெ - இவ்வாறு செய்வதில் என்ன வியப்பு? (உனக்கு இது பெரிய செயல் இல்லை).

* ஸ்ரீஹரியே சர்வோத்தமனான ஸ்வதந்த்ர பிரபு என்பதை அறிந்து அவனை வணங்குவது, மனிதப் பிறவியின் சாமர்த்தியம். இதனை அறியாத வாழ்க்கை வீணே.

* துக்கமே அதிகமாக இருக்கும் இந்த சம்சாரத்தில் சிக்கிக் கொண்டிருக்கும் ஜீவன், கஜேந்திரனைப் போல பக்தியுடன், 'நாராயணா அகிலகுரோ பகவன் நமஸ்தே' என்று அழைத்தால், கருணைக்கடலான ஸ்ரீஹரி தன் தரிசனத்தைக் கொடுத்து, அவனை ப்ராக்ருத பந்தனத்திலிருந்து விடுவித்து, நித்யஸுக ஸ்தானத்தில் வைத்து அருள்கிறான்.

* மரண சமயத்தில் அஜாமிளன், தன் மகனை 'நாராயணா' என்று அழைக்க, அது ஸ்ரீஹரியின் பெயராக இருந்ததால் நற்கதியை அடைந்தான். (உடனடியாக யமதூதர்களிடமிருந்து விடுவிக்கப்பட்டான்). குறியீடு, கேலி, நகைச்சுவை என எப்படியாவது ஸ்ரீஹரியின் பெயரை உச்சரித்தாலும், அது நாமஸ்வாமியான ஸ்ரீஹரியின் ஸ்மரணையையும், அவன் மேல் பக்தியையும் பிறக்க வைக்கிறது. அதனால் பல பாவங்கள் பரிகாரம் ஆகின்றன. இவ்வாறு இருக்கையில் பக்தியுடன் நேரடியாக, மரண காலத்தில் பகவந்தனின் நாமத்தை உச்சரித்தால், விஷ்ணு லோகம் கிடைக்கிறது என்பதில் என்ன ஆச்சரியம்?

ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலனமேவ வா |
வைகுண்ட நாமக்ரஹணம் அசேஷாகஹரம் விது: || (பாகவத)

ஏதாவது ஒரு குறியீட்டினால் ஸ்ரீஹரி நாமத்தை கூறினாலும், அது பாவங்களை பரிகரிக்கக் கூடியது என்று ஞானிகள் கூறுகின்றனர். கேலி / நகைச்சுவையாகக் கூறிய ஹரி நாமத்திற்கு, எப்படி நற்கதி கிடைக்கிறது என்பதை:

நாமஸ்வாமிதயா தஸ்ய ஸ்மரணம் ஜாயதே யத: |
பக்தஸ்யாதோ நாமகீர்த்தி:ஸங்கேதாதாவபீரிதா ||
(பாகவத தாத்பர்ய)

ஏதாவது ஒரு குறியீட்டினால் ஸ்ரீஹரி நாமத்தை கூறினாலும் அந்த பக்தனுக்கு, நாமஸ்வாமியானவன் ஸ்ரீஹரியே என்னும் சிந்தனை உருவாகிறது என்று சொல்லி, ‘அபக்தோதாஹ்ருதம் நைவ பலதாத்ரு பவிஷ்யதி’ -- அதாவது, அ-பக்தனால் (ஸ்வரூபத்திலேயே பக்தி இல்லாத தமோ யோக்யனால்) சொல்லப்படுபவதான ஸ்ரீஹரி நாமம் (குறியீடு, கேலியாக சொல்லப்பட்ட நாமங்கள்) பலன்களைக் கொடுப்பதிலை’ என்றும் சொல்லியிருக்கிறார்.

* எந்த தம் ஞானத்தினால், இந்த கிரந்தத்தின் அடுத்த பத்யங்களால் அனைத்து துர்மதங்களையும் கண்டித்து சித்தாந்தத்தை நிறுவுகிறாரோ, அந்த ஞானம் ஸ்ரீஹரி கொடுத்தது என்னும் அனுசந்தானத்தினை ஸ்ரீவாதிராஜர் கொண்டிருக்கிறார் என்பதை ‘கரெதென்ன பரெதெ தத்வகள’ என்னும் இந்த பத்ய சொற்கள் குறிக்கின்றன.

ஆசார்யசைத்ய வபுஷா ஸ்வகதிம் வ்யனங்க்ஷி (பாகவத 11-19-6)

என்று, ஜகத்குருகளான சித்தாபிமானி பிரம்மதேவனின் அந்தர்யாமியான ஸ்ரீவாசுதேவனே அனைவருக்கும் ஸ்வயோக்ய ஞானபூர்த்தியை கொடுக்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வகுருகளின் சித்தத்தில் சித்தாபிமானியாக இருக்கும் பிரம்மன் ‘ஸாதாரண’ (சர்வலோகத்தின்) குரு எனப்படுகிறார். பிரம்மாந்தர்கத வாசுதேவனே அனைவரின் முக்ய குரு.

**தே$^3$ஹவில்லதெ$^3$ பே$^3$ரெ ஜீவவில்லெம்ப$^3$னெ**
**மோஹத$^3$ நின்ன ஹெண்ட$^3$தி ஸாயலேதகெ**
**ஹாஹா எந்த$^3$ளுவெ வாதி$^3$**

**நேஹபாதுரவாத$^{3}$ பூர்வகாயக்கெ**
**நு ஹானி ப$^{3}$ந்தி$^{3}$து பேளா**
**பாஹுக$^{3}$ளிந்த$^{3}$த$^{3}$னப்பி ரமிஸபே$^{3}$கு**
**நீ ஹேளித$^{3}$ ப$^{1}$ந்த$^{2}$கெ**
**ஸ்ரீஹயவத$^{3}$ன இந்த$^{1}$ல்லதி$^{3}$த்$^{3}$த$^{3}$ரெ நகு$^{3}$வ**
**ஈ ஹத$^{3}$னரியத$^{3}$வன மத$^{1}$ து$^{3}$ர்மத**
**ஸாஹஸ ஸாகு ஸாகு ||2**

தேஹவில்லதெ - தேகத்தை விட்டு. பேரெ - தேகத்திலிருந்து வேறுபட்ட. ஜீவவில்லெம்பனெ - 'ஜீவ' என்பதில்லை என்னும். வாதி - வாதியே. (ஹே சார்வாகனே). மோஹத நின்ன ஹெண்டதியு - அன்பு நிறைந்த உன் மனைவி. ஸாயலு - இறந்தால். ஏதகெ - எதற்காக. ஹா ஹா எந்தளுவெ - ஐயோ என்று ஏன் அழுகிறாய்? நேஹபாதுரவாத - உன் அன்பிற்கு பாத்திரனான. பூர்வகாயக்கெ - (இறப்பதற்கு) முன்பு இருந்த தேகம். ஏனு ஹானிபந்திது பேளா - அழிந்திருந்ததா? சொல், (உன் மனைவி இறந்தபிறகும் அவளின் தேகம் இருந்தே இருக்கிறது அல்லவா? நீ ஹேளித பந்தகெ - உன் மதத்தை பின்பற்றினால் (நீ சொல்லும் மதத்தை நீ சரியானது என்று அறிந்தால்). பாஹுகளிந்ததனஷ்டி ரமிஸபேகு - உன் தோள்களால் அந்த இறந்த தேகத்தை கட்டிப்பிடித்து சுகப்பட வேண்டும். இந்தல்லதித்தரெ - இவ்வாறு இல்லையெனில் (இவ்வாறு பிணத்தை கட்டிப்பிடித்து, இறக்கும் முந்தைய நிலையைப் போல சுகப்படவில்லை எனில்). ஸ்ரீஹயவதன - ஸ்ரீஹரி (பகவந்தன் - ஸ்வாமி). நகுவ - (உன் நிலையைக் கண்டு) சிரிக்கிறான். ஈ ஹதன - இவ்வாறான உண்மை நிலையை. அரியதவன மத - அறியாதவனின் மதம். துர்மத - துஷ்ட மதமே ஆகிறது. (பொய் என்றே ஆகிறது). ஸாஹஸ ஸாகு ஸாகு - (தேகத்திலிருந்து வேறுபட்ட ஜீவனே இல்லை என்று சொல்லும் இந்த பைத்தியக்காரத்தனத்தை விடு விடு (நிறுத்து).

* இந்திரியங்களால் தெரியப்படாத அதிர்ஷ்ட, ஜீவ, பரமாத்ம முதலான வஸ்துகளை மற்றும் வேதாதி ஆகமங்களின் பிரமாணங்களை, அவற்றிலிருந்து தெரியப்படும் தர்ம அதர்மங்களை (புண்ய பாவங்களை) பின்பற்றுவது, ஆத்ம

உத்தாரத்திற்கும், லோக கல்யாணத்திற்கும் உத்தம சாதன என்பதையும் அங்கீகரிப்பது 'ஆஸ்திக்ய' ஆகிறது. நாத்திகவாதிகளில் முக்கியமானவர்கள் சார்வாகர்கள். இவர்கள், பிரத்யட்சம் மட்டுமே பிரமாணம் என்று ஒப்புக் கொள்கிறார்கள். தேகத்திலிருந்து வேறுபட்ட ஜீவனை ஒப்பாமல், நவீன ஷுத்த-ஜடவாதிகளைப் போல, நிர்ஜீவ பஞ்சபூதங்களின் கலவைகளால் மனிதன் முதலான பிராணிகளின் தேகங்களில் பற்பல வித ஞானாதி சக்திகள் உண்டாகிறது என்கிறார்கள்.

முந்தைய கால சார்வாகர்கள், 'ஜகத் யாரிடமிருந்து பிறந்தது என்று யாரால் சொல்ல முடியும்' என்று அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய ரிக்வேத வாக்கியத்தையும், 'பிராணிகள் தின்னும் அன்னத்தின் சூக்ஷ்ம பாகமே மனஸ்ஸாக பரிணமிக்கிறது' என்று சொல்லும் சாந்தோக்ய வாக்கியங்களையும், புராணங்களில் அங்கங்கு காணப்படும் நாத்திக வாக்கியங்களையும் மேற்கோள் காட்டி, பாரதத்தில் சாமான்ய மக்களிடையே வெகுவாக பரவியிருக்கும் சாஸ்திரத்தின் மேலான நம்பிக்கையை வைத்து, தமது மதம் சாஸ்திரத்திற்கு தக்கவாறே இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு, மக்களை ஏமாற்றி வருவது தெளிவாக புரிகிறது.

அப்படி இவர்கள் மேற்கோள் காட்டும் ஆகம வாக்கியங்களை, அதன் தாத்பர்ய அர்த்தங்களை சரியாக புரிந்து கொள்ளாமல், தவறான அர்த்தங்களால் சாதாரண மக்களை மயக்குவதான மதம் இது. இந்த மதத்தை முதன் முதலில் நிராகரிப்பது அனைத்து ஆத்திக மதங்களின், அதிலும் பரம-ஆத்திகமான தத்வவாதிகளின் (வைஷ்ணவ சித்தாந்த பிரதிஷ்டாபகரின்) முக்கிய கடமையாக இருக்கிறது. சார்வாக மதம் என்பது ஒரு சாஸ்திரமே அல்ல. விஷய பிரயோஜன இல்லாத, தர்ம - அதர்மங்களின் ஒரு சூழ்நிலையையே அழித்து, சமூகத்தில் நிலவும் அசாதாரண சூழலுக்கு காரணமான இந்த துர்மதத்தின் கண்டனையை 'ஸ்ரீமத்விஷ்ணு தத்வ நிர்ணய'த்தில் ஸ்ரீமதாசார்யர், மிகவும் விளக்கமாக செய்திருக்கிறார்.

'இது எனக்கு இதம்' என்னும் ஞானத்தினால் மட்டும், அப்போதே பிறந்த குழந்தையானது முலைப்பால் குடிக்கிறது. இதனை,

பிறரைப் பார்த்து செய்கிறது என்றோ, தாய் சொல்லிக் கொடுத்ததால் செய்கிறதோ என்று சொல்ல முடியாது. எப்படியாக தர்க்கம் செய்தாலும், ஜென்மாந்தரத்தின் அனுபவத்தினாலேயே (பூர்வஜென்ம சம்ஸ்காரத்தினாலேயே) இது சாத்தியம் என்றும், இதனாலேயே ஞானக்ரியா ஷக்திகள் உள்ள தேகத்திலிருந்து வேறுபட்ட சக்தி ஒன்று இருந்து, அது பற்பல தேகங்களைப் பெற்று, ஸ்வபரிபூர்ணதையின் திசை நோக்கி செல்கிறது என்றும் ஒப்புக் கொள்ளவே வேண்டியிருக்கிறது.

இத்துடன், மனுஷ்ய தேகத்திற்கு காரணமான புருஷனனின் ரேதஸ்ஸினைக் கொண்ட அதிர்ஷ்டம் கொண்ட ஒரு ஜீவசேதனனையும் அங்கீகரிக்க வேண்டியிருக்கிறது. சந்தான பிராப்திக்காக ஸ்த்ரியர்களில் ரேதஸ் காரணம் என்று சொல்கிறது. 'ரேதஸ் சேர்ந்தால் சரீரம். இல்லையெனில் இல்லை' என்னும் அனுமானத்திற்கு பிராமாண்யத்தை சொல்கிறது.

இறந்த சரீரத்தில் விடப்பட்ட ரேதஸ்ஸினால் சரீரம் பிறப்பதில்லை. ஜீவன் இருக்கும் ஸ்த்ரீ தேகத்தில்கூட அனைத்து காலங்களில் அனைவரிடமும் சரீரம் பிறப்பதில்லை. ஆகையால், ரேதஸ்ஸினை சேர்ந்த ஜீவன் ஒருவன் இருக்க வேண்டும். இப்படியான பற்பல உதாரணங்களால் நாத்திக வாதங்களை ஏற்றுக் கொள்ள முடிவதில்லை என்று புரிகிறது. இப்படியான உதாரணங்களுடனான விளக்கங்களை பாரதாதி கிரந்தங்களில் பார்க்கிறோம். இவற்றை தொகுத்து, ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதர் தம் ஸூத்ர பாஷ்யத்தில்:

ரேதோதாதுர் வடகணிகா க்ருததோமாதிவாஸனம் |
ஜாதிஸ்ம்ருதிரயஸ்காந்த: ஸூர்யகாந்தோऽம்புபக்ஷணம் |
ப்ரேத்யபூதாப்யயஸ்சைவ தேவதாப்யுபயாசனம் |
ம்ருதே கர்ம நிவ்ருத்திஸ்ச ப்ரமாணமிதி நிஸ்சயம் |
இதி மோக்ஷதர்மவ சனான்ன நாஸ்திக்யவாதோ யுஜ்யதே ||

என்று, நாத்திக வாதத்தை ஏற்றுக் கொள்ள முடியாது என்று நிராகரிக்கிறார். மானவனின் ஆசை, விருப்பங்கள், அன்பு, த்வேஷம், ஆகிய பற்பல குணங்கள் உண்டாவதற்கு, ஆதாரபூர்வமான எந்த

காரணத்தையும், சார்வாக மதம் (மற்ற நாத்திக மதங்கள் கூட) சொல்வதில்லை. ப்ரியமான மனைவி இறந்தாலும், சார்வகன் அழுவதற்கு காரணமே இல்லை. ஏனெனில், ப்ரிய மனைவியின் தேகம் முதலில் இருந்ததைப் போலவே இப்போதும் இருக்கிறது.

அனைவரின் அனுபவத்தினால் தெரிய வரும் லௌகிக விஷயங்களுக்கும், சார்வகனின் மதம் எதிரானது என்பதை இதிலிருந்து அறிய வேண்டும்.

**எல்லவித்3த3ரு ஷ்வாஸபொந்தி3ல்லவெம்ப3னெ**
**ப3ல்லித3 டொ3ம்ப3ன ஸதி பவனவ கட்டி**
**நல்லி வாக3ம்ப3ரதி3**
**குள்ளிர்த்த3 தா3ரவு கடி3த3 மேலெ தா**
**நில்வளு சலிஸத3ந்தெ**
**தொல்லகி3த3ஸு மத்ததெ3ல்லதெ3ம்ப3 யுக்தி**
**ஸல்லத3ல்ல நினகெ3**
**ப3ல்லவதூ4தரு ப்ராணமார்க்க3வ தடெது3**
**செல்வஹயவத3னன மெச்சிஸி ஷைலாக்3ரதி3**
**தலெயூரி தபிஸரெ ||3**

எல்லவித்தரு - அனைத்தும் (இறப்பதற்கு / அழிவதற்கு முன்னால் இருப்பதைப் போல இருந்தாலும், ஷ்வாஸவொந்தில்லவு - மூச்சு விடுவதில்லையே. எம்பனெ - (சார்வகன் இவ்வாறு) கூறினால், (மூச்சு இல்லாததால் அழுகிறேன் என்று கூறினால்). பல்லித - சிறந்தவனான. டொம்பன ஸதி - கழைக்கூத்தாடியின் மனைவி. பவனவ கட்டி - மூச்சை அடக்கி. அம்பரதி - ஆகாயத்தில். நல்லிவாக - நடனம் ஆடும்போது. குள்ளிர்த்த தாரவு - அங்கு அமர்ந்து (அல்லது நின்று) நடனமாடும் கயிறு. கடிர்த்த மேலெ - அறுந்தபிறகு. தா நில்லளு சலிஸதந்தெ - தான் தடுமாறாமல் நிற்கிறாள் (மூச்சை அடக்கியிருந்ததால், மற்றவர்களால் முடியாத இந்த செயலை செய்கிறாள்). [அப்போது சார்வகனின் மதத்தைப் போல அந்த கூத்தாடி அழவேண்டுமல்லவா? ஆனால் அவன் அழுவதில்லை]. (பிறகு மூச்சு விடும் அந்த கூத்தாடியின் மனைவிக்கு). தொல்லகிதஸு - (தேகத்தை) விட்டுச் சென்ற உயிர். மத்ததெல்லேது - திரும்ப அது எங்கிருந்து வந்தது? (ஆகையால்,

மூச்சு விடாதிருக்கும் காரணத்தினால் இறந்த உடலை அலங்கரிப்பது என்னும் பேச்சு சரியல்ல). எம்ப யுக்தி ஸல்லதல்ல நினகெ - (உன் மனைவியின் தேகம் முதலில் இருந்ததைப் போல மூச்சு விடுவதில்லை என்னும் காரணத்தால் அழுகை என்னும்) நிலை உன் மதத்திற்கு பொருந்துவதில்லை.

அல்லது, தேகத்திற்கு வெளியே ஜீவன் என்று ஒன்று இல்லை என்று சொல்லும் உன் மதத்திற்கு பொருந்துவதில்லை. பல்லவதூதரு - அறிந்த யோகிகள். பிராணமார்க்கவ தடெது - பிராணாயாமாதி யோக மார்க்கத்தினால் பிராணவாயுவை நிறுத்தி, செல்ல ஹயவதனன - ஸுந்தரனான ஸ்ரீஹயக்ரீவனை. மெச்சிஸி - (தவத்தினால்) திருப்திப்படுத்தி. ஷைலாக்ரதி - மலை உச்சிகளில். தல்லெயூரி - தலைகீழாக நின்று. தபிஸரெ - தவம் செய்வதில்லையா? [தபஸ்விகளைப் பார்த்து, அவர் மூச்சு விடுவதில்லை என்று யாரும் துக்கப்படுவதில்லை. தேகத்தில் மூச்சு விடாமல் இருந்தால் மரணம் என்று அல்ல. ஜீவன் என்பது தேகத்திலிருந்து வேறுபட்டதே ஆகும்.]

** மனைவி மரணமடைந்தால் சார்வகனும் அழுகிறான். தன் மதத்தில் தனக்கு நம்பிக்கை இருந்தால், அவன் அழக்கூடாதல்லவா? தேக-பின்ன-ஜீவ இல்லை என்று சொல்லு தான், இறந்த உடலில் மூச்சு இல்லாத காரணத்தால், முதலில் இருந்ததைப் போல அந்த தேகத்திலிருந்து சுகங்கள் கிடைப்பதில்லை என்று வாதித்தால், அந்த வாதங்கள் வெல்வதில்லை என்று இந்த பத்யத்திலிருந்து விளக்குகிறார்.

சிறிது காலம் மூச்சை அடக்கி தன் செயல்களை செய்யும் கூத்தாடிப் பெண்ணின் உதாரணத்தினாலும், நீண்ட காலம் மூச்சினை அடக்கி, தலைகீழாக நின்று தவம் செய்யும் முனிவர்களின் உதாரணத்தாலும், அந்த வாதத்தின் தவறினை எடுத்து உரைக்கிறார்.

**ஸ்யாதெ[3]ம்ப[3] வாதி[3] நாவெம்ப[3] ப்ரமேயவ**
**ஸாதி[4]ஸபே[3]காகி[3] வாதி[3]பெயெந்தோ**
**பா[3]தி[4]ப மாதனக்ஞா**

**போ3த4 நிக்3ரஹ தானெ பா3ரதெ3 பி3ட3து3**
**மொத3லிகெ3 ஸோதெ1யல்ல**
**ஆதி3யனரியத3வன மத1வெந்தோ1**
**ஈ த4ராந்தகெ மெச்சரு**
**வேத3வனொயிது3 விதி4கெ3 போ3தி4ஸித3 து3**
**ர்வாதி3க3ஜேந்த்3ர பஞ்சானன ஹயவத3**
**நாதி3 நாராயணனு ||4**

ஸ்யாதெம்ப வாதி - ‘ஸ்யாத்’ (ஆகட்டும்) என்று சொல்லும் ஹே வாதியே. நாவெம்ப ப்ரமேயவ - நாம் சொல்லும் பிரமேயத்தல். ஸ்யாதென்னபேகாகி - ‘ஆகட்டும்’ என்று சொல்ல வேண்டியிருப்பதால், ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதால்). பாதிப மாதின - (உன் வாதத்தையே) எதிர்க்கும் வாதங்களை. வாதிஸுவெயெந்தோ - எப்படி எதிர்ப்பாய்? (வாதத்தினால் எப்படி எதிர்கொள்வாய்?). அக்ஞ - ஹே மூடனே. அபோதநிக்ரஹ - ‘அபோதகத்வ’ என்னும் நிக்ரஹஸ்தானம் (உன் வாதத்திற்கு யதார்த்தஞான ஸாதகத்வ இல்லை என்னும் தோஷம்). தானெ பாரதெபிடது - ஸ்வயம் வராமல் இருக்காது (கண்டிப்பாக வரும்). அதாவது, ஸ்வயம் ஸித்தவாகுத்ததெ - உன் வாயை கட்டுகிறது. மொதலிகெ - துவக்கத்திலேயே (வாதத்திற்கு வாய் திறக்கும்போதே). ஸோதெயல்ல - தோற்றுப் போய்விட்டாயே. ஆதியனு - இந்த உலகின் ஸ்ருஷ்டி காரணத்தை. அல்லது, உண்மையான மூலத்தை. அரியதவன - அறியாத உன். மதவ - மதத்தினை. ஈ தராந்தகெ - பிரளயத்தின் வரைக்கும் (பிரளய காலத்தின் வரைக்கும் வாதித்தாலும்). மெச்சரு - (விவேகிகள்) ஒப்புவதில்லை. துர்வாதி கஜேந்த்ர பஞ்சானன - துர்வாதிகள் என்னும் மத யானைகளுக்கு சிம்மத்தைப் போல. ஹயவதனாதி நாராயணனு - மூல நாராயணாபின்னன், வேதத்தை. ஒயிது - கொண்டு வந்து (வெளிப்படுத்தி). விதிகெ - பிரம்மனுக்கு. போதிஸித - உபதேசித்தான். (ஆகையால் இதனை மிகவும் முக்கிய பிரமாணம் என்று சொல்ல முடியாதா என்ன?).

** இந்த பத்யத்தினால் ஷாஸ்திர பிரபஞ்சத்தில் ‘ஸ்யாத்வாதி மத’ என்று பெயர் பெற்ற ஜைன மதத்தை கண்டித்திருக்கிறார். ஜைன மதத்தின் முக்கிய பிரமேயங்களை இவ்வாறு தொகுக்கலாம்.

மோட்ச மார்க்கம் என்பது, ஸம்யக் ஞான, ஸம்யக் தர்ஷன மற்றும் ஸம்யக் சாரித்ர்யங்கள் என்னும் மூன்று ரத்னரூபங்களைக் கொண்டவை. சேதன அசேதனாத்மகமான இந்த உலகிற்கு ஈஷ்வரன் இல்லை. உலகின் ஸ்வரூபம் ஏழு விதங்களால் நிரூபிக்கப்படுகிறது.

அவை: 1. ஸத் 2. அஸத் 3. ஸதஸத் 4. ஸதஸத் விலக்ஷண 5. ஸத் ஆனாலும் ஸத்விலக்ஷண 6. அஸத் ஆனாலும் அஸத் விலக்ஷண. 7. ஸதஸத் ஆனாலும் ஸதஸத் விலக்ஷண. என ஜகத்தினை - பரஸ்பரம் எதிர்மறைகளான ஸத்ய - அஸத்ய முதலான காரணங்களால் உருவானது என்று நிரூபிப்பது, சரியல்ல என்பது மட்டுமல்ல, அது சாஸ்திரத்திற்கு எதிரானதும் ஆகிறது. ஸத் என்றால் அது ஸத் என்றும், அஸத் என்றால் அது அஸத் என்றும் சொல்வதானால், அப்படியே ஸ்யாத் என்பது ஸ்யாத் ஆகிறது என்று சொல்வதால், 'ஸ்யாத்வாதி மத' என்னும் காரணப் பெயர் இதற்கு வருகிறது. 'ஸப்தபங்கி வாத' என்றும் இதே மதத்திற்கு பெயர் இருக்கிறது.

(பிரம்ம சூத்ரங்களின் 2-2-10 நைகஸ்மின் அதிகரணத்தின் விவரங்களை பார்க்கவும். 'ஸ்யாத்வாதிமதம் நிராகரோதி - ஸத்ஸ்யாத ஸத்ஸ்யாத்ததோ ந்யச்ச ஸ்யாதித்யே தன்மைகஸ்மின்யஜ்யதே' -- பாஷ்ய).

* தத்வவாதிகள் (மாத்வர்கள்) ஜகத்தினை ஸத்ய என்று கூறினால், அதுவும் ஏழு விதங்கள் ஒன்றாக இருப்பதால், ஜைன மதத்தவர்கள் இதனை ஒப்புக் கொள்ளவே வேண்டும். அப்போது முன்பு கூறிய வாதமே நிற்கிறது. தர்க்க ஷாஸ்திரம் நிரூபிக்கும் அனுமான தோஷங்கள் அனைத்தும் 'விரோத (எதிர்ப்பதம்) மற்றும் அஸங்கதி' என்ற இரு விஷயங்களில் அடங்கிவிடுகிறது.

விரோதத்தை பிரதிக்ஞா விரோத, ஹேது விரோத மற்றும் த்ருஷ்டாந்த விரோத என்று மூன்று விதமாக பிரிக்கலாம். பிரதிக்ஞா விரோதமானது, பிரமாண விரோத மற்றும் ஸ்வவசன விரோத என்று இரு விதம். தான் நிரூபிக்க வந்திருக்கும் பிரமேயத்திற்கு எதிராக இருக்கும் பிரமேயத்தை ஒப்புக் கொள்வது

'அப சித்தாந்தம்' எனப்படுகிறது. தன் வாதத்திலேயே பரஸ்பரம் எதிர்மறை விஷயங்கள் இருந்தால் அது 'ஜாதி1' எனப்படுகிறது. பர வாதத்தை எதிர்ப்பது 'நிக்ரஹ'. கண்டனத்திற்கு காரணமாகும் தோஷங்கள் 'நிக்ரஹஸ்தான' எனப்படுகிறது.

ஜகத்தினை சப்த-பிரகாரங்கள் என்று நிரூபிக்கப் புறப்பட்டு, அதனை ஸத்ய என்று ஒப்புக் கொண்டால், ஸ்வ வசன விரோத என்னும் தோஷம், அந்த வாதத்தின் நிக்ரஹ ஸ்தானம் ஆகிறது. ஸப்த பிரகாரங்கள் உள்ளது என்பது பிரத்யட்சத்திற்கு விரோத மற்றும் அப்ராமாணிகம் ஆகிறது. இவ்வாறு ஜைன மதம் ஸத்யுக்திகளை எதிர்க்க முடிவதிலை என்று ஒரு உதாரணத்தினால் சொல்கிறார். வேறு பல உதாரணங்களை 'நைகஸ்மின் அதிகரண'த்தில் பார்த்து அறிந்து கொள்ளலாம்.

** ஜைன மதம் ஒப்புக் கொள்ளாத வேத பிராமாண்யத்தைக்கூட இந்த பத்யத்தில் யுக்தியினால் நிரூபித்திருக்கிறார். ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் வேதங்கள் ஸ்ரீஹரியினால் சதுர்முக பிரம்மனுக்கு உபதேசிக்கப்பட்டு, பரம்பரையினால் உலகத்தில் பரப்பட்டது என்னும் வாதத்தினால் வேத பிரமாண்யத்தை ஸாதிக்கிறார். வேத பிரமாண்யத்தை சாதிக்கும், அபௌருஷேயத்வ, வர்ண நித்யத்வ, ஆகிய பற்பல யுக்திகளில், விரிஞ்சியால் உபதேசிக்கப்பட்ட பரம்பரையைக் கொண்டது என்னும் யுக்தியும் ஒன்று. பாமர மக்களுக்கும் புரியுமாறு இருக்கும் சுலபமான யுக்திகளாலேயே துர்மதங்களை கண்டிப்பது இந்த கிரந்தத்தின் சிறப்பு ஆகும்.

**தானோர்வனைவராசார்யரெம்ப3 மத**
**ஹீனவெம்ப3னு மத்தொப்3ப3ன நுடியெந்தோ**
**நானாயுக்திய மாடு3வ**
**ஜனன மரண ஹஸிவு த்ருஷெ நானா வ்ய**
**ஸன ஸர்வரிகெ3 சரி**
**மானவரெல்லரு மருளரு நானே ப்ர**
**வீணனெந்த3ரெ நக3ரெ**
**ஆனெம்ப3ஹங் க்ருதியிந்த3 ஜக3தொ3ளு**
**நீனெ ஹீனனாஹெ ஹயவத3னன ப3ல்ல**
**ஜாணஜனர கேளு ||5**

தானோர்வனு - தான் ஒருவன் (தனியாக இருக்கிறான்). ஐவராசார்ய ரெம்பமத - ஐந்து பேர் மதாசார்யர்கள் கூறும் அபிப்பிராயங்களை. ஹீனவெம்பனு - குறைவு என்பவன் (ஒப்புக் கொள்ளக்கூடியது அல்ல என்று புறக்கணிப்பவன்). மத்தொப்பன - இன்னொரு மதத்தின். நுடியு எந்தோ - வாதம் எப்படியாவது இருக்கட்டும் (அவரது அபிப்பிராயம் என்னவாவது இருக்கட்டும்). நானா யுக்திய மாடுவ - (அதனை சரி என்று ஒப்புக் கொள்ளாமல்) பல வழிகளில் எதிர்த்து வாதிக்கிறான். ஜனனமரண ஹஸிவு த்ருஷி - பிறப்பு, இறப்பு, பசி, தாகம் ஆகிய. நானாவ்யஸன - பற்பல துக்கங்கள். ஸர்வரிகெ ஸரி - ஸர்வ பிராணிகளுக்கு பொதுவானதே. மானவரெல்லரு - (பிரம்மாதிகளிலிருந்து துவங்கி) மனிதர்கள் அனைவரும். மருளரு - அஞ்ஞானிகள் என்று, நானே - தான் மட்டும். பிரவீணனெந்தரெ - அனைவரையும்விட அதிகமான ஞானம் உள்ளவன் என்றால். நகரே - (அறிஞர்கள்) சிரிக்க மாட்டார்களா?. ஆனெம்ப அஹங்க்ருதியிந்த - நான் என்னும் கர்வத்தினால். ஜகதொளு - உலகில். நீனே - நீ மட்டும். ஹீனனாஹெ - துச்சன் எனப்படுகிறாய். ஹயவதனன பல்ல - ஸ்ரீஹரியை அறிந்திருக்கும். ஜாணஜனர கேளு - ஞானிகளிடம் கேட்டு (உண்மையை) அறிந்து கொள்.

**தானொப்$^3$ப$^3$னைது$^3$ மதஜனரொட$^3$னெ**
**ரணரங்க$^3$தி நிந்து ஜயிஸுவுதெ$^3$ந்தை$^1$ய**
**நானாவசனங்க$^3$ளு**
**நானாயுக்திக$^3$ளொப்$^3$ப$^3$ன மாதினிந்த$^3$லெ**
**ஹீனவாகி$^3$ போபு(வெ)**
**அனாதி$^3$ய வேத$^3$வெம்ப$^3$ ப$^3$லு ப்ர**
**மாணனொல்லத$^3$வகெ$^3$ காணதெ$^3$**
**மேலண பத$^3$விய நொரெவ ப்ர**
**வீணதெ பா$^3$ரதா$^3$கி$^3$ ஹயவத$^3$ன**
**தா நிக$^3$மவ தந்த$^3$ ||6**

தானொப்பனு - ஒருவனான தான் (தனியாக). ஐது மதஜனரொடனெ - ஐந்து மதங்களின் மக்களுடன் (ஐந்து மதாசார்யர்கள் அல்லது அந்த மத சித்தாந்தங்களில் அறிஞர்களாக இருப்பவர்களுடன்). ரண்ரங்கதி நிந்து - (வாத) போரில் எதிர்கொண்டு.

ஜயிஸுவுதெந்தய்ய - ஜெயிப்பது என்பது எப்படி சாத்தியம்? (யாரோ ஒருவரால் ஜெயிக்கப்படுகிறான்). நானா வசனகளு - பல (ஞானிகளின்) வாக்கியங்கள். நானா யுக்திகளு - (அவர்களால் சொல்லப்படும்) பலவித யுக்திகள். ஒப்பன மாதினிந்தலெ - ஒருவனின் வாதங்களால் (ஸ்வபுத்தியின் வாதங்களால் மட்டும்). ஹீனவாகி போபுதெ - நிராகரிக்கப்படுகிறதா (நஷ்டமாகிறதா? / அழிகிறதா? - இல்லை). அதுமட்டுமல்லாமல், பலுப்ரவீணதெ பாரதாகி - யாரொருவருக்கும் ஸர்வக்ஞதெயை கொடுப்பதற்கு வருவதில்லை என. ஹயவதன - ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி. தானு - தானே. அனாதியாத - நித்யமும் அபௌருஷேயமும் ஆன. நிகமவ - மிகவும் சிறந்த பிரமாணபூதமான. வேதவெம்புத - வேதம் என்பதை. தந்த - (ஸ்ருஷ்டியின் துவக்கத்தில்) வெளிப்படுத்தினான் (சதுர்முக பிரம்மதேவனுக்கு உபதேசம் செய்தான்).

** ப்ரத்யக்ஷத்துடன் வேதங்களையும் பிரமாணங்கள் என்று அங்கீகரித்து, ஸித்தாந்தங்களை ஏற்படுத்திக் கொண்ட மதங்கள் 'தர்ஷன' என்று சொல்லப்படுகின்றன. இவற்றில் முக்கியமாக இருக்கும் ஆறு தர்ஷனங்கள் எவை என்றால்:

1. கௌதமரின் 'நியாய'.
2. காணாதரின் 'வைஷேஷிக'.
3. கபிலரின் 'ஸாங்க்ய'.
4. பதஞ்சலியின் 'யோக'.
5. ஜைமினியின் 'பூர்வ மீமாம்ஸா'.
6. பாதராயணரின் 'உத்தர மீமாம்ஸா'.

இவை அந்தந்த மதாசார்யரின் பெயர்களுடன் நிரூபிக்கப்படுகிறது. கௌதம, காணா போன்ற பெயர்கள் அந்தந்த மதாசார்யரை குறிக்கிறது. இவற்றில் நியாய மற்றும் வைஷேஷிக தர்ஷனங்கள் ஒரு மரத்தின் இரு கிளைகளைப் போல தெரிகிறது. அவை வெளிப்படுத்தும் பிரமேயங்களில் ஸாம்யமே அதிகமாக தெரிய வருகிறது. இந்த தர்ஷனங்களை நிரூபிக்கும் கிரந்தங்களில் இந்த இரு தர்ஷனங்களின் சாரமும் ஒன்றாக விவரிக்கப்பட்டுள்ளது என்பதை பார்க்கிறோம்.

இரு தர்ஷனங்களும் அதிகமாக நியாயத்தை (தர்க்கத்தை) அனுசரித்து, சித்தாந்தத்தை விளக்குவதால், இந்த இரண்டினையும் ஒன்றே என்று சிந்தித்து, இந்த கிரந்தத்தின் 5 மற்றும் 6ம் பத்யங்களில், ஒன்றாக ஐந்து மதங்கள் என்று விளக்கப்பட்டுள்ளது. மற்றும் பத்ய 4ல் சொல்லப்பட்ட ஜைன மதமும், அடுத்து வரும் 7ம் பத்யத்தில் சொல்லப்படும் பௌத்த மதமும், நியாயத்தையும், வேதத்தையும் அனுசரித்து, சித்தாந்தங்களை விளக்கும் இந்த ஐந்து மதங்களையும் (ஷட் தர்ஷனங்களை) எதிர்ப்பதற்கு சாமர்த்தியம் இல்லாதவை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஷட் தர்ஷனங்கள் ஆத்திக மதங்கள் என்று புகழ் பெற்றிருப்பவை. வேத பிராமாண்யத்தை அங்கிகரிப்பதால் வைதிக மதங்கள் என்றும் அழைக்கப்படுபவை.

** சார்வக முதலான நாத்திக மதங்களில் பற்பல பேதங்கள் இருப்பதைப் போல, ஆத்திக மதங்களும் வேறுபாடுகளைக் கொண்டிருக்கின்றன. இவை அனைத்தும், வேதங்களுக்கு உட்பட்ட பிராமாண்யத்தை அங்கிகரிப்பதில்லை. மேலும் சிலர், தம் சித்தாந்தங்களுக்கு சாதகமாக இருக்கும் பாகங்களை மட்டும் பிரமாணம் என்று ஒப்புக் கொள்கிறார்கள்.

இன்னும் சிலர், வேதங்களில், அங்கங்கு காணப்படும் பரஸ்பர எதிர் கருத்துகளை பரிகரிக்க முடியாமல், ப்ரத்யக்ஷ, அனுமானாதி மற்ற பிரமாணங்களுக்கு எதிரானவை என்று தெரியும் வேத பாகங்களையும், பிரமாணங்கள் இல்லை என்று சொல்லி அவற்றை அவர்கள் ஒப்புக் கொள்வதில்லை. மேலும் சிலர், முழுமையான வேதமும் பிரமாணமே என்று ஒப்புக் கொண்டு, தாமே உண்மையான வேத (பிராமாண்ய) வாதிகள் என்று சொல்லிக் கொண்டவாறு, வேத பிரதிபாத்ய ஸத்யத்தை அறிந்து நிரூபிக்கிறார்கள்.

வேதபிரதிபாத்யனான ஸ்ரீஹரி மன வசனங்களுக்கு அறியப்படாதவன் என்றும், அகண்ட, நிர்குண, நிராகாரன் என்றும் வசனரூபத்தில் இருக்கும் வேதம் பரதத்வத்தை அறிய வைக்காது என்றும் வாதிக்கின்றனர். மஹாவாக்கியங்கள் என்று தாம் அழைக்கும் 'தத்வமஸி' முதலான சில வேத வாக்கியங்களின்

ஆதாரத்தினால், பிரம்மன் ஒருவனே ஸத்ய - மற்ற அனைத்தும் மித்யை என்று சொல்கின்றனர். இவர்களே மாயாவாதிகள் என்று புகழ்பெற்ற ஜீவ பிரம்ம ஐக்யவாதிகள் ஆவர்.

தத்வவாதிகளோ (மாத்வ மதத்தை சேர்ந்தவர்கள்) வேதங்கள் அனைத்தும் முக்கியமாக பரமாத்ம ஸ்வரூபத்தையே (அவனின் மகிமைகளையே) விளக்குகின்றன என்றும், அமுக்கியமாக பரமாத்மனின் பிராப்திக்கு அவசியமான தர்ம ஞானத்தையும் பிற தேவதா பிரஸன்னதையின் ஸாதனங்களையும் நிரூபிக்கின்றன என்பதை அறிந்து, ஸத்யத்தில் வியாவஹாரிகாதி பிரகாரங்கள் ஆதாரமற்றவை என்றும் சொல்கின்றனர். இந்த வெவ்வேறு மதங்களின் சித்தாந்தங்களையும், அவற்றை எந்த பிரமாணங்களால் எப்படி நிரூபிக்கப்படுகின்றன என்பதையும் ஆழமாக சாஸ்திரங்களைப் படித்து அறிந்து கொள்ள வேண்டும்.

** வெறும் யுக்திகளால் (reason logic) வாதிப்பவர்கள், தாமே வாதத்தில் சிறந்தவர்கள் என்னும் கர்வத்தைக் கொள்ளாமல், மற்ற மனிதர்களும் யுக்தி விஷயங்களில் அவரவர் தகுதிகளுக்கேற்ப சமர்த்தன் என்னும் லோகானுபவத்தை கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது அவசியம் என்று 5ம் பத்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ‘அனாதி’ என்றதால் அபௌருஷேயத்வ மற்றும் நித்யத்வங்களை ‘நிகம’ என்று மற்ற பிரத்யக்ஷாதி பிரமாணங்களின் உதவியை நாடும் ‘ஸ்வத:ப்ரமாண’ என்பதை, 6ம் பத்யத்திலிருந்து விளக்குகிறார்.

** ஸாங்க்ய தர்ஷனத்தைப் போல யோக தர்ஷனமும் ப்ரக்ருதி - புருஷ என்னும் தத்வங்களை ஒப்புக் கொள்கிறது. இந்த இரு தர்ஷன சித்தாந்தங்களிலும் மிக நெருங்கிய தொடர்பு கண்டு வந்தாலும், நியாய - வைஷேஷிக தர்ஷனங்களைப் போல, இரண்டையும் ஒன்றாக இணைக்க முடிவதில்லை.

யோக தர்ஷனம் - சர்வக்ஞனும், அகண்ட ஐஸ்வர்யத்தைக் கொண்டவனுமான ஈஷ்வரன் ஒருவனை ஒப்புக் கொள்கிறது. ஈஷ்வரன், எப்போதும் துக்காதி தோஷங்கள் இல்லாதவன் என்றும், துக்கங்களைக் கொண்டிருக்கும் மற்ற புருஷர்களிலிருந்து

வேறுபட்டவன் என்றும் சொல்கிறது. இந்த தர்ஷனத்தைப் போல, துக்க நிவ்ருத்தியே மோக்ஷம். முக்தியில் ஜீவன் தன்னிலிருந்து வேறுபட்ட வேறு எதையும் அறிவதில்லை.

யோகஸித்தன் இவ்வாறு இருக்கையில், யோகேஷ்வரனும் சர்வக்ஞனும் என்று சொல்லப்படும் ஈஷ்வரன், அமுக்தன் என்றால், முக்தனைவிட அதமன் என்றும்; முக்தன் என்றால், தன்னிடமிருந்து வேறுபட்ட எதையும் அறியாதவன் என்றும் தெளிவாகிறது. ஆகையால், ஈஷ்வரனை ஸர்வக்ஞன் என்று அறிவது ஸ்வ வசன விரோதம் ஆகிறது.

ஸாங்க்ய தர்ஷனமோ ப்ரக்ருதி புருஷரின் சம்பந்தம் எப்படி உண்டாகிறது, ஜட ப்ரக்ருதியானது, ஜடத்தின் உருவமாக பரிணாமம் ஆவதற்கு என்ன காரணம்? ஜகத்தின் ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு நியாமகனான ஈஷ்வரன் ஒருவன் இருக்கிறானா? என்னும் சில முக்கிய பிரமேயங்களின் விஷயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துகளைக் கொண்டுள்ளது. பஹு-பிரமாண விரோதிகளான ஸேஷ்வர, ஸாங்க்ய, நிரீஷ்வர ஸாங்க்ய என்பது ஆகும்; மற்றும் நிரீஷ்வர ஸாங்க்ய விதங்கள், இந்த தர்ஷனத்தை யோக தர்ஷனத்துடன் சேர்ப்பதற்கு சந்தர்ப்பம் கொடுப்பதில்லை.

** 5ம் பத்யத்திலிருந்து தார்க்கிகர் (நியாய தர்ஷனம்), 6ம் பத்யத்திலிருந்து யோக தர்ஷனம் ஆகியவை நிராகரிக்கப்படுகிறது என்று அறிய வேண்டும். அப்போது 'நியாய'த்தை விட்டு மற்ற ஐந்து தர்ஷனங்களை 'ஐவராசார்ய' என்றும்; 'யோக'வை விட்டு மற்ற ஐந்தை ''ஐதுமதஜனரொடனெ' என்றும்; அறிய வேண்டியிருக்கிறது.

நியாய வைஷேஷிக மற்றும் ஸாங்க்ய யோகங்கள் வைதிக மதங்கள் என்று சொல்லப்பட்டாலும், இவர்கள் யாரும் 'தத்வவாதி'களைப் போல (மாத்வர்களைப் போல) வேத பிரமாண்யத்தை முழுமையாக மற்றும் பிராமாணிகமாக (எவ்வித பிரச்னையும் இல்லாமல்) ஏற்றுக் கொள்வதில்லை ஆகையால், நல்ல நிர்ணயங்களை கண்டுகொள்வதற்கு சமர்த்தர் ஆகவில்லை.

எனவே, இந்த மதங்கள் சரியல்ல என்று சொல்வது இந்த பத்யங்களின் நோக்கம் என்று அறிய வேண்டும்.

**இத்$^{3}$த$^{3}$ தே$^{3}$வமானவர மாதினொளு**
**ஸ்ரத்$^{3}$தெ$^{4}$ய மாடு$^{3}$வரு லோகத$^{3}$வரு**
**பு$^{3}$த்$^{3}$த$^{4}$ஸ்வரூபதி$^{3}$ந்த$^{3}$**
**ஆத்$^{3}$யனாத$^{3}$ நாராயணனெ ப$^{3}$ந்தி$^{3}$ல்லி**
**பேள்த$^{3}$ ஸித்$^{3}$தா$^{4}$ந்தவனு**
**க$^{3}$த்துக$^{3}$ன்னவ மாட$^{3}$லுத்$^{3}$ப$^{4}$விஸித$^{3}$ கதெ**
**ஸித்$^{3}$த$^{4}$வாக$^{3}$லில்லவெ**
**பு$^{3}$த்$^{3}$தி$^{4}$வந்தரெல்ல பேள்த$^{3}$ பேள்த$^{3}$பரி**
**ஷுத்$^{3}$த$^{4}$ காரண ஸ்ருதியெனிப ஹயவத$^{3}$ன**
**நுத்$^{3}$த$^{4}$ரிஸித$^{3}$ வித்$^{3}$யெய ||7**

இத்த - (அந்தந்த காலத்தில்) இருக்கும். தேவமானவர - தேவ ஸ்வபாவத்தின் (அனுஷ்டானங்களை பின்பற்றுபவர்களின்). மாதினொளு - உபதேசங்களில் (நடவடிக்கைகளில்). லோகதவரு - உலக மக்கள். ஸ்ரத்தெய மாடுவரு - நம்பிக்கை வைக்கின்றனர். (இந்த சாதாரண நியமத்தைப் போல பூமியில் பிறந்த அசுரர்களும். வேதவியாசரிடமிருந்து பெற்ற ஸன்மார்க்கத்தை, சகவாச காரணத்தினால், தாமும் பின்பற்றி வந்தனர்). ஆத்யனான நாராயணனே - மூலரூபி நாராயணனே (ஸ்ருஷ்ட்யாதி ஸர்வகாரணனான நாராயணனே). பந்தில்லி - பூமியில் (வேதவியாஸனாக) அவதரித்து. பேள்த ஸித்தாந்தவனு - உபதேசித்த சித்தாந்தத்தை. கத்து கன்னவ மாடலு - வஞ்சனையுடன் ஏமாற்ற (அசுரர்களை அவர்களுக்கு தகுதியற்ற வேத மார்க்கத்திலிருந்து விடுவிக்க) புத்த ஸ்வரூபதிந்த - புத்த ரூபத்தினால். உத்பவிஸித கதெ - அவதரித்த கதை. ஸித்தவாதுதில்லவெ - (பிரமாணங்களால்) தெளிவாகவில்லையா?. புத்திவந்தரெல்ல - ஞானிகள் அனைவரும். பேள்த பேள்த - சொல்லிக் கொண்டு வந்த (ஒருவர் மற்றொருவருக்கு உபதேசித்த, அதாவது, ஞானிகளின் உபதேச பரம்பரையினால் கிடைத்த). பரிஷுத்தகாரண (ஆகையாலேயே) தோஷங்கள் அற்ற பிரமாணமான காரணத்தினாலேயே. ஸ்ருதியெனிப - ‘ஸ்ருதி’ என்று சொல்லப்படும். வித்யெய - வித்யையை (வேதவித்யையை).

ஹயவதனனு - ஸ்ரீஹரி. உத்தரிஸித - காத்தான். [வேத மார்க்கத்தை அசுரர்கள் புறக்கணிப்பதைப் போல செய்து, புத்த ரூபத்தினால் தான் செய்த உபதேசத்தின் உண்மையான கருத்தினை தேவதைகளுக்கு (தேவ சபைகளில்) தெளிவுபடுத்தி தேவவித்யையை பரிசுத்தமாகவே வைத்துக் காத்தான்.]

** இந்த பத்யத்திலிருந்து, ஸ்ரீஹரியின் புத்தாவதாரத்தின் மகிமையை நிரூபித்து, புத்த மதத்தை நிராகரிக்கிறார். புத்தனின் உபதேசம் அசுரர்களை வஞ்சிப்பதற்காகவே வந்திருந்தாலும், உபதேச வாக்கியங்கள் யதார்த்தத்தை உபதேசிக்கும் சத்யமான வாக்கியங்களே ஆகியிருக்கின்றன. (யதார்த்த போதகங்களான அன்யார்த்தங்கள் உள்ளவையே ஆகியிருக்கின்றன). ஸ்ரீஹரி, தேவதைகளுக்கு தனியாக இந்த அர்த்த விசேஷங்களை விளக்கி அவர்களின் ஞானத்தை வளர்க்கிறான்.

** ஸ்ரீவிஷ்ணு, பிரம்மாதிகளால் வணங்கப்பட்டு, வேதவியாச ரூபத்தினால் அவதரித்து, பாஷுபதாதி துராகமங்களையும் அதற்கேற்ற சம்பிரதாயங்களையும் நிராகரித்து, பாஞ்சராத்ராதி சதாகமங்களையும் வேத-சம்மத சத்-சம்பிரதாயங்களையும் நிறுவிய பிறகு, ருத்ரதேவரால் முன்பு எரிக்கப்பட்ட த்ரிபுராசுரர்கள் பூமியில் பிறந்தனர். அதுவரை கலியுகத்தில் 1,000 ஆண்டுகள் ஆகியிருந்தன. ஞானாமஹா நிதிகளான ஸ்ரீவேதவியாசர் அனைத்து முனிவர்களுடன் மற்றவர்களின் கண் பார்வையிலிருந்து மறைந்திருந்தார். ஆனாலும், அவரால் நிறுவப்பட்ட தத்வ வித்யை மற்றும் ஸத் ஸம்பிரதாயங்களின் பிரபாவத்தினால் அசுரர்கள்கூட தமக்கு தகுதியற்ற தத்வவித்யையை அடைந்தனர்.

ஹோம ஹவிஸ்ஸினை நாய் தொடுவதைப் போல, வேதங்களை தகுதியற்றவர்கள் ஏற்றுக் கொண்டிருந்தனர். இது தேவதைகளுக்கு ஒப்பவில்லை. சஜ்ஜனர்களுக்கு ஞான அபிவ்ருத்தியையும், அஞ்ஞானிகளுக்கு (தமோ யோக்யர்களுக்கு) ஞான நாசத்தினையும் கொடுப்பதில் ஈடுபட்டிருந்த பிரம்ம ருத்ராதி அதிகாரிக தேவதைகள், ஸ்ரீஹரியின் சன்னிதானத்தில் இவ்வாறு வேண்டிக் கொண்டனர்.

தத்வவித்யையை அயோக்யர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். உடனே ஸ்ரீஹரி அவர்களின் பிரார்த்தனையை நிறைவேற்றுவதாக வாக்களித்தான். மிகவும் அழகானதொரு குழந்தையின் ரூபத்தில் அவதரித்தான். அப்போது த்ரிபுராசுரர்களில் முக்கியமான அசுரன் ஒருவன், ஷுத்தோதன நாமக ராஜனாக இருந்தான். (கயா நாமகள் - கயா நாமக க்ஷேத்திரத்தில்) அப்போதே பிறந்திருந்த குழந்தையை தூரத்தில் விலக்கி, அந்த இடத்தில் தான் அழகான புன்னகையுடன் படுத்தான்.

இவனே புத்தரூபியான ஸ்ரீவிஷ்ணு. ஜாதகர்மாதி வேதோக்த கர்மங்களை சம்பிரதாயத்தைப் போல நடத்திக் கொடுக்க வந்த ஷுத்தோதகனாதிகளை கேலி செய்து, தனது அற்புத மகிமையை வெளிப்படுத்தி, அவர்களுக்கு தன்னிடம் நம்பிக்கை வருமாறு செய்து, வேத மார்க்கத்தை விடுமாறு சொல்லி, அதற்குத் தேவையான வேதாதிகளின் அப்ராமாண்யாதி உபதேசங்களை செய்தான்.

புத்தனிடம் மயங்கிய அந்த பாவிகள், அந்தம் தமஸ்ஸின் வழியில் சென்றனர். தேவதைகளால் கேள்வி கேட்கப்பட்ட புத்த ரூபி ஸ்ரீவிஷ்ணு, அசுரர்களுக்கு தான் செய்த உபதேச வாக்கியங்களை, தேவதைகளுக்கு விவரித்தான். அந்த வித்யையே 'ப்ரஷாந்தவித்யை' என்று பெயர் பெற்றது.

(இந்த விஷயங்கள் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 32ம் அத்தியாயம் 139-159ம் ஸ்லோகங்களின் தாத்பர்யத்தையே சொல்கிறது. மூல மற்றும் வியாக்யானங்களால் மேலதிக விவரங்களை அறியலாம்).

வேதவித்யை, அயோக்யர்களிடம் சேராமல் இருக்கவே வேதங்களின் அப்ராமாண்யத்தையும், ஜகத்தின் தற்காலிகத் தன்மையையும் வெளிப்படுத்திய பௌத்த மதம், ப்ரமாணமாகாது என்னும் யுக்தியை இந்த பதம் விளக்குகிறது.

**தன்னமொக³வ தா காணலரியத³லெ**
**கன்னடி³யனு தாஹ மனுஜஜாதிய**
**மொன்னெமொன்னெகெ³ ஸர்வக்ஞ**

**தன்னன்னெ கூடி3ர்த3 நாடி3ய தோரிஸி**
**தனுவின ஸ்தி2திய**
**அன்யர கேளனெ பஞ்சாங்க3தொ3ந்தொ3ந்து3**
**தி3ன தி3ன நோட3னெ**
**என்னாள்வ ஹயவத3ன குது3ரெமொக3தி3 வ்யா**
**க்2யான மாடு3வகெ3 கூடு3வுது3 காணோ**
**அனுபம ஷகுதி ||8**

தன்ன மொகவ - தன் முகத்தை. தா - தான். காணலரியதெ - பார்க்க முடியாமல். கன்னடியனு தாஹ - கண்ணாடியை (அதற்காக) எடுத்துக் கொள்ளும். மன்னுஜஜாதிகெ - மனித ஜாதியை சேர்ந்தவனான. மொன்னெ மொன்னெகெ - சில நாட்களுக்கு முன்னர்

கூட. ஸர்வக்ஞ - சர்வக்ஞ என்று சொல்லிக் கொண்டிருந்தவர். தன்னன்னெ கூடிர்த்த - தன்னிடமே இருக்கும். நாடின - நாடியை. தோரிஸி - (மருத்துவருக்குக் காட்டி) பரிசோதனை செய்து கொண்டு. தன்னுவின ஸ்திதிய - தேகத்தின் நிலையை. அன்யர - (அந்த வைத்யர் என்னும்) பிறரை. கேளனெ - கேட்பதில்லையா?. பஞ்சாங்கத - பஞ்சாங்கத்தில் இருக்கும். ஒந்தொந்து தின்ய தின்ய - ஒவ்வொரு நாளினையும். நோடனெ - பார்த்து அறிந்து கொள்வதில்லையா?. என்னாள்வ - என் ஸ்வாமியான (அந்தர்யாமியான). குதுரெமொகதி - குதிரை முகத்தில் இருக்கும் (ஸ்ரீஹயக்ரீவ ரூபி) வ்யாக்யான்னமாடுவகெ - வியாக்யானம் செய்யும் (இந்த கிரந்த ரூபத்தினால் பிரமேய விஸ்தாரத்தை இயற்றும் ஸ்ரீஹரிக்கு மட்டும். அன்னுபம - இருக்கக்கூடிய. ஷகுதி - ஷக்தி (ஸர்வக்ஞத்வாதிகள்). கூடுவுது காணோ - பொருந்துகிறது என புரிந்து கொள், மூடனே.

** வேதங்கள் - அனாதி நித்யமும், அபௌருஷேயமும், நிர்தோஷனும், தானே ப்ரமாணமும் ஆனவை. இத்தகைய வேதங்கள் இல்லாமல் தர்ம, அத்ர்மங்களின் வ்யவஸ்தைகள் இல்லை. எந்த ஒரு சர்வக்ஞன், தர்ம அதர்ம ஸ்வரூபங்களை நிர்ணயித்து கூறினாலும், அதனை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியும் என்பது இல்லை. அனைவரும் தத்தம் மதாசார்யர்களை,

அனைத்தையும் அறிந்த சர்வக்ஞர் என்றே சொல்லியிருக்கின்றனர். ஆனால், தர்ம அதர்ம ஸ்வரூபத்தை அனைத்து மதங்களும் ஒரே மாதிரியாக நிரூபித்திருக்கவில்லை.

ஒருவருக்கு கோ-ஹத்ய என்பது பாவகரமான செயல் என்றால் வேறு சிலருக்கு அப்படியில்லை. அது மட்டுமல்ல. அது தர்மமும் இல்லை. ஆகையால், எந்தவொரு மதாசார்யரும், மற்றவரை சர்வக்ஞர் என்று சொல்வதற்கு வருவதில்லை. சர்வக்ஞர் என்று சொல்லிக் கொள்பவர் சர்வக்ஞர் அல்ல. பகவந்தனை சர்வர்க்ஞர் என்று அனைவரும் ஒப்புக் கொள்வதில்லை. அத்தகைய சர்வக்ஞர், ப்ரத்யட்சமாவதும் இல்லை.

ஈஷ்வரனை ஒப்புக் கொள்ளும் ந்யாய, வைஷேஷிக, ஸாங்க்ய, யோக தர்ஷனகாரர்களின் அபிப்பிராயத்தில்கூட ஈஷ்வரனின் சர்வக்ஞத்வத்தைப் பற்றி பல்வேறு விதமான கருத்துக்களும், எதிர்மறை கருத்துக்களும், பரிகரிக்க முடியாத குழப்ப யுக்திகளும் தெரிய வருகிறது. சமீபகாலம் வரை சர்வக்ஞர் என்று அழைத்துக் கொண்டிருந்தவர்களைப் பார்த்தால், அவர்களில் சர்வர்க்ஞத்வ என்னும் பிரமை மட்டுமே இருக்கிறது என்பதை, லோக அனுபவங்களால், இந்த பத்யத்தில் சொல்லியிருக்கிறார்.

தம்முடைய சொந்த முகத்தைக் காண்பதற்கு கண்ணாடி வேண்டும். தன் கையில் இருக்கும் நாடிகளைப் பார்த்து, வாத, பித்த, நோய், நொடிகளை பரிகரித்துக் கொள்ள முடியாமல், ஒரு மருத்துவரை சென்று பார்ப்பவர் சர்வக்ஞரா? நாளின் திதி, நட்சத்திர ஆகிய விவரங்களுக்கு தினமும் பஞ்சாங்கம் வேண்டும் என்று பார்ப்பவர் சர்வக்ஞரா?

ஸ்ரீவிஷ்ணுவின் உபமானம் இல்லாத சர்வக்ஞத்வத்தை அடுத்த பத்யத்திலிருந்து நிரூபிக்கிறார்.

**எல்லெல்லி தும்பி$^3$த்$^3$த$^3$ விஷ்ணுவெ நீனவர**
**ப$^3$ல்லெ ப$^3$ல்லெ விஷ்வதஸ்சக்ஷு நீனெ க$^3$ட$^3$ தோ**
**ர(ல்லி) தோரதி$^3$ரலி நீனெப$^3$ல்லெ**
**ப$^3$ல்லெ கைவல்யவ கொட$^3$லு பி$^3$ட$^3$லு நீனெ**
**ப$^3$ல்லெ ப$^3$ல்லெ ஷரணரிகெ$^3$**

**ஒலிது$^3$ க$^2$ளர கெ$^3$ல்லுவுது$^3$ ப$^3$ல்லெ**
**ப$^3$ல்லெ மாயாபதியெ**
**கல்லு கம்ப$^3$தி$^3$ மூடி$^3$த$^3$ ப$^4$க்தவத்ஸல**
**ஸல்லுவுதோ$^3$ ஹயவத$^3$ன எ**
**ந்னாளுவ கருணி நீ ப$^3$ல்லெப$^3$ல்லெ ||9**

எல்லெல்லி - அனைத்து இடங்களிலும். தும்பித்த - முழுமையாக (உள்ளே மற்றும் வெளியே) வியாபித்த. விஷ்ணுவே - ஹே விஷ்ணுவே. நீனவர - நீ அவரை. பல்லெ பல்லெ - நன்றாக அறிந்திருக்கிறாய். நீ - நீ. விஷ்வத:சக்ஷு கட - சர்வசாக்ஷி அல்லாமல் (சர்வதர்ஷி நீயே). தோரலி தோரதிரலி - ஜீவர்களின் ஸ்வரூப யோக்யதையானது தெரியட்டும் அல்லது மறைந்திருக்கட்டும். ஒல்லிது - தரிசனம் அளித்து. ஷரணரிகெ - உன்னையே சேர்ந்த பக்தருக்கு. நீனெ - நீயே. கைவல்யவ - முக்தியை. கொடலு பிடலு - கொடுப்பதற்கும் விடுவதற்கும். பல்லெ கட - அறிந்திருக்கிறாய். அப்படியே. குல்லர - துர்ஜனரை. கொல்லுவுது பல்லெ - சம்ஹரிப்பதை (கொன்று, உத்தம கதியை அடையுமாறு செய்வதை) அறிந்திருக்கிறாய். பல்லெ பல்லெ - நன்றாக அறிந்திருக்கிறாய். அல்லது, மாயாபதியே பல்லெ - லட்சுமிபதியே சரி என்று அறிந்திருக்கிறேன். பக்தவத்ஸல்ல - பக்தவத்ஸலனே. கல்லுகம்பதி மூடித - (ஹிரண்யகனின் சபா நடுவின்) கல்தூணிலிருந்து அவதரித்த. ஹயவதன - ஹே ஹயக்ரீவ ஸ்வாமியே. ஸல்லுவுதோ - உனக்கு மட்டும் பொருந்துகிறது, பிரபோ. வேறு யாருக்கும் அல்ல. நீ - நீயே. என்னாளுவ - (என்னை அனைத்து விதங்களிலும் வழி நடத்தும்). நன்ன ஸ்வாமியாத கருணி - தயாபூர்ணன் என்பதை. பல்லெ பல்லெ - சந்தேகமற்று அறிந்திருக்கிறேன் (ஆதாரபூர்வமாக அறிந்திருக்கிறேன்).

** ஸ்ரீமகாவிஷ்ணு மட்டுமே சர்வக்ஞன். சர்வக்ஞன் மட்டுமல்ல. ஸ்வதந்த்ர ஸர்வ நியாமகன். அனைத்து ஜீவர்களின் பற்பல சாதன நிலைகளில், அவர்களின் ஸ்வரூப யோக்யதையை சாட்சாத்தாக காணும் ஸ்ரீஹரி, அவரவர்களின் யோக்ய கதியைக் கொடுக்கிறான். ஸ்வயோக்யமான கதியை அவரவர்களுக்குக் கொடுக்கிறான்.

ஷரணாகதி அடைந்தவர்களை அருளி, துஷ்டர்களை நிக்ரஹிக்கும் பக்தவத்ஸலனான பிரபுவாக இருக்கிறான்.

**ருத்$^{3}$ரரோத$^{3}$னவெம்ப$^{3}$ ஹொன்னக$^{3}$ண்ட$^{3}$ன காய**
**த$^{3}$ர்த்$^{3}$த$^{4}$வ ஸெளெவ ஹெண்ணனொப்$^{3}$பொ$^{3}$ப்$^{3}$ப$^{3}$ர**
**கு$^{3}$த்$^{3}$தி$^{3}$ஸிகொல்வ மண்ண தொ**
**ரெது$^{3}$ பா$^{3}$ளுவ மானவனாவ சதுர்த்த$^{3}$**
**பு$^{4}$வனதொ$^{3}$ளு**
**ஹொத்$^{3}$தி$^{3}$த்$^{3}$த$^{3}$ து$^{3}$க்$^{3}$த$^{3}$வாரிதி$^{4}$ மத்$^{4}$யத$^{3}$ல்லி**
**இத்$^{3}$து$^{3}$ தன்னத$^{3}$ரத$^{3}$லிப்ப**
**பத்$^{3}$மிய ஸடெ$^{3}$கொ$^{3}$ள்ளதெ$^{3}$ குவரன நாபி$^{4}$**
**பத்$^{3}$மதி$^{3}$ பெ$^{1}$த்த ஹயவத$^{3}$னனொப்$^{3}$ப$^{3}$னெ**
**கெ$^{3}$த்$^{3}$த$^{4}$சித்$^{3}$த$^{4}$ காணிரோ ||10**

ருத்ரரோதனவெம்ப - ருத்ரரோதன என்னும் பெயர் உள்ள. ஹொன்ன - தங்கத்தை. கண்டன காயத - கணவனின் தேகத்தின். அர்த்த ஸெளெவ - பாதியை ஆக்ரமித்த (அர்த்தாங்கினி எனப்படும்) ஹெண்ண - பெண்ணை. ஒப்பொப்பர குத்திஸி கொல்வ - ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு இறப்பதற்குக் காரணமான. மண்ண - மண்ணினை (பூமியை). தோரர்து - விலக்கி (இந்த மூன்றின் ஆசையை விட்டு). பாளுவ - வாழும். மானவனு - மனிதன். சதுர்தஷ புவனதொளு - 14 உலகங்களில். ஆவ - யார்? ஹொத்ததெ - (இந்த மூன்றின்) வசம் ஆகாமல் (இவற்றை மீறிய). துக்தவாரிதி மத்யதல்லி இத்து - பாற்கடலில் நடுவில் இருந்து. தன்னுதரதலிப்ப - தன் வயிற்றில் இருக்கும். பத்மிய - லட்சுமிதேவியை (தன் தேகத்தில், அதாவது, வட்சஸ்தலத்திலேயே இருக்கும் லட்சுமிதேவியை). ஸட்டெகொள்ளதெ - எதிர்பார்க்காமல் (அவளையும் எதிர்பார்க்காமல்). குவரன - மகனை. நாபிபத்மதி - நாபி மத்யத்தில். பெத்த - பெற்ற (மகனாகப் பெற்ற). ஹயவதனனொப்பனெ - ஸ்ரீஹரி ஒருவனே. கெத்த - பொன், பெண், மண் என்னும் ஈஷண த்ரயங்களை) வென்றவனான. ஸித்தகாணிரோ - நித்ய வெற்றியாளனை (அதிகாரிகளே. இவ்வாறு தெரிந்து கொள்ளுங்கள்).மண் (பூமி), பொன் (தங்கம் முதலான செல்வம்), ஹெண்ணு (பெண்). இந்த மூன்றின் ஈர்ப்பு 'ஈஷணத்ரய' என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின்

மோகத்தில் ஈடுபடும் ஜீவன், சம்சாரத்தில் சுழன்று கொண்டே இருக்கிறான். முக்தனாகி கிடைக்கும் நித்ய சுகத்தை அவன் அடைவதில்லை. ஈஷணத்ரயத்தினால் எப்போதும் அனைத்து விதங்களிலும் நிர்முக்தன் என்றால் அது ஸ்ரீஹரி ஒருவனே. ஸ்ரீமகாலட்சுமியும்கூட அவனை ஈர்ப்பதில்லை. இத்தகைய அகண்ட மகா வைராக்யசாலி - ஸ்ரீஹரி. ஸ்ரீபிரம்ம வாயுகளும் ஈஷணத்ரய இல்லாதவர்களே. ஆனால், ஸ்ரீஹரியைப் போல அல்ல. ஈஷணத்ரயங்களால் மோஹிதர் அல்ல. அவற்றின் வசம் ஆனவர்கள் அல்ல. ஸ்ரீஹரியின் ஆணைக்கேற்ப, அவனின் அதீனராகி, செல்வங்களை அனுபவிக்கின்றனர். ருத்ராதி அனைத்து ஜீவர்களும் முக்தர் ஆனபிறகே,

ஈஷணத்ரயத்திலிருந்து விடுபட்டு ஸ்ரீஹரியின் அதீனனாகி, செல்வங்களை தம் இஷ்டப்படி போகிக்கின்றனர். ஸ்ரீஹரியின் லக்ஷ்ம்யாதி போகம் என்பது, அனைத்து முக்தர்களின் போகத்திலிருந்து வேறுபட்டது. 'மஹாலக்ஷ்மீம் ரமயதே லீலயா க்ருபயா ஹரி: ரமயா ரமமாணோ஽பி தத்ஸ்தேனைவ ஸ்த்ரியாத்மனா | ரமதே நான்யத: க்வாபி ரதிர்விஷ்ணோ: பராத்மன: || (ஸத்தத்வ ரத்ன மாலா).

ஸ்ரீஹரி, தனது லீலையினாலும், அவளை அருள வேண்டும் என்னும் கருணையினாலும், மகாலட்சுமியுடன் இருக்கிறான். இவ்வாறு ரமாவுடன் சேர்ந்து இருப்பதும், அவளில் இருக்கும் தன் ஸ்த்ரீ ரூபத்தினாலேயே தவிர, ஸ்ரீஹரிக்கு வேறு விதத்தில் ரதி (சேர்க்கை) என்பது இல்லவே இல்லை என்று, ஸ்ரீஹரியின் ஸ்த்ரி ரமணத்வம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

சந்தானத்திற்காக, புருஷனுக்கு ஸ்த்ரி தேவை என்பது உலக நடைமுறை. ஸ்ரீஹரிக்கு அதற்கும்கூட (மக்களைப் பெறுவதற்கும்கூட) ஸ்த்ரியின் அவசியம் இல்லை என்பதை நாபி கமலத்திலிருந்து சதுர்முக பிரம்மனை மகனாகப் பெற்ற மகிமையினால், ஸ்ரீஹரியின் சர்வ விலக்ஷண ஸ்வாதந்த்ரத்தையும், அற்புத வைராக்யாதி குணங்களையும் மிகவும் அழகாக இந்த பத்யத்தின் மூலம் நிரூபித்திருக்கிறார்.

**மனெய மேலண கிச்சு மனெயொளகி3ன கர்ம**
**கனுகூலவாத3 ப3கெ3ய பேளுவெ வாதி3**
**கானன மரத3 நெளலு**
**ஜனபத3தொ3ளக3ண தாப களெவுதெ3 க**
**ள்ளன களுஹதெ3 ஷூலக்கெ**
**அனக4ரிக3ப்பணெகொடு3வ அரஸினந்தெ**
**இனிது காரணராஷிய**
**க4னதர கார்ய ஸர்வேஷ்வர நம்ம**
**வினுத ஹயவத3னனொல்லதி3த்3த3ரெ மே**
**லணபத3கெந்தே1ருவெ ||11**

மனெய மேலண கிச்சு - வீட்டில் மேல் இருக்கும் அக்னி (நெருப்பு). மனெயொளகின - வீட்டின் உள்ளே நடக்க வேண்டிய. கர்மகெ - (சமையல் முதலான) செயல்களுக்கு. அனுகூலவாத பகெய - (வீண் என்று தெரியும் அக்னி) பயன்படுத்தும் விதத்தை. வாதி - ஹே வாதியே. (கர்ம மீமாம்ஸகனே). பேளுவெ - சொல்கிறேன். கானன மரத நெளலு - காட்டில் இருக்கும் மரத்தின் நிழல். ஜனபததொளகண - நாட்டில் இருக்கும். தாப - (வெயில்) வெப்பத்தை. களெவுதெ - பரிகரிக்கிறதா? (காட்டின் நிழல் வீண் தானே?). கள்ளன - திருடிய அபராதியை. ஷூலக்கெ களுஹதெ - சூலத்தில் ஏற்றாமல் (தக்க தண்டனையைக் கொடுக்காமல்). அனகரிகெ - நிரபராதிகளுக்கு. அப்பணெகொடுவ - தண்டனையைக் கொடுக்கும். அரஸினந்தெ - அரசனைப் போல. (இவ்வாறு செய்யும் அரசன், இருந்தாலும் இல்லாதவனே ஆகிறான்). இனிது - இவ்வாறு (அல்லது இவ்வளவு). காரணராஷிய - காரண சமூகத்தினால் ஆகும். கனதரகார்ய - மஹத் காரியங்கள். சர்வேஷ்வர - சர்வ நியாமகனான. வினுத - (பிரம்மாதிகளால்) விசேஷமாக வணங்கப்படும். நம்ம ஹயவதனனு - என் (ப்ரியனான) ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி. ஒல்லதித்தரெ - வேலை ஆகவேண்டும் என்று விரும்பாவிட்டால் (அது நடப்பதேயில்லை). (செயல்களே நடப்பதில்லை). மேலணபதகெ - மேல் ஸ்தானத்திற்கு (சாதன மார்க்கத்தில் அடுத்த இடத்திற்கு). எந்தேருவெ - எப்படி செல்வாய்? (சாதனையே அடுத்து நடப்பதில்லை).

** வேறு இடத்தில் இருக்கும் நெருப்பானது, வீட்டிற்குள் நடக்கும் சமையல் போன்றவற்றிற்கு பயன்படுவதில்லை. அது வீண்தானே? காட்டில் இருக்கும் மரத்தின் நிழல், நாட்டில் இருப்பவனின் வெயிலின் வெப்பத்தை குறைப்பதில்லை. இதைப் போல, அபராதிகளை தண்டிக்காமல் நிரபராதிகளை தண்டிக்கும் அரசன் (நராதிபன் - ப்ரஜாதிகாரி), வீணானவன் ஆகிறான். இவ்வாறே, பிரம்மனை ஒப்புக் கொண்டும், கர்மத்தினாலேயே ஸர்வ புருஷார்த்தத்தை சாதிக்கலாம் என்றும், கர்ம சித்திக்கு (கர்மம் அதன் பலன்களைக் கொடுப்பதற்கு) பிரம்மன் தகுதி இல்லாதவன் என்று அறியும் பூர்வ மீமாம்ஸகருக்கு - பிரம்மன் அப்ரயோஜகன் (வீண்). இவர்கள், பிரம்மனை ஒப்புக் கொண்டாலும், ஒப்புக் கொள்ளாததைப் போலவே ஆகிறது. அனைத்து புருஷார்த்த சாதனைகளின் பலன்களைக் கொடுப்பதற்கு, ஸ்வதந்த்ரனான பிரம்மன் மிகவும் அவசியம் என்று சொல்லி, மீமாம்ஸகர்களை நிராகரிக்கிறேன் என்று இந்த பத்யத்தினால் சபதம் செய்கிறார். மீமாம்ஸகர்களின் மத தத்வங்களின் விவரணையை அடுத்த பத்யத்தை பார்த்து தெரிந்து கொள்ளலாம்.

**கர்மவொந்தெ$^3$ ஸாகு பொ$^3$ம்மவேகெம்பு$^3$வ**
**[நிம்மஹியொளு] யக்ஞாதி$^3$ ஸத்கர்மவ**
**ஸும்மனெ மாடு$^3$வனெ**
**நிம்ம மக$^2$வ மாட$^3$பே$^3$கெம்ப$^3$ ஸ்ருதி நம்ம**
**பொ$^3$ம்மன பேளிதாகி$^3$**
**அம்மம்ம ஸத்வத$^3$னுடி$^3$ தப்பித$^3$ரெ ஸாத்$^4$ய**
**ஸம்மதி$^1$ப்பதே$^3$கோ**
**ஹெம்மெய பி$^3$டு$^3$ வாதி$^3$ ஹயவத$^3$னனெம்ப$^3$ பர**
**பொ$^3$ம்மன நம்பு$^3$ கைவல்ய பே$^3$காத$^3$ரெ**
**இம்மன மாட$^3$பே$^3$ட$^3$ ||12**

கர்மவொந்தே ஸாகு - (புருஷார்த்த சாதனைக்கு) கர்மம் மட்டுமே போதும். பொம்மனேகெம்புவனு - பிரம்மன் எதற்கு என்று சொல்பவன் (பிரம்மனின் அவசியமே இல்லை என்று அறிபவன்). ஈ மஹியொளு - இந்த பூலோகத்தில். யக்ஞாதி ஸத்கர்மவ - யாகாதி ஸத்கர்மங்களை ஸும்மனெ - காரணம் இல்லாமல் அல்லது அந்த கர்மமே பலன்களைக் கொடுக்கிறது என்று நினைத்து. மாடுவனெ -

செய்கிறானா? மகவ மாடபேகெம்ப நிம்ம ஸ்ருதி - யக்ஞ செய்ய வேண்டும் என்று சொல்லும் உங்கள் ஸ்ருதி (நீங்கள் பின்பற்றும் ஸ்ருதி). நம்ம பொம்மவ - நாம் (ஸ்வதந்த்ர ஸர்வகர்த்தன் என்று) அங்கீகரிக்கும் பிரம்மனை. பேளிதாகி - சொல்வதாக (புகழ்வதால்). அம்மம்ம - என்ன ஆச்சரியம்? ஸத்வத நுடி தப்பிதரெ - பிரமாண வாக்கியம் (நீங்கள் உத்தம பிரமாணம் என்று அங்கீகரிக்கும் வேதமே) பொய் என்றால். ஸாத்ய - (மோட்சத்திற்கு கர்ம ஒன்றே போதும் என்னும் உங்கள் நுடி) சரி என்றாகிறது. ஸம்மதிப்பதேகோ - வேதத்தை பிரமாணம் என்று ஏன் ஒப்புக் கொள்கிறாய்?. ஹெம்மெய பிடு - (புருஷார்த்த பிராப்திக்கு கர்ம மட்டுமே போதும் என்னும்) உன் கர்வத்தை மற்றும் நான் யக்ஞாதி கர்மங்களை செய்பவன், அந்த கர்மங்களின் பலன்களை பெறுபவன் (என்னும் பெருமையை). பிடு - விட்டுவிடு. வாதி - ஹே வாதியே. ஹயவதனனெம்ப - ஸ்ரீஹயக்ரீவ நாமகனான. பொம்மன - பிரம்மனை. கைவல்ய பேகாதரெ - மோட்சம் உனக்கு வேண்டுமென்றால். நம்பு - நம்பிக் கொள். இம்மன மாடபேட - இரு மனதினை வைத்துக் கொள்ளாதே (சந்தேகப்படாதே). ஸ்ரீஹரியே மோட்சபிரதன் என்று திடமாக நம்பு.

** பூர்வமீமாம்ஸ தர்ஷனத்திற்கு மூலகாரணமான ஸூத்ரங்கள் ஜைமினிகளால் நிர்மாணிக்கப்பட்டது. ஸூத்ர ப்ரதிவாதி தத்வங்களை வ்யாக்யானம் செய்த (இந்த தர்ஷனத்தின் ப்ரதான வியாக்யானகாரரான) குமாரில மற்றும் ப்ரபாகர என்பவர்களில் பல்வேறு கருத்து வேறுபாடுகள் உள்ளன. இருவரும் ஒப்புக்கொள்ளும் முக்கிய பிரமேயங்களை இவ்வாறு தொகுத்து சொல்லலாம். ஜகத் ஸத்ய. ஜீவாத்மர் அஸங்க்யர் மற்றும் பரஸ்பர பின்னர்கள். இவர்கள், கர்மாதீனராகி தேகத்தினால் இன்னொன்றினைப் போல தேகங்களை பெற்றவாறு சம்சாரத்தில் வீழ்கின்றனர்.

கர்ம பந்தத்தின் விடுதலையால் முக்தி கிடைக்கிறது. முக்தி என்பது ஆனந்த அனுபவத்தின் நிலை என்று அறிவது தவறு. பிறப்பு என்றால் அழிவு இருக்கிறது. சம்சார நிலையில் இல்லாத ஆனந்தம் முக்தியில் உண்டாகிறது என்றால் (பிறக்கிறது என்றால்) அதுவும் நாசம் ஆகவே வேண்டும். சம்சார நிலையில் அந்த

ஆனந்தம் இருக்கிறது - ஆனால் அஸ்பஷ்டமாக இருக்கிறது என்று அறிவது பரஸ்பர எதிர்மறையானதால் அப்படி அறியக்கூடாது. முக்தியில் ஜீவாத்மன் சுகதுக்கங்கள் இரண்டும் இல்லாததைப் போல இருக்கிறான் என்று அறிவது யுக்தியுடனான சித்தாந்தம்.

தர்ம அதர்மங்களின் ஞானம் வேதங்களாலேயே சாத்தியம். வேதங்கள் அபௌருஷேயமானவை. ஆகையால் அவை நிர்தோஷ பிரமாணங்கள். வேதங்களுடன் ப்ரத்யக்ஷாதிகளும் பிரமாணங்களே. ஜீவாத்மருக்கு சரீர சம்பந்தமே, அதாவது, சம்சார சம்பந்தத்தின் விடுதலையே மோட்சம். சரீரங்களால் செய்யப்படும் கர்மங்களே ஜீவனை கட்டுப்படுத்துகின்றன. கர்மபலபோகத்திற்காக தேகங்களை அடைந்தவாறு செல்கிறான். வேதங்களில் சொல்லப்பட்ட யக்ஞாதி விஹித கர்மங்களை நிஷ்காமனாகி (பலனின் ஆசைகளை விட்டு) செய்வதால், பூர்வபுண்ணியம் அழிகின்றன. நிஷித்த

கர்ம த்யாகத்தினால் பூர்வபாவங்கள் நஷ்டம் அடைகின்றன. இவ்வாறு புண்ய பாவங்கள் நாசம் அடைந்துவிட, சரீர பிராப்திக்கு சந்தர்ப்பமே இல்லாததாகி, ஜீவாத்மன் அ-சரீரி ஆகிறான். இதுவே முக்தி.

இந்த சித்தாந்தங்களின் பிரசாரத்தின் பலனாக, யக்ஞயாகாதி கர்மங்கள் அதிகமாக நடைபெறத் துவங்கின. வேதவாக்கியங்களின் அர்த்தங்களை அறிவதில் மக்களுக்கு அதிக மரியாதை உண்டாகி, வேதார்த்த பிரதிபாத்ய கிரந்த ரசனை காரியம் அதிகமாக

நடக்கத் தொடங்கியது. வேதோக்த (வைதிக) கர்மங்களின் ஆசரணையினாலேயே மோட்சம் என்னும் சிந்தனை மக்களிடம் வளர்ந்து, கர்மத்தின் அர்த்தங்களே முக்ய அர்த்தங்கள் ஆனது. வேதவாக்கியங்களின் மஹா தாத்பர்யங்கள் மறையத் துவங்கின. நிஷ்காமராகி, வேதோக்தங்களை பின்பற்றி, சுகதுக்க ரஹித ஷூன்ய ஸத்ருஷ (முக்தி என்னும்) நிலையை அடைவதைவிட, ஸ்வர்க்காதி பலன்களை அடைந்து அங்கு சுகமாக இருப்பதே சிறந்தது என்னும் சிந்தனை, பிரபலமடைந்து வந்தது.

** ஸர்வே வேதா யத்பதமாமனந்தி.. - ஆகிய வேத வாக்கியங்கள், அனைத்து வேதங்களின் முக்ய தாத்பர்யம் ஸ்ரீவிஷ்ணுவின் ஸர்வோத்தமத்வத்தை நிரூபிப்பதே ஆகும் என்று கூறினாலும், அதனை கவனிக்காமல், வைதிக யக்ஞாதி கர்மாசரணையே மோட்ச ஸாதன என்று சொல்லும் இந்த தர்ஷனகாரர்கள், வேதங்களை அபௌருஷேய என்றும், அதனாலேயே நிர்தோஷ பிரமாணங்கள் என்றும் கூறினாலும், மோட்ச பிராப்திக்கு பிரம்மனின் தேவையே இல்லை என்று சொல்வது, வேதத்திற்கு எதிரானது என்னும் யுக்தியை இந்த பத்யத்தின் மூலம் விளக்குகிறார்.

ஸர்வோத்தமம் ஸர்வதோஷ வ்யபேதம் குணைரசேஷை: பூர்ணமன்யம் ஸமஸ்யாத் |
வைலக்ஷண்யாத் ஞாபயந்தி ப்ரவ்ருத்தா: ஸர்வே வேதா முக்யதோ நைவ ஜான்யத் ||

என்னும் மஹோபநிஷத் ஸ்ருதி, ‘சர்வோத்தமனான விஷ்ணுவை சர்வ தோஷதூரன் என்றும், சமஸ்த கல்யாண குணபூர்ணன் என்றும், சமஸ்த சேதனாசேதன வஸ்துகளிலிருந்து வேறுபட்டவன் என்று சொல்வதற்காகவே ஸர்வ வேதங்களும் முக்கியமாக வந்திருக்கின்றன - பேதத்தை சொல்வதற்கு அல்ல. என்று சொல்கின்றன.

**இன்னொப்3ப3வாதி3 க4டபடாதி3 தத்வ**
**வன்னு நுடி3த3ன்ன ப3ந்த4 பரிபுதெ3ந்தோ1**
**மண்ணு தந்து3 ஷோதி4ஸி**
**என்னிதாக3பே3கோ அன்னிதவ கூடி3**
**நிர்ணயிஸி க4டவ மாட்3த3**
**சென்னய்யனெம்ப3 கும்பா3ரனேதகெ போ1க3**
**உன்னந்த முகுதிபத2க்கெ**
**என்னொடெ3ய ஹயவத3ன இந்தி3வர யுக்தி**
**ஷூன்ய மாதிகெ3 மெச்ச நான்ய:பந்த2வெம்ப3**
**ஆம்னாயவ பேள்த3வ ||13**

இன்னொப்ப வாதி - வேறொரு வாதி. கடபடாதி தத்வத்தை - கடபட ஆகியவற்றின் உற்பத்திக்கு காரணமான ஜட தத்வத்தை

(ப்ரக்ருதியையே). நுடிவன்ன - (ஜகத் காரண என்று சொல்கிறான்) சொல்பவனின். பந்த - சம்சாரம். பரிவுதெந்தோ - பரிகாரம் ஆவது (அழிவது) எப்படியோ? சொல். மண்ணு தந்து - மண்ணினைக் கொண்டு வந்து. ஷோதிஸி - சுத்தம் செய்து. என்னிதாகபேகோ - எவ்வளவு முக்கியமோ? அன்னிதவ - அவ்வளவு. கூடி நிர்ணயிஸி - சேர்த்து (தன் புத்தி பலத்தினால்) நிச்சயித்து. கடவ மாட்த - பானையை செய்த. சென்னய்யனெம்ப (ஏதோ ஒரு பெயருள்ள) குயவன். ஏதகெ - எந்த காரணத்தினால். உன்னந்த - சிறந்த. முகுதிபதகெ - மோட்ச மார்க்கத்திற்கு. போக - போவதில்லை. (சொல்). என்னொடெய ஹயவதன - என் ஸ்வாமியான ஸ்ரீஹயக்ரீவன். இந்திவர - இத்தகைய இதர (இந்த வாதிகளின்). யுக்திஷூன்ய மாதிகெ - யுக்தி இல்லாத வாதத்திற்கு (யுக்திக்கும் கட்டுப்படாத வாதத்திற்கு). மெச்ச - மகிழ்வதில்லை (தரிசனம் அளிப்பதில்லை). நான்ய:பந்தவெம்ப - 'நான்ய:பந்தா அயனாய வித்யதே' என்னும். ஆம்னாயவ - வேதத்தை. பேள்தவ - கூறியவன், ஸ்ரீஹயக்ரீவன்.

[தன் சர்வோத்தம ஞான நிஸ்சயத்தை அளித்து, தன் மோட்சத்திற்கு வேறு வழி இல்லை என்று சொல்லும் வேதத்தை உச்சரித்து வெளிப்படுத்திய தான், பிற வழிகளுக்கு மகிழ்ந்து மோட்சத்தை கொடுக்கிறானா? கண்டிப்பாக இல்லை].ஸாங்க்யரில் ஸேஷ்வர, நிரீஷ்வர என்று இரு வகைகள் இருக்கின்றன என்று இங்கு பார்த்தோம். (பத்ய 6ன் அர்த்தத்தை பார்க்கலாம்). நிரீஷ்வர ஸாங்க்யரில் இரு முக்கிய வகைகள் உண்டு. ஒருவர் சேதன சன்னிதானத்தினால், அசேதனமான ப்ரக்ருதி,

ஜகத்தின் ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு காரணம் ஆகிறது என்றும், ஈஷ்வரன் என்று ஒருவனை (பரம சேதனன் என்னும் ஸர்வஷக்தனான ஒருவனை) அங்கீகரிக்கும் காரணம் இல்லை என்றும் வாதிக்கிறார். இவர்கள் 'புருஷோப ஸர்ஜன ப்ரக்ருதி கர்த்ருத்வவாதி' என்று அழைக்கப்படுகின்றனர்.

இன்னொரு வகையினர் - அஸங்க்யசேதனர் இருக்கிறார்கள். அவர்களால் (ஒவ்வொருவரால் அல்லது அனைவரும் சேர்ந்து) ஜகத் சம்பந்தமான அனைத்து செயல்களும் நடப்பதற்கு வாய்ப்பு

இருக்கும்போது, ஒரு ஈஷ்வரனை ஒப்புக் கொள்ளும் காரணம் இல்லை என்று சொல்கின்றனர். இவர்கள் 'ப்ரக்ருதி உபஸர்ஜன புருஷ கர்த்ருத்வவாதி' கள் என்று அழைக்கப்படுகின்றனர். ஒருவர் சேதன உதவியுடன் ப்ரக்ருதியே ஜகத் காரணம் என்று கூறினால், மற்றொருவர் ப்ரக்ருதியின் உதவியுடன் சேதனரே அனைத்தையும் வழி நடத்துகிறார் என்று சொல்கிறார்.

இந்த இருவரும், ஷர்வஷக்தனும், சர்வக்ஞுனும் ஸ்வதந்த்ரனுமான ஈஷ்வரனை ('பரமாத்ம'னை) அங்கீகரிப்பதில்லை. ஆகையால், ' நிரீஷ்வரர்கள்' எனப்படுகின்றனர். பிரம்மசூத்திர 2-2-4 அதிகரணத்தில் இந்த இரு நிரீஷ்வர ஸாங்க்ய விதங்களையும் நிராகரித்திருக்கிறார். இந்த அதிகரணங்களின் சாரத்தை ஸ்ரீவாதிராஜர் தம் 'அதிகரண நாமாவளி'யில் 'ஓம் புருஷோபஸர்ஜன ப்ரக்ருதி கர்த்ருத்வ ஸமயா விருத்த காரணத்வதே நம: ஓம்' என்றும், 'ஓம் ப்ரக்ருதி உபஸர்ஜன புருஷகத்ருத்வ ஸமயாவிருத்த ஜகத்கர்த்ருத்வதே நம: ஓம்' என்றும் சொல்லியிருக்கிறார்.

இந்த பத்யத்தின் துவக்க பாகத்திலிருந்து முதலாவதையும் (ப்ரக்ருதி கர்த்ருத்வ வாதத்தை) மற்ற பத்ய பாகங்களிலிருந்து இரண்டாவதையும் நிராகரிக்கிறார் என்று அறிய வேண்டும். மண் பானையின் உற்பத்திற்கு ஸ்வ்தந்த்ர காரணமல்ல மற்றும் பானையை நிர்மாணிக்கும் சின்னய்யனுக்கு (குயவனுக்கு) மோட்சம் இல்லை என்று சொல்லி (ஸ்வதந்த்ரனும் ஸர்வஷக்தனுமான ஈஷ்வரன் இல்லாத) எந்த புருஷனுக்கும் ஸ்வதந்த்ர காரணத்வ இல்லை என்றும் சொல்லப்படுகிறது. ஆகையாலேயே, இந்த இரு பக்கத்தவர்களுக்கும் யுக்தி-விரோதம் வந்திருக்கிறது.

** இந்த பத்யத்தில் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ள ஸ்ருதி இவ்வாறு உள்ளது:

தமேவம் வித்வானம்ருத இஹ பவதி |
நான்ய: பந்தா அயனாய வித்யதே ||

தம் - ஆ விஷ்ணுவை. ஏவம் - இவ்வாறு (முன்பு கூறியதைப் போல ஸர்வகுண பூர்ணனான ஸர்வோத்தமன் என்று). வித்வான் - அறிந்த அதிகாரி. இஹ - அதிகாரிகளின் நடுவில். அம்ருத: முக்தன். பவதி - ஆகிறான். அயனாய - மோட்சத்தை அடைவதற்கு. அன்ய: - வேறு (சரியான ஞானத்தை விட்டு, மற்ற). பந்தா: - வழியானது. ந வித்யதே - இருப்பதில்லை. ஸ்வாதந்த்ர்ய ஸார்வக்ஞாதி குணபூர்ணனான ஈஷ்வரன் ஒருவனை அங்கீகரிக்காத எந்த தர்ஷனமும் சாத்தியம் இல்லை மற்றும் அது சாஸ்திரத்தின்படியும் சம்மதமில்லை என்று இந்த பத்யத்தின் மூலம் சொல்லியிருக்கிறார்.

**தன்ன நாலிகெ$^{3}$யன்னு தா கத்தரிஸுவவ**
**இன்னேனு நுடி$^{3}$வனோ கடி$^{3}$வ கொட$^{3}$லியனு**
**மொன்னெய முரித$^{3}$வனு**
**வனத$^{3}$ தருக$^{3}$ள கடி$^{3}$வனேனோ மூட$^{4}$**
**நின்ன வேதா$^{3}$ந்தவனு**
**மன்னிஸதெ$^{3}$ புஸியெம்ப$^{3}$ வாதி$^{3}$ ஜக$^{3}$**
**வன்னு இன்யாதரிந்த$^{3}$**
**ப$^{3}$ன்னப$^{3}$டி$^{3}$ஸி கெடி$^{3}$ஸுவெ நின்னர்த்த$^{4}$வ**
**இன்னெந்து$^{1}$ ஸாதி$^{4}$பெ ஹயவத$^{3}$னனவரொளு**
**எந்து நிந்து வாதி$^{3}$பெ ||14**

மூட - ஹே மூர்க்கனே. தன்ன நாலிகெயனு - தன் நாக்கினை. தா கத்தரிஸுவவ - தானே கத்தரித்துக் கொண்டவன். இன்னேனு நுடிவனோ - அடுத்து என்ன பேசுவான்? (பேசுவதற்கே முடியாதவன் ஆகிறான்). கடிவ கொடலியனு - வெட்டும் கோடாலியை. மொன்னெய - (அதன்) முனையை (வெட்டும் பகுதியை). முரிதவனு - துண்டாக்கியவன். வன்னத - வனத்தின். துருகள - மரங்களை. கடிவனேனோ - கத்தரிக்க முடியுமா?. இல்லை. வாதி - ஹே வாதியே. நின்ன - நீ ஒப்புக் கொண்டிருக்கும். வேதாந்தவனு - உபநிஷதாதி வேதங்களை (அல்லது பிரம்மசூத்ரங்களை). மன்னிஸதெ - கௌரவிக்காமல் (தவறான அர்த்தங்களை சொல்லி). புஸியெம்ப ஜகவன்னு - மித்யை என்று நீ சொல்லும் உலகினை. இன்யாதரிந்த - வேறான பிரமாணத்தினால் (பொய் என்று சாதிப்பாய்?). பன்னபடிஸி - (ஸத்ய என்று சொல்லும் வேதத்தை)

ஹிம்சித்து. வாக்யபீடெயிந்த கெடிஸுவெ - அழிக்கிறாய் (பொய் என்று அர்த்தத்தை கொடுக்கிறாய்). நின்னர்த்தவ - ஸத்ய ஷப்தத்திற்கு நீ சொல்லும் அர்த்தத்தை (வியாவஹாரிக ஸத்ய என்று நீ சொல்லும் அர்த்தத்தை). இன்னெந்து - மறுபடி எப்படி (வேறு பிரமாணங்களால்). ஸாதிபெ - நிறுவுவாய். ஹயவதனனவரொளு - ஸ்ரீஹயவதனனின் மக்களில் (விஷ்ணு பக்தர்களில்). எந்து நிந்து - எப்படி எதிர்த்து நின்று. வாதிபெ - வாதிப்பாய்?. வேத பிராமாண்யத்தையும் வேதாந்த சூத்ரங்களின் நிர்ணயங்களை ஒப்பியிருக்கும் நீ, ஜகத் மித்யாத்வத்தை நிறுவுவதற்கு, ஜகத் ஸத்யத்வ வாதிகளான விஷ்ணு பக்தர்களை வாதத்தில் எதிர்ப்பதற்கு சமர்த்தன் அல்ல என்பதே சரி).

* முன்னர் பத்ய 7ல் அயோக்யர்களை ஏமாற்றுவதற்கு புத்தன் செய்த உபதேச வாதத்தினால், பௌத்த மதம் அங்கீகரிக்கப்பட தகுதி பெறவில்லை என்று நிராகரித்திருந்தார். இந்த பத்யத்திலிருந்து துவங்கி, அத்வைத மத அல்லது மாயாவாத என்று புகழ்பெற்றிருக்கும் மதம், சஜ்ஜனர்களால் புறக்கணிக்கப்படுகிறது என்று ஆதாரங்களுடன் நிரூபிக்கிறார்.

இந்த நிரூபணையை விளக்க, புத்தனின் உபதேசங்களை விவரமாக அறிய வேண்டியது அவசியமாகிறது. புத்தன் அனைத்தும் க்ஷணிக, ஸ்வலக்ஷண, துக்க, ஷுன்ய மயமானது என்று நான்கு உபதேசங்களை செய்தானாம். புத்தன் இயற்றிய எந்தவொரு ஸ்வதந்த்ர கிரந்தமும் கிடைக்கவில்லை. இவனை பின்பற்றுபவர்கள், இந்த நான்கு உபதேசங்களை, தம் இஷ்டப்படி அர்த்தங்களை விவரித்து, பற்பல வியாக்யான கிரந்தங்களை இயற்றியிருக்கின்றனர். இந்த காரணத்தினால் பௌத்தரில், வைபாஷிகர், ஸௌத்ராந்திகர், மாத்யமிகர் மற்றும் யோகாசாரர் என்னும் நான்கு வகைகள் துவங்கின.

இவற்றில் மாத்யமிகர் முக்கியமானவர்கள். முதல் இரு வகையினர், அடுத்த இரு வகையினரைவிட அதிக வேறுபாடுகள் கொண்டவர் அல்ல. இவர்கள் பரமாணு ஸமுதாயமே, ஜகத் காரண என்றும், பரமாணுகள் கார்யத்தை துவக்கி அதே நொடியில் நாசம் அடைகின்றன என்று வாதிக்கின்றனர். மூன்றாம் மாத்யமிகரின்

ஸித்தாந்தத்திற்கும் மாயாவாத தத்வங்களுக்கும், எந்தவொரு வித்தியாசமும் காணப்படுவதில்லை. இந்த காரணத்தால் மாயாவாதம், ப்ரச்சன்ன பௌத்தம மத என்று அழைக்கப்படுகிறது. அத்வைத வியாக்யானகாரர்களில், சில சமகாலீன வியாக்யான கர்த்ருகள், மாயாவாதிகளை ப்ரச்சன்ன பௌத்தர் என்று அழைத்திருக்கின்றனர்.

ஆகையால், பௌத்தத்தில் முக்கியமானவரான மாத்யமிகர், தம் அனைத்து செயல்களையும் எவ்வாறு நிரூபிக்கின்றனர் என்பதை சிறிது விளக்கமாகவே அறிய வேண்டியிருக்கிறது. புத்தனின் முன்பு கூறிய நான்கு உபதேசங்களையும், மாத்யமிகர் 'பாவனா சதுஷ்டய' என்று அழைக்கின்றனர். இவை பிரத்யக்ஷ பிரமாணத்தினால் நிரூபிக்கப்படுகிறது என்கின்றனர்.

(அஸத்பதேஃஸன் ஸதஸத்விவிக்தம் மாயாக்யயா ஸம்வ்ருத்திமப்யதத்த |
பிரம்மாப்ய கண்டம் பத ஷூன்யசித்யை ப்ரச்சன்ன பௌத்தோயமத: ப்ரஸித்த: ||

மற்றும்

ஷூன்யம் ப்ரம்மாஹ்யமேனாஹு: ஸ்வாம்ஸ்ச வேதாந்தி நோப்யது: |
அதத்வாவேதகம் வேதம் வதந்தஸ்சரமே கலா: ||
(ஸ்ரீசுமத்வ விஜயம்)

இந்த ஸ்லோகங்களின் அர்த்தம்: அஸத் (இல்லாதது) என்னும் சொல்லுக்கு எதிராக, இந்த துஷ்டன், ஜகத்தினை ஸதஸத்விலக்ஷண என்று அழைத்தான். ஸம்வ்ருத்தியை மாயா என்னும் சொல்லினாலும், ஷூன்யசித்திக்காக அகண்டப்ரம்ம என்றும் சொன்னதால், இவன் ப்ரச்சனபௌத்தனே சரி. மாத்யமிகரின் 'ஷூன்ய'த்தை மாயாவாதிகள் பிரம்ம என்னும் பெயரால் அழைக்கின்றனர். இந்த அ-ஸஜ்ஜனர்கள் வேதத்தை (பிரம்மன் அவாச்யன் ஆகையால்) அதத்வாவேதக (தத்வங்கள் பிரம்மனை விளக்குவதில்லை) என்று சொல்லி, தம்மை வேதாந்திகள் என்று சொல்லிக் கொள்கின்றனர். )

இது எப்படியெனில்: பிரத்யட்சம், (வர்த்தமான) நிகழ் காலத்திற்கு சம்பந்தப்பட்டது. நிகழ் காலம் என்பது ஒரு நொடி மட்டுமே. பூத காலம் என்பது முந்தைய (சென்ற) நொடி. பவிஷ்ய என்பது எதிர் காலம். பிரத்யட்சம், நிகழ் காலத்தில் இருக்கும் வஸ்துவை மட்டும் ஈர்க்கிறது. முன்னர் பார்த்த பொருளே இது என்னும் 'ப்ரத்யபிக்ஞெ', உலகம் தற்காலிகமானது என்பதை எதிர்க்கிறது என்று அறிவது சரியல்ல. ஏனெனில், ப்ரத்யபிக்ஞையானது, பிரத்யட்சத்தினால் உண்டாவதில்லை.

அனுமானத்தினால்கூட ப்ரத்யபிக்ஞை, தற்காலிக தன்மையை நிராகரிக்கிறது என்று அறிவது சரியல்ல. ஏனெனில், ஞானம் தற்காலிக வஸ்துவை மட்டும் ஈர்க்கவல்லது. நித்ய வஸ்துவை அல்ல. என்னும் இத்தகைய வாதங்களால், தாம் அங்கீகரித்திருக்கும் பிரத்யக்ஷ மற்றும் அனுமானங்கள் என்னும் இரு பிரமாணங்களாலும் ஜகத் தற்காலிகமானதே என்று தெரிகிறது என்கிறார்கள். பிரதி வஸ்துவும் அது பிறந்த நொடியில் நாசம் அடைந்து தன்னைப் போல இருக்கும் வஸ்துவை பிறக்க வைக்கிறது. இது அதன் ஸ்வாபம். இதற்கு அது பிற காரணங்களை விரும்புவதில்லை.

ஒவ்வொரு வஸ்துவும் மற்ற வஸ்துகளிடமிருந்து வேறுபட்டவை - தன்னதேயான லட்சணம் உள்ளது. ஆகையாலேயே புத்தன் 'ஸ்வலட்சண' என்றான். ந்யாய வைஷேஷிகாதி மற்ற தர்ஷனகாரர்கள் (அந்த மதத்தவர்கள்) ஒப்புக் கொள்வதைப் போல, சம்சாரம் துக்கமயமானது. 'துக்க' என்னும் புத்தனின் உபதேசம் இதையே சொல்கிறது.

நான்காம் 'ஷூன்ய' என்னும் உபதேசத்தை மாத்யமிகர்கள் இவ்வாறு அறிகின்றனர். ஜகத் என்றும் இல்லை. இருப்பதைப் போல தோன்றி பிறகு இல்லாமல் (ஷூன்ய) ஆகிறது. கிளிஞ்சல்களைக் கண்டு அது வெள்ளி என்று மயங்கிய மனிதன், சிறிது நேரத்திற்குப் பிறகு 'நான் பார்த்தது வெள்ளி அல்ல' என்று ஞானம் பெறுகிறான். இங்கு வெள்ளி என்று நம்புவதற்கான கிளிஞ்சல் (அதிஷ்டான), அதற்கும் வெள்ளிக்கும் இருக்கும் சம்பந்தம், இது வெள்ளி என்னும் ஞானம், இந்த ஞானம் உள்ள

மனிதன், என இந்த நான்கில் ஏதாவது ஒன்று அஸத்ய என்று அறிந்தாலும், அனைத்தையும் அஸத்யமே என்று அறிவது சரியாகிறது. ஆகையால், இருப்பதைப் போல காட்டி, பிறகு இல்லாதது (ஷூன்ய) ஆகும் ஜகத் உண்மையிலேயே இல்லை என்று நிச்சயம் ஆகிறது. 'ஸத்' என்றால் இருக்கும் வஸ்து. இருப்பதை பல காரணங்களால் பிறந்தது என்று சொல்வது சரியல்ல. ஆகையால் ஜகத் 'ஸத்' அல்ல. இருக்கும் வஸ்துவை 'அஸத்' என்று சொல்ல முடிவதில்லை. ஸத்-அஸத் (இருப்பது, இல்லாதிருப்பது) என்று சொல்வதும் சரியல்ல. இவ்வாறு எந்த விதத்திலும் நிரூபிக்க முடியாத வஸ்துவை (ஜகத்தினை) பாரமார்த்திக ஸத்ய என்று அறிவதும் சரியல்ல (யதார்த்தம் அல்ல). இல்லாத வஸ்துவை இருக்கிறது என்று சொல்வது வெறும் கற்பனை. இதனை 'ஸம்வ்ருதி' என்று சொல்கிறோம்.

இந்த ஸம்வ்ருதியினால் ஸம்ஸ்காரம் பிறக்கிறது. இதனால், கர்ப்பத்தில் இருக்கும் சிசுவிற்கு 'நான்' என்னும் ஞானம் பிறக்கிறது. இவ்வாறு ஸம்வ்ருதியினால் தோன்றிய சம்ஸ்காரம் 'பாவனா சதுஷ்டய'த்தினால் நாசம் அடைந்தால், 'நான்' என்னும் ஞானத்தினால் பிறந்த சம்ஸ்காரம் இல்லை என்றாகி, 'நான்' என்பதும் நாசம் அடைந்து ஷூன்யரூபத்தின் நிர்வாணம் கிடைக்கிறது - இதுவே முக்தி.

நான்காம் வகையினர் 'யோகாசாரர்'. விக்ஞானமே தத்வ என்றும் அதே ஜகதாகாரமாகி தோன்றுகிறது என்றும், ஞானஞேயங்களுக்கு அபேதத்தை அறிந்து, மாத்யமிகர்களின் 'ஷூன்ய'த்தின் ஸ்தானத்தில் 'விக்ஞான'த்தை வைத்து தம் மத பிரமேயங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

இவ்வாறு புகழ்பெற்றிருக்கும் பௌத்தத்தின் நான்கு வகைகளையும் ஸ்ரீபாதராயணர் பிரம்ம சூத்ரங்களின் 2-2ம் பாதத்தில் கண்டித்திருக்கிறார். அங்கு 7ம் அதிகரணத்தில் வைபாஷிக ஸௌத்ராந்திகரனையும், 8ம் அதிகரணத்தில் மாத்யமிகரின் ஷூன்ய வாதத்தையும் நிராகரித்திருக்கிறார். ஷூன்யவாத நிராகரணையினால், ஷப்த பேதத்தினால் மட்டுமே அதே தத்வங்களை நிரூபிக்கும் மாயாவாதம் நிராக்ருத என்று புரிகிறது.

9ம் அதிகரணத்தில் நான்காம் யோகாசாரர்களை நிராகரித்து நிர்ணயங்களை சொல்லியிருக்கிறார். ஸூத்ரபாஷ்யாதி கிரந்தங்களை குருவிடமிருந்து விளக்கமாக கேட்டு விவரங்களை அறிய வேண்டும். கிரந்தம் பெரிதாகிவிடும் என்பதால் இங்கு மிகவும் சுருக்கமாக சொல்லியிருக்கிறோம்.

** இந்த பத்யத்திலிருந்து ஜகத்தினை மித்யை என்று வாதிப்பதற்கு வாய்ப்பே இல்லை என்று தக்க உதாரணங்களுடன் விளக்கியிருக்கிறார். 'மித்யா' என்பதின் அர்த்தத்தை மாயாவாதிகள் இவ்வாறு செய்தால், கிளிஞ்சலில் தெரிந்த வெள்ளி மித்யை எனப்படுகிறது. அது முதலில் இருந்திருக்கவில்லை. இது வெள்ளி அல்ல என்று பிறகு தோன்றிய சிந்தனைக்குப் பிறகு அங்கு வெள்ளி இல்லை. சிந்தனை தோன்றிய காலத்தில்கூட அங்கு வெள்ளி இல்லவேயில்லை. இருந்ததைப் போல தோன்றியது அவ்வளவே. ஆகையால் 'நாஸ்தி நாஸீன்ன பவிஷ்யதி இத்யாகாரக ஞானவிஷயத்வம் மித்யாத்வம்' அதாவது - இல்லை - இருந்திருக்கவில்லை - இருக்கப் போவதும் இல்லை என்னும் ஞானத்திற்கு விஷயமாவதே மித்யாத்வம். இதனை மாயாவாதிகள், ப்ராதிபாஸிக ஸத்ய என்று அழைத்து, தத்வத்ருஷமான (கிளிஞ்சல்-வெள்ளியைப் போல) ஸத்யத்வ உள்ளது என்று சொல்லப்படும் ஜகத் வ்யாவஹாரிக ஸத்யத்வ உள்ளது என்கின்றனர்.

ப்ராதிபாஸிக ஸத்யத்வ உள்ள கிளிஞ்சல் வெள்ளிக்கு, அருகில் சென்று பார்த்தால் சரியான அறிவு உண்டாகிறது. ஜகத்திற்கோ, ஜீவ பிரம்ம ஐக்ய ஞானம் ஆன உடனேயே பாதஞான உண்டாகி, ஜகத் அனைத்தும் மித்யை, இருப்பது பிரம்மன் ஒருவனே என்னும் ஞானம் உண்டாகிறது. பிரம்மன் ஒருவனே பாரமார்த்திக ஸத்யத்வ உள்ளவன். ஜகத்தினை வ்யாவஹாரிக ஸத்ய என்று அழைப்பது மாயாவாதிகளின் குறியீடு மட்டுமே. நாமும் உலகத்தினை ஸத்ய என்று சொல்கிறோம் என்று சொல்லிக் கொண்டு, உலகத்தினை ஏமாற்றும் வேலை.

அஸத்யத்தையே ஸத்ய என்று அழைத்தால் அது ஸத்ய ஆகிவிடுமா? வ்யாவஹாரிக ஸத்ய என்னும் ஒரு சொல்லை

பயன்படுத்தி, உலகினை மித்யை என்று சொல்கிறோம் என்பது, தன் நாக்கினையே கத்தரித்துக் கொண்டு, பேசுவதற்கு முயல்வதைப் போல வீண் ஆகிறது. பேசத்தக்க நாக்கினை இழந்து (நாக்கு இல்லாமல்) சத்காரியத்தை செய்ததைப் போல. கோடாலியின் முனையை உடைத்துவிட்டு, காட்டில் இருக்கும் மரங்களை வெட்ட முயல்வதைப் போல, வீணான முயற்சியே ஆகும்.

பௌத்தர்களைப் போல வேதங்கள் அப்ரமாணங்கள் என்றே நினைத்தாலும், மக்களை ஏமாற்றுவதற்காக மாயாவாதி வேதங்களை பிரமாணம் என்கிறான். வேதங்கள் பரபிரம்மனை ப்ரதிபாதிப்பதில்லை என்கிறான்.

ஜகத் ஸத்ய என்று சொல்வதில்லை என்கிறான். அங்கிருக்கும் ஸத்யாதி ஷப்தங்களுக்கு துர் அர்த்தங்களை சொல்கிறான். வேதங்களையும் அதன் அர்த்தங்களை விளக்குவதான பிரம்ம ஸூத்ரங்களையும் (வேதாந்தத்தை) பிரமாணங்கள் என்று அங்கீகரிக்கும் மாயாவாதிக்கு ஜகத்தினை மித்யை (பொய்) என்று சொல்வதற்கு எந்தவித பிரமாணமும் இல்லை என்கிறார்கள். ஸதாகமங்கள் அனைத்தும் ஜகத் ஸத்யத்வத்தை சந்தேகமின்றி நிரூபிக்கின்றன.

**நேஹ நானாஸ்தி கிஞ்சனனெம்ப[3] ஸ்ருதி நம்ம**
**ஸ்ரீஹரியல்லிப்ப கு[3]ணரூபங்க[3]ள**
**வ்யோஹக்கெ பே[4]த[3]வில்ல**
**ஸாஹஸ ஸத்வ நித்யத்வ**
**மஹத்வவெல்லவு ஸமவெந்து[3]**
**ஊஹிஸி ஏகமேவாத்[3]விதீய யெம்**
**பீ[3] ஹாடு[3] லயகாலதி[3]**
**ஈ ஹதி[3]னால்கு லோகவில்லெந்த[3]யிஸெ**
**மோஹவ பி[3]டு[3] ஹயவத[3]ன மாடு[3]வ ஜக[3]**
**தா[3]ஹானி யாத[1]ரிந்த[3] ||15**

நேஹ நானாஸ்தி கிஞ்சனெம்ப ஸ்ருதி - 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்னும் ஸ்ருதி, நம்ம - நம் பிரபுவான. ஸ்ரீஹரியல்லிப்ப - ஸ்ரீஹரியில் இருக்கும். குணரூபங்கள - (அனந்த) குணரூபங்களின்.

வ்யோஹக்கெ - சமூகத்திற்கு. பேதவில்ல - (ஒன்றுக்கொன்று) பேதம் இல்லை என்று (சொல்ல). ஸாஹஸ - உன் மன தைரியமே சரி. ஸத்வ நித்யத்வ மஹத்வவு - குண நித்யத்வ (மூன்று காலங்களில் ஒரே மாதிரியாக இருப்பது) மற்றும் மகிமைகள். எல்லவு ஸமவெந்து ஊஹிஸி - இந்த அனைத்தும் (ஸ்ரீஹரி மற்றும் ஜீவர்களுக்கு) சமானமானவை என்று (தவறாக) சொல்லி. ஏகமேவாத்விதீய எம்பீ ஹாடு - 'ஏகமேவாத்விதீயம்' என்னும் ஸ்ருதி ரூபத்தின் இந்த பாடலை பாடிக்கொண்டு (பிரளய காலத்தில் பிரம்ம வஸ்து ஒன்றே இருந்தது என்று இந்த ஸ்ருதி சொல்வதாக நினைத்து). லயகாலதி - பிரளய காலத்தில். ஈ - ஸத்யமான (ப்ரத்யக்ஷமாக தெரியும்) ஹதினால்கு லோகவில்லெந்தெயிஸெ - 14 லோகங்கள் இல்லை என்று மட்டுமே (இந்த ஸ்ருதி உனக்கு பொருந்துகிறது என்று நினைத்து, உதாரணம் கொடுக்கிறாய்). மோஹவ பிடு - இந்த பிரமையை (ஸ்ருதிக்கு இந்த அர்த்தம் ஆகலாம் என்னும் கெட்ட ஆசையை) விடு. (நேஹ நானாஸ்தி என்னும் ஸ்ருதி ஜீவேஷ்வரர்களின் அபேதஸாதகம் என்றும், 'ஏகமேவாத்விதீயம் பிரம்ம' என்னும் ஸ்ருதி, பிரளய காலத்தில் பிரம்மன் ஒருவனே இருந்து, மற்ற அனைத்தும் ஸ்வரூபத்தினால் நாசம் அடைகின்றன என்று சொல்கிறது என்று அறிய வேண்டாம்). ஹயவதன மாடுவ - ஸ்ரீஹரி செய்யும். ஜகத ஹானி - ஜகத்தின் (பிரளய காலத்தில்) அந்த நாசம். யாதரிந்த - எதனால் (எப்படி) ஆகிறது என்பதை அறிவாயா?

* அத்வைத மதத்தினவரால் மஹாவாக்கியங்கள் என்று சொல்லப்படும் ஸ்ருதிகளில் முக்கியமான 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' மற்றும் 'ஏகமேவாத்விதீயம்' என்னும் இரு ஸ்ருதிகள், ஜீவ பிரம்ம ஐக்ய ஸாதகங்கள் அல்ல என்று இந்த பத்யத்தில் சொல்கிறார்.

* பிரம்ம ஸத்யம் ஜகன்மித்யா ஜீவோ பிரம்மைவ நாபர: - பிரம்மன் ஸத்ய. ஜகத் பொய். ஜீவன் பிரம்மனே. வேறல்ல என்பதை 'வேதாந்த டிண்டிம' என்னும் கிரந்தம் அத்வைத மதத்தின் முக்கிய சித்தாந்தத்தை நிரூபிக்கிறது. அத்வைத வாதம், மாயாவாதம் என்றும் அழைக்கப்படுகிறது. மாயா ஷப்தத்திற்கு

ப்ரக்ருதி, லட்சுமிதேவி, பகவத் இச்சை, அஞ்ஞான ஆகிய பல அர்த்தங்கள் உள்ளன. 'மாயாவாத' என்பதில் மாயா என்னும் சொல் அஞ்ஞான என்பதை குறிக்கிறது. ஜீவ பிரம்ம ஐக்யம் - இந்த மதத்தின் பிரதான சிந்தனை - முக்கிய சித்தாந்தம்.

இவ்வாறு இருக்கும் ஐக்யவாதிகளில் பற்பல வகைகள் உள்ளன. அவ்வாறு கேவல- ஐக்யவாதிகள் மற்றும் பேதாபேத வாதிகள் என்று இரு வகைகள் முக்கியமானவை. கேவல- ஐக்யவாதிகள் தம் சாதனைக்காக செய்யும் செயல்களால், இவர்களில் ஏகஜீவவாத மற்றும் பஹுஜீவவாத என்னும் வேறுபாடுகள் தோன்றின. அஞ்ஞானம் - பாவ ரூபமானது மற்றும் அனாதி. ஆனாலும் அது ஸத்யமல்ல, அஸத்யமும் அல்ல. அனிர்வசனீயமானது. அஞ்ஞானம் ஷாஸ்திர தத்வஞானத்தினால் களைகிறது. ஆகையால், அஞ்ஞான, அவித்யை ஆகிய சொற்களால் அழைக்கப்படுகிறது. இந்த அஞ்ஞானம் மாயா மற்றும் அவித்யை என்று இரு விதங்களாக இருக்கின்றன.

மாயாவிசிஷ்ட பிரம்மனே ஈஷ்வரன். இவன் மாயாமயங்களான சர்வக்ஞத்வ, ஸர்வேஷ்வரத்வாதிகள் உள்ளவனாக உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாராதிகளை செய்கிறான். ஜகத் கூட ஸத், அஸத், ஸதஸத் என எதுவுமே அல்லாத அனிர்வசனீயமான (இதுதான் என்று சொல்ல முடியாத) மித்யாவஸ்து. இதற்கு மாயையே உபாதான காரணம். ஈஷ்வரனின் ஸ்ருஷ்ட்யாதிகளும் மாயாமயங்களே - மித்யைகளே. ஈஷ்வரன் தன்னிடம் சேர்ந்த பிரம்ம வஸ்துவை யதார்த்தமாக அறிந்திருப்பதால், அவனுக்கு மோகம் அல்ல. ஆனாலும் அந்த ஜகத்தினை பார்க்கிறான். மேலும், அவித்யா கொண்ட பிரம்மனே ஜீவன். அந்த பிரம்மனின் பிரதிபிம்பத்தில், அவித்யையே உபாதான காரணமாக உள்ள மித்யாபூதமான 'அஹங்கார' என்னும் விஷயம் நிரம்பியிருக்கிறது. அது (அஹங்காரம்) ஞானஷக்தியை அடைந்து மனஸ் என்றும், கர்த்ருத்வ ஷக்தியை அடைந்து ப்ராண என்றும் அழைக்கப்படுகிறது.

கர்த்ருத்வ, போக்த்ருத்வ, ஸுகதுக்காதிகள் ஆகியவை கர்வத்தின் தர்மங்கள். இவை ஆத்மரில் நிரம்பியிருக்கின்றன. இவ்வாறு

அறிந்தவர்கள் கேவல- ஐக்யவாதிகள். பேதாபேதவாதிகள், ஜீவேஷ்வரர்களில் பேத மற்றும் அபேதங்கள் இரண்டையும் ஒப்புக் கொள்கின்றனர். அபேதம் ஸ்வாபாவிகமானவை என்றும் பேத ஔபாதிக என்றும் சொல்கின்றனர்.

நிஷ்காம கர்மத்துடனான ஐக்யஞானத்தினால் உபாதி நாசமடைந்து பிரம்மத்வம் கிடைக்கிறது என்கிறார்கள். இதில்கூட மூன்று வகைகள் இருக்கின்றன. இவ்வாறு பற்பல வகைகளைக் கொண்ட மாயாவாதத்தை ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதர், விஷ்ணுதத்வ நிர்ணய என்னும் தம் கிரந்தத்தில் கண்டித்து, ஸர்வப்ரமாணங்களால் தூரமாக இருக்கும் (எந்தவித பிரமாணத்திலும் சிக்காத) இந்த மாயாவாதம் (ஜீவேஷ்வர ஐக்ய மற்றும் ஜகத் மித்ய தத்வங்களை சொல்லும் மதம்) மிகவும் கெட்டதாகும் என்று நிறுவியிருக்கிறார்.

மித்யா ஞான ரூபத்தின் இந்த துர்மதத்தினை விலக்கும் விஷயங்களை, விளக்கமான மற்றும் ஆழமான சாஸ்திர பயிற்சியினாலேயே அறிய வேண்டும். பண்டிதர்களுக்கு மட்டுமே தெரிந்திருந்த இந்த விஷயங்களை, உலக அனுபவம் கொண்ட அபண்டிதர்களுக்கும் புரியுமாறு விளக்கி, இந்த துஷ்ட மதத்தின் உண்மையான அறிவை வளர்ப்பதற்கு, இந்த கன்னட காவிய கிரந்தம், தன் நோக்கத்தை எப்படி நிறைவேற்றிக் கொள்கிறது என்பதை அடுத்த பத்யங்களிலிருந்து தெரிந்து கொள்வோம்.

** மாயாவாதிகள் வேத பிராமாண்யத்தை அங்கீகரிப்பதால் அனைத்து ஸ்ருதி வாக்கியங்களும் பிரமாணங்களே. அவற்றில் சிலவற்றை மஹா வாக்கியங்கள் என்னும் பதவியில் ஏற்றுவதற்கு எந்தவொரு காரணமும் இல்லை. வேத வாக்கியங்களில் ஸத்யத்தை அல்லது வியாவஹாரிக ஸத்யத்தை (பொய்யினை) சொல்கிறது என்னும் பகுதியை செய்வதற்கு சிறிதளவும் வாய்ப்பு இல்லை. அவற்றில் இவ்விதமான விசேஷங்களை சொல்வது வெறும் கெட்ட கற்பனை மட்டுமே.

வேதார்த்த நிர்ணயத்திற்காகவே வந்திருக்கும் பிரம்ம ஸூத்திரங்களில்கூட ஜீவ பிரம்ம ஐக்ய ஸாதனைக்கு எவ்வித

பிரச்னையும் வருவதில்லை. ஒன்றிரண்டு சூத்திரங்களை விட்டால், மற்ற அனைத்து ஸூத்திரங்களும் பேதத்தை சொல்வதே என்று அத்வைதிகள் ஒப்புக் கொள்கிறார்கள்.

(இந்த ஒன்றிரண்டு சூத்திரங்களை மற்றும் அவற்றிற்கு சம்பந்தப்பட்ட பற்பல பாஷ்யங்களையும், வியாக்யானங்களையும் ஆழமாக படித்தால், அவையும் ஐக்ய ஸாதகங்கள் அல்ல என்று புரிகிறது. கிரந்தம் பெரியதாகிவிடும் என்பதால் இந்த விஷயத்தை இத்துடன் முடிக்கிறோம்).

இந்த பத்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் மஹா வாக்கியங்கள் என்னும் இரு ஸ்ருதி வாக்கியங்களில் முதலாம் 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்னும் வாக்கியம், காடக உபநிஷத்தில் இருக்கிறது. யமதேவன் நசிகேதனுக்கு பிரம்மவித்யையை உபதேசம் செய்கிறான். இஹ - அனந்த குண ரூபங்களைக் கொண்ட பிரம்மனில். கிஞ்சன நானா - எந்தவொரு பேதமும். ந - இல்லை. அல்லது, இஹ - பிரம்மனில். கிஞ்சன - (குணகர்மங்கள்) ஏதோவொன்று இருக்கட்டும். நானா - பின்னமானது (பிரம்ம ஸ்வரூப பிரம்மனால் பின்னமல்ல. பிரம்மனுக்கும் பிரம்ம தர்மங்களுக்கும் எந்தவொரு பேதமும் இல்லை. பிரம்மன் தன் தர்மங்களால் மிகவும் அபின்னனே. என்பது இந்த வாக்கியத்தின் அர்த்தம்.

இதே ஸ்ருதியின் அடுத்த வாக்கியம் 'ம்ருத்யோ: ந ம்ருத்யும் கச்சதி ய இஹ நானேவ பஷ்யதி' என்று இருக்கிறது. பகவந்தனின் ரூபங்களில் அல்லது அவனின் குணகர்மாதிகளில் பேதத்தை அல்லது பேதாபேதங்களை அறிபவன், மரணத்திற்குப் பிறகு அதி துக்ககரமான தமஸ்ஸினை அடைகிறான் என்று அர்த்தம். இந்த ஸ்ருதி, ஜீவேஷ்வரரின் அபேதத்தை சொல்கிறது என்பதை அறிந்து, அல்பனான ஜீவனில் (பரமாத்மனின் மஹத்வ ஸ்வாதந்த்ர்யாதி குணங்களை சொல்வது மிகப் பெரிய தவறான செயல்களாகும்.

அடுத்து 2ம் வாக்கியத்தின் 'ஏகமேவாத்விதீயம்' என்னும் ஸ்ருதி சாந்தோக்ய உபநிஷத்தில் இருக்கிறது. 'ஏகமேவாத்விதீயம் பிரம்ம' என்றால், ஏகம் - சிறந்தவனும், அத்விதீயம் - சம-அதிக

இல்லாதவனும். பிரம்ம - குணபூர்ணனும். ஆகியிருக்கிறான் என்று இந்த வாக்கியம் பிரம்மனை சர்வோத்தமன் என்று நிறுவுகிறது. 'இவர் அத்விதீய பண்டிதர் அல்லது மல்லன்' என்று கூறினால், இவரே அனைவரையும் விட சிறந்த பண்டிதர் என்று அர்த்தம் வருகிறதே தவிர, வேறு பண்டிதர்களே இல்லை அல்லது வேறு மல்லர்களே இல்லை என்னும் அர்த்தம் வருவதில்லை.

'ஸதேவ ஸௌம்ய இதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் (என்னும் ஸ்ருதியில்) ஸத் - ஷப்த வாச்யனான நாராயணன் என்னும் பரபிரம்மன் (ஏகம்) அவயவ குண கர்மாதிகளால் பேதம் இல்லாதவனும், ஸம-அதிக இல்லாதவனும் ஆகியிருக்கிறான் என்றும், கூறப்பட்டாலும், பிற வஸ்துகள் எதுவும் இருந்திருக்கவில்லை என்று அறிவது (அல்லது) மற்றும் பிரம்மபின்னமான சமஸ்த வஸ்துகளையும் அஸத்ய என்றும் சொல்வது சரியல்ல. அப்படி நினைப்பது மிகவும் தவறானதாகும். ப்ரக்ருதி, ஜீவ முதலான அன்ய வஸ்துகள் அனைத்தும் பிரளய காலத்தில் ஸ்வரூபத: நாசம் அடைவதில்லை. ஸூக்ஷ்ம ரூபத்தினால் நிஷ்க்ரிய நிலையை அடைந்திருக்கின்றன.

** ஸ்ரீஹரி அனந்தரூபங்களைக் கொண்டிருக்கிறான். ஒவ்வொரு ரூபமும் அனந்தகுண பரிபூர்ணமானவை. ஒவ்வொரு குணமும் தனித்தனியாக அனந்த பிரகாரங்களைக் கொண்டவை (ஞான விக்ஞான பிரக்ஞான ஆகியவற்றைப் போல - மோத பிரமோதாதிகளைப் போல). ஒவ்வொரு குணமும் ஸர்வகுணாத்மகமானவை. ஞானமே ஆனந்தாதிகள் ஆகியவை. அதாவது, ஞானம் ஆனந்தத்திலிருந்து வேறுபடாதது. அனைத்து ரூபங்களும் அவற்றின் குணக்ரியைகளால் வேறுபடாதவை. ஒவ்வொரு குணத்தின் விசேஷ பிரகாரங்கள்கூட திரும்ப குணபூர்ணங்களே. ஒவ்வொரு ரூபத்தின் மற்றும் அனைத்து ரூபங்களின், ரூப குண க்ரியைகள் அனைத்தும் பரஸ்பரம் அபின்னங்களே. ஒவ்வொரு ரூபமும் தனக்குள் அனந்த ரூபங்களைக் கொண்டிருக்கின்றன. இந்த அற்புத மகிமையை 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்னும் ஸ்ருதி சொல்கிறது.

** பிரளய பிரகாரத்தை அறியாமல் 'ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்கியத்திற்கு பரமாத்மன் ஒருவனே இருந்தான். வேறு எதுவுமே இருந்திக்கவில்லை என்று அறிவது, தவறான புரிதல் ஆகும். பிரளயங்கள் - நித்ய, தைனந்தின, ப்ராக்ருதிக, ஆத்யந்திக என்று 4 விதங்கள் ஆகும்.

'ஸதேவமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்' என்று சொல்வதில், குறிப்பிடப்படுவது மஹாபிரளயம். அதுவே 'ப்ராக்ருதிக' லயம் என்பது. பஞ்சபூதங்கள் தம் உற்பத்திற்கு காரணமான 1. அஹங்கார தத்வத்திலும் அது தன் உற்பத்திக்கு காரணமான 2. மஹாதத்வத்திலும், இப்படியே மஹத் தத்வம் 3. அவ்யக்த தத்வத்திலும் லயம் அடைகின்றன. அனைத்து ஜீவ சேதனர்களும், தம் ப்ராக்ருத தேகங்களை விட்டு, லிங்க தேகம் மட்டுமே கொண்டவர்களாகி, கருட சேஷ மார்க்கத்தினால் சதுர்முக பிரம்மனில் வந்து சேர்கின்றனர்.

பிறகு லக்ஷ்ம்யாத்மக விரஜா நதியில் ஸ்னானம் செய்து, லிங்க தேகங்களை விட்டு, அனைத்து சுஜீவர்களும் வெறும் ஸ்வரூப தேகத்தினால் ஸ்திதர் ஆகின்றனர். இவர்கள் அந்த கல்பத்தில் பிரம்மதேவனுடன் முக்தர் ஆவதற்கு தயார் ஆனபோது, மற்றும் அடுத்த ஸ்ருஷ்டியில் ஸ்தூல தேஹ சம்பந்த ரூபத்தின் உற்பத்தி உள்ள ஜீவர்களும், பிரம்மதேவனுடன் லட்சுமித்வாரா பரமாத்மனின் உதர பிரவேசம் செய்கின்றனர்.

லிங்கபங்கத்தை அடைந்தவர்கள் மற்றும் முந்தைய கல்பங்களில் முக்தரான ஜீவர்களும், மகிழ்ச்சியுடன் அங்கு தியானத்தில் ஈடுபடுகின்றனர். அடுத்த ஸ்ருஷ்டியில் வரத்தக்கவர்கள் அனைவரும் நித்ராவஸ்தையில் இருக்கின்றனர் (இந்த அனைவரும் ஸ-லிங்கிகளே). இவ்வாறு ஜகத் அனைத்தும் நஷ்டம் அடைந்தாலும், ஜடசேதனாத்மகமான ஜகத்திற்கு ஸ்வரூபத: நாசம் என்பது இல்லை. ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள்கூட மூல பிரக்ருதியில் லீனம் அடைவதை, ஸாமான்ய அவஸ்தையை அடைகிறது என்று சொல்லப்படுகிறது.

ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் ஸ்ரீஹரி தன் இஷ்டத்திற்கேற்ப வெளிப்படுத்திய மூல ப்ரக்ருதி, 'விஷம ஸ்திதியை' அடைகிறது. த்ரிகுணாதி ரூபத்தை அடைகின்றது. இந்த காரணத்தினால் குணவைஷம்யமே ஸ்ருஷ்டி, குணஸாம்யமே பிரளயம் என்று அறிய வேண்டும்.

(ஜட சேதன என்னும் இரண்டையும் கொண்ட ஜகத்தும், வ்யுத்க்ரமத்தினாலேயே லயம் ஆகிறது. அதாவது, முதலில் பிறந்தவற்றிற்கு, பிறகு லயம். பிறகு பிறந்தவற்றிற்கு முதலில் லயம். சேதனருக்கு லயம் என்பது ப்ராக்ருத தேஹ சம்பந்த தியாகம் மட்டுமே).

**அன்யவிஷமெம்ப$^{3}$ ஸ்ருதிய கேளு த்$^{3}$வாஸு**
**பர்ணஸயுஜா ஸஹவெம்ப$^{3}$ வேத$^{3}$வ நம்போ$^{3}$**
**நின்ன பெ$^{3}$ன்ன பி$^{3}$ட$^{3}$தி$^{3}$ஹ**
**அனேக ஜன்மத$^{3}$ க்லேஷவ நோடு$^{3}$ இ**
**ந்னன்யவெந்த$^{3}$ரெ புஸியெ**
**அன்யஷ்னன்யன்யோ எனிஸி முகுந்த$^{3}$னு**
**பூர்ணஸுக$^{2}$னல்லவெ**
**மான்ய ஹயவத$^{3}$ன்ன த்ரிவிக்ரம**
**நன்ன ஹயவத$^{3}$ன்ன த்ரிவிக்ரம**
**நன்ன தா$^{3}$ஸோஹம் என்னோ ஷாஸ்த்ரோக்தி**
**மன்னிஸி பா$^{3}$ளோ ஜீவ ||16**

அன்யமீஷமெம்ப - 'அன்யமீஷம்' என்னும் ஸ்ருதி. கேளு - ஸ்ருதி சொல்வதைக் கேள். த்வாஸுபர்ணா ஸயுஜ ஸஹவெம்ப - 'த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா' என்னும் வேதத - வேதத்தை. நம்பு - நம்புவாயாக (அது சொல்லும் ஜீவேஷ்வர பேதத்தில் நம்பிக்கை வை). நின்ன பென்ன பிடதிஹ - உன் முதுகுக்குப் பின் இருக்கும் (போகத்தினால் அல்லது ஸ்ரீஹரி பிரசாதத்தினால் நஷ்டமாகும் வரைக்கும் தவறாமல் ஜன்மாந்தரங்களில்கூட உன் பின்னேயே வரும்). அனேக ஜன்மத க்லேஷவ - பல பிறவிகளின் துக்கங்களை (துக்க காரணமான பாவத்தை). நோடு - (சிந்தித்து) அறிந்து கொள். இன்னன்யவெந்தரெ - இதற்குப் பிறகு (பின்ன என்னும் தெளிவான அர்த்தம் உள்ள சொல்லினை பயன்படுத்தி

ஜீவ பரமாத்மர்) அன்யர் என்று கூறினாலும், புஸியெ - பொய்யா? (பொய் சொல்கிறதா? - இல்லை). அன்னஷ்னன்னன்யோ எனிப - 'அனஷ்னன்னன்யோ அபீசாகஷீதி' என்பதில் இருக்கும் 'அனஷ்னன்னன்ய:' என்று சொல்லப்படும், முகுந்தன் - ஸ்ரீஹரி. பூர்ணஸுகனல்லவெ - பூர்ணானந்த ஸ்வரூபன் என்று புரிவதில்லையா?

மான்யஹயவதன்ன - ஜகத்பூஜ்ய ஸ்ரீஹயக்ரீவனே ஆன. த்ரிவிக்ரமனை - ஸ்ரீத்ரிவிக்ரம ஸ்வாமியை. தாஸோஹம் என்னோ - தாஸோஹம் (ஸோஹம் என்னாமல், உன் தாசன் நான் என்று) என்று வணங்கு. ஷாஸ்த்ரோக்தி மன்னிஸி - சாஸ்திர நிர்ணயத்தை அங்கீகரித்து (ஸ்ரீஹரியே சர்வ ஸ்வாமி என்னும் நிர்ணயத்தை ஆதாரம் கொடுத்து) பாளோ ஜீவ - ஹே (அஞ்ஞானி) ஜீவனே. பிழைத்துக் கொள். தமஸ் என்னும் அனர்த்தத்திற்கு செல்லாதே.

** முந்தைய பத்யத்தினால் 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' மற்றும் 'ஏகமேவா த்விதீயம்' என்னும் ஸ்ருதிகளுக்கு ஜீவேஷ்வரரின் அபேதத்தில் அர்த்தம் இல்லை என்று சொல்லி, அந்த வாக்கியங்களைப் போல (ஸ்ருதி வாக்கியங்களே ஆகையால்) பரமபிரமாணமான நிரவகாஷ சொற்களால் ஜீவேஷ்வரரின் பேதத்தை சொல்லும் ஸ்ருதிகளால் இந்த பத்யத்தில் பேதத்தை நிறுவுகிறார்.

பற்பல பிறவிகளிலிருந்து தொடர்ந்து வந்திருக்கும் கர்மபலனாகி நானாதுக்கங்களை அனுபவிப்பவன் ஜீவன். எப்போதும் இத்தகைய கர்ம போகங்கள் இல்லாதவன் ஈஷ்வரன். என்று சொல்லும் ஸ்ருதியையாவது அறிந்து, தான் பரமாத்மனிடமிருந்து வேறுபட்டவன் என்று அறிந்து கொள்ள வேண்டாமா? - என்கிறார்.

** த்வாஸுபர்ணா என்னும் ஸ்ருதி அதர்வண உபநிஷத்தில் இருக்கிறது. அது ஜீவேஷ்வரர்கள், வேறுபட்ட நித்ய தர்மங்கள் உள்ளவர்கள் என்று தெளிவாக சொல்லியவாறு, அவர்கள் பரஸ்பரம் நித்யபின்னர்கள் என்று ஆதாரபூர்வமாக நிர்ணயிக்கிறது. 'த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம்

பரிஷஸ்வஜாதே தயோரன்ய:பிப்பலம் ஸ்வாத்வத்தி அனஷ்னன்னன்யோ அபிசாகஷீதி'.

இதன் அர்த்தம். ஸயுஜா - எப்போதும் சேர்ந்திருக்கும் (பிரிவு இல்லாததான). ஸகாயா - அன்யோன்ய மித்ரர்களான. ஸுபர்ணௌ - பக்ஷி ரூபமான. த்வௌ - ஜீவ, ஈஷரெம்ப இருவர். ஸமானம் வ்ருக்ஷம் - ஒன்றேயான (இருவருக்கும் ஸமானமான தேகம் என்னும்) மரத்தினை. பரிஷஸ்வஜாதே - ஆலிங்கனம் செய்து கொண்டிருக்கிறார்கள். தயோ: - அந்த இரு பறவைகளின் நடுவில். அன்ய: - பின்னமான ஜீவன். பிப்பலம் - அந்த மரத்தின் (அரச மரத்தின்) பழத்தினை. (தேகத்தினால் வந்த கர்ம பலன்களை) ஸ்வாது - (எப்படிப்பட்ட சுவையாக இருந்தாலும், அதையே) நற்சுவை என்று. அத்தி - தின்கிறான். அன்ய: - பின்னனான மற்றொருவன் (ஈஷ்வரன்). அனஷ்னன் - கர்மபலன்களை (பாவ பலன்களான துக்காதி அஸார பாகத்தினை) உண்ணாமல். அபிசாகஷீதி - நன்றாக வீற்றிருக்கிறான்.

** 'ஸோஹம்' உபாசனையினால், (அந்த பகவந்தனே நான் என்னும் அனுசந்தானத்தினால்) தமஸ்ஸே கிடைக்கிறது. 'தாஸோஹம்' என்னும் சாஸ்திர நிர்ணயம் செய்த உபாசனையே உத்தம கதியைக் கொடுக்கிரது. 'ய ஏஷ ஆதித்யே புருஷோ த்ருஷ்யதே ஸோऽஹமஸ்மி ஸ ஏவாஹமஸ்மீதி' (சாந்தோக்ய). 'அஹம் பிரம்மாஸ்மி' (ப்ருஹதாரண்ய). ஆகிய ஸ்ருதிகள், ஜீவ பிரம்ம ஐக்யத்தை சொல்வதில்லை என்பதை, பாஷ்யாதி வியாக்யானங்களை படித்து அறிய வேண்டும். இந்த வாக்கியங்களின் தாத்பர்யம் இவ்வாறு இருக்கிறது.

ஆதித்யனின் உள் இருக்கும் புருஷனே அஹம், அஸ்மி ஆகிய சொற்களால் குறிக்கப்படுகிறான்.

அஹமஸ்ம்யாதிகா:ஷப்தா: - அந்தர்யாமிணி முக்யத:
(சாந்தோக்ய பாஷ்ய).
அந்தர்யாமிணமீசேஷம் அபேக்ஷ்யாஹம் த்வமித்யபி.
இமே ஷப்தா: ப்ரயுஜ்யந்தே ஸதி பேதேऽபி வஸ்துஷு ||
(பாஷ்ய).

ஸர்வாந்தர்யாமிகோ விஷ்ணு: ஸர்வனாம்னாபிதீயதே |
ஏஷோऽஹம் த்வமஸௌ சேதி ந து ஸர்வஸ்வரூபத: ||
(நாராயண ஸ்ருதி)

ஆகிய பிரமாணங்கள், அஹம்- த்வம்- அஸௌ ஆகிய சொற்கள் அந்தர்யாமியான விஷ்ணுவை சொல்கிறதே தவிர, அந்த சொற்களால் குறிக்கப்படும் சர்வவஸ்து ஸ்வரூபனே விஷ்ணு என்று அல்ல, என்று சொல்கிறது. 'அஹம், பிரம்ம, அஸ்மி ஷப்தத்தால் சொல்லப்படுபவன் நானே'. ஸர்வாந்தர்யாமியான விஷ்ணு அனைத்து இடங்களிலும், எப்போதும் மிகவும் அபின்னனே ஆகியிருக்கிறான். அந்த பகவத் ரூபங்களுக்கு அதிஷ்டானபூதமான வஸ்துகள், அவனிடமிருந்து எப்போதும் மிகவும் வேறாகவே இருக்கின்றன.

நாஹம் விஷ்ணுர் நஸ்வதந்த்ர: ந ச பூர்ணகுணோப்யஹம் |
மம ஸ்வாமி ஹரிர் நித்யம் ஸ்வதந்த்ர: பூர்ணஸத்குண: ||
விஷ்ணுர்மோக்ஷாதி தாதேதி விஷ்வம் பவதி ஷோபனம் |
ரக்ஷத்யேமேதி விஷ்வாஸ: ததீயோஹமிதி ஸ்ம்ருதி: |
ஷரணாகதிரேஷா ஸ்யாத் விஷ்ணௌ மோக்ஷ ப்ரதாயினீ ||

ஆகிய பிரமாணங்கள், சேவக பாவத்தினால் ஸ்ரீஹரியை வணங்குவதே நித்ய ஆனந்த அனுபவ நிலையான முக்திக்கான ஒரே சாதனையாகும் என்று சொல்கிறது. இவற்றின் பொருள் இவ்வாறு இருக்கிறது. நான் விஷ்ணு அல்ல. ஸ்வதந்த்ரன் அல்ல. குணபூர்ணனோ இல்லவே இல்லை. அனைத்து காலங்களிலும் ஸ்ரீஹரியே என் ஸ்வாமி. அவன் ஒருவனே ஸ்வதந்த்ரன். மற்றும் ஸத்குண பூர்ணன். 'ஸ்ரீவிஷ்ணுவே மோட்சபிரதனான ப்ரபு என்று அறிவது ஸர்வமங்களகரமாகும்'. 'நான் விஷ்ணுவின் சேவகன். அந்த ஸ்வாமி என்னை தவறாமல் காக்கிறான். என்னும் சிந்தனையை எப்போதும் விஷ்ணுவிடம் கொண்டிருப்பவனே முக்திபிரதமான 'ஷரணாகதி' உள்ளவன் (இதுவே மோட்ச பிரத ஷரணாகதி என்பது).

சாஸ்திர நிர்ணயம் இவ்வாறு இருந்தாலும் 'நானே பிரம்மன்' என்னும் தவறான உபாசனையை செய்பவர்களுக்கு,

'அன்யதோபாஸகா யே து தமோந்தம் யாந்த்யஸம்ஷயம்' (ஈஷாவாஸ்ய பாஷ்ய) அந்தம்தமஸ்ஸே கிடைக்கிறது என்பதில் எந்தவொரு சந்தேகமும் இல்லை.

**அரஸின ஆளெந்து3 பா3ளுவ மனுஜர**
**ஸ்தி2ரத1ர பா4க்3யவ நீவெல்ல நோடி3ரோ**
**அரஸு தானெம்ப3வகெ3**
**தரதரத3லி பா3ஹ க்லேஷராஷிக3ள**
**ஸெரெமனெயல்லிக்கெம்ப3**
**ஹரி தானெயென்னலு பௌண்ட்ரக த3னுஜன**
**ஷிரவ செண்டா3டி3த3னு**
**நரனஹம்பி3ரம்ம எனெ கொல்லது3ளிபனெ**
**ஸர்வேஷ்வர வேத3வ தந்த3 ஹயவத3ன**
**இந்தெம்ப3ர கொல்லெம்ப3 ||17**

அரஸின ஆளெந்து - அரசனின் சேவகனாக. பாளுவ - வாழும். மனுஜர - மனிதர்களின். ஸ்திரதரபாக்யவ - மற்றவர்களைவிட அதிகமான (குறையாத) செல்வத்தை. நீவெல்ல - நீங்கள் அனைவரும் (ஸ்ரீஹரி மகிமையை அறிவதற்கு விரும்புபவர்கள் அனைவரும்). நோடிரோ - பாருங்கள் (பார்த்து, இவரைப் போல, ஸ்ரீஹரியின் சேவகன் என்று அறியுங்கள்). அரஸு தானெம்பவகெ - நானே அரசன் என்பவனுக்கு. தெரதெரதி பாஹ - பற்பல விதங்களில் (வகைகளில்) வரும். க்லேஷராஷிகள - துக்கங்களை (நோடிரோ - பாருங்கள்). மத்து அரஸு தானெம்பவகெ - தானே அரசன் என்பவனுக்கு. (அரசன்) செரெமனெயலி - சிறைச்சாலையில். இக்கு எம்ப - இருங்கள், என்கிறான். ஹரி தானெ என்னலு - தானே ஸ்ரீஹரி என்று சொல்லிக் கொண்டால். பௌண்ட்ரகதனுஜன - பௌண்ட்ரக வாசுதேவ என்னும் தானவனை. ஷிரவ சிண்டாடிதனு - தலையை கத்தரித்து எறிந்தான். நரனு - மனிதன். அஹம் பிரம்ம எனெ - நானே பிரம்ம என்று சிந்தித்தால் (உபாசனை செய்தால்). கொல்லதுளிபனெ - கொல்லாமல் விடுவானா?. வேதவ தந்த - வேதத்தை (திருடிய தைத்யனைக் கொன்று) கொண்டு வந்த. ஸர்வேஷ்வர - சர்வஸ்வாமியான. ஹயவதன - ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி. இந்தெம்பர - இவ்வாறு அறிபவர்களை (தானே பிரம்ம என்பவர்களை).

கொல்லெம்ப - கொன்றுவிடு என்கிறான் (கடுமையான தண்டனைக்கு ஆளாக்குகிறான்).

** அரசனை வணங்கி, அவனின் அன்பிற்கு பாத்திரரான அரச சேவகர்கள், மற்ற பிரஜைகளைவிட, அரசனின் ஆதரவில் சுகமாக, பாதுகாப்பாக இருக்கிறார்கள் என்பது நாம் அனைவரும் அறிந்த நடைமுறையே. இப்படியே, ஸ்ரீஹரியை வணங்கியவாறு அவனின் அருளுக்கு பாத்திரரான ஹரிபக்தர்கள், ராஜாதிராஜனும், எல்லையற்ற மகிமனும் ஆன ஸ்ரீஹரியின் பாதுகாப்பில் நித்யசுகிகளாக இருக்கிறார்கள் என்று அறிய வேண்டும் என்கிறார். ஸ்ரீஹரியினால் பக்தர்களுக்கு அனைத்து விதமான அருளும் கிடைக்கின்றன. த்வாரகா பட்டணத்தின் பிரஜைகள் ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி, இவ்வாறு பற்பல பாவங்களால் வணங்கி, அனைத்து விதங்களாலும் பாதுகாக்கப்பட்டனர் என்று ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

பவாய நஸ்த்வம் பவ விஷ்வபாவன த்வமேவ மாதாத்மஸுஹ்ருத்பதி: பிதா |
த்வம் ஸத்குருர்ன: பரமம் ச தெய்வதம் யஸ்யானுவ்யத்யா க்ருதினோ பபூவிம ||

நம் அனைவருக்கும் நீயே தாய். தந்தை. நண்பன். தலைவன் என அனைத்துமாக ஆகியிருக்கிறாய். ஸத்குருவும் பரதேவதையும் நீயே. உன்னை இவ்வாறு அறிந்து வணங்கி, லௌகிக மாதா பித்ரு ஆகியோரால் ஆகும் அனைத்து வித உதவிகளையும் அடைந்து தன்யர் ஆகியிருக்கிறோம். ஒரு தந்தையாக, தாயாக என அனைத்து விதங்களிலும் ஸ்ரீஹரியே கதி என்று உபாசிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

** ராஜ சேவகனைப் போல அரசனின் ஆதரவில் இருக்காமல் தானே அரசன் என்று சொல்லும் ராஜ துரோகிக்கு ஆகும் கதியும் நம் அனைவருக்கும் தெரிந்ததே.

ப்ரீதிஸ்ச குணோத்கர்ஷ ஞானாதேவ விசேஷதோ த்ருஷ்டா நாபேதக்ஞானாத்
அபேதஞானதப்ரீதிரேவோத்தமானாம் பவதி

காதயந்தி ஹி ராஜானோ ராஜாऽஹமிதி வதந்தம் ||
(விஷ்ணு தத்வ நிர்ணய)

மிகச் சிறந்த குணங்களால் பூர்ணன் என்னும் ஞானத்தினாலேயே பகவந்தன், விசேஷ ப்ரீதனாகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீஹரியின் பரமப்ரீதியானது மோட்சத்தை தரக்கூடியது - யக்ஞாதி கர்மத்தினால் வந்த பகவத்ப்ரீதி மோட்சத்தை தரக்கூடியதல்ல. அந்த பரம பிரசாதம் ஞானத்தினாலேயே. அபேத ஞானத்தினால் (ஜீவேஷ்வரர்கள் அபின்னர்கள் என்னும் ஞானத்தினால்) அல்ல. அபேத ஞானத்தினால் உத்தமருக்கு மகிழ்ச்சி உண்டாவதில்லை. ஸ்வோத்தமரில் இது காணப்படுகிறது. நானே அரசன் என்று சொல்பவனை அரசன் கொல்கிறான். (மரண தண்டனைக்கு அனுப்புகிறான்). ஆகையால், அபேத ஞானம் மோட்ச சாதகம் அல்ல என்பது மட்டுமல்ல, நித்ய நரகத்திற்கும் அதுவே காரணம் ஆகிறது.

** வேதங்களை அபகரித்த மது கைடபர் என்னும் தைத்யர்களைக் கொன்று, ரஸாதலத்திலிருந்து வேதங்களை கொண்டு வந்து, பிரம்மனிடம் திரும்பக் கொடுத்து அருளிய ஸ்ரீஹயக்ரீவரூபனான ஸ்ரீஹரியின் இந்த மகிமை, ஸ்ரீமத் பாகவதத்தில் இவ்வாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

தஸ்ம்யை பவான் ஹயஷிரஸ்தனுவம் ச
பிப்ரத் வேதத்ருஹாவதிபலௌ மதுகைடபாக்யௌ |
ஹத்வாऽऽனயச்ச்ருதி கணாம்ஸ்து ரஜஸ்தமஸ்ச
ஸத்வம் தவ ப்ரியதமாம் தனுமாமனந்தி ||

வேதங்களை அபகரித்த மதுகைடபர் என்னும் தேவ துரோகிகளைக் கொன்று ஸ்ருதி சமூகங்களை காப்பாற்றிய ஸ்ரீஹயக்ரீவ ரூபனான ஸ்ரீஹரி பிரம்மதேவனை அருளினான். ரஜ, தம, ஸத்வ என்னும் குணங்களை (பிரதிமைகளில் நுழைவதைப் போல நுழைந்து, அவற்றை காரணமாக ஆக்கிக் கொண்டு, ஜகத் ஸ்ருஷ்ட்யாதிகளை செய்து க்ரீடிக்கும் ஸ்ரீஹரியின் இந்த (ஸ்ரீஹயக்ரீவ) ரூபம், ஞானிகளுக்கு மிகவும் பிடித்தமான ரூபமாகும்.

வேதங்களை காப்பாற்றிய இந்த ரூபமே அனைத்து வித்யா-ப்ரதிபாத்யமானது. அனைத்து நற்சாஸ்திரார்த்தத்தின் துவக்கத்தில் ஸ்ரீலட்சுமி ஹயக்ரீவனை வணங்குவது இந்த காரணத்தினாலேயே. 'ஸ்ரீமத் ஹனுமத்பீம மத்வாந்தர்கத ராமகிருஷ்ண வேதவியாஸாத்மக ஸ்ரீலட்சுமி ஹயக்ரீவாய நம:' என்று பரமபவித்ரமான இந்த நாமத்தை சொல்லி வணங்கி, சாஸ்திர கிரந்தங்களின் பாராயணங்களோ, பாட பிரவசனங்களோ துவக்குவது ஞானிகளின் சம்பிரதாயமாக இருக்கிறது. தன் குணங்கள் நிரம்பிய ஞானங்களாலேயே நற்பக்தர்களை அருள்வதற்காகவே, வேத ஞானத்திற்கு அனதிகாரிகளான அயோக்யர்கள் வேதங்களை அபகரித்தபோது, ஸ்ரீஹரி அந்த அசுரர்களை வென்று, வேதங்களை காப்பாற்றினான். இவ்வாறு இருக்கையில், தன் ஸர்வோத்தமத்வத்தை மறுத்து, தானே பிரம்மன் (குணபூர்ணன்) என்று சொல்லிக் கொள்ளும் ஜீவர்களை அருள்கிறானா ஸ்ரீஹரி?. அத்தகையவர்களை நித்ய துக்க ஸ்தானமான அந்தம்தமஸ்ஸில் தள்ளுகிறான் என்பது இதிலிருந்து விளங்குகிறது.

**லோகமாதெயெந்து$^{3}$ லகுமிய நாம அம்**
**பி$^{3}$கதே$^{3}$வியெந்து$^{3}$ கௌ$^{3}$ரிய பெஸரு வி**
**வேகிக$^{3}$ளெல்ல கேளி**
**ஈ குமதிக$^{3}$ளச்யுதோஹம் ஷிவோஹம் எந்தே$^{3}$கெ**
**பேளுவரெய**
**பே$^{3}$காயிதேனோ மாத்ருகாமியெம்ப$^{3}$**
**ஈ கஷ்டத$^{3}$ ப$^{3}$யிக$^{3}$ளு**
**ஸ்ரீகாந்த ஹயவத$^{3}$ன யோன:பிதாயெம்ப$^{3}$**
**ஸூக்தக்கெ தே$^{3}$வதெயாத$^{3}$ காரண**
**இவன குவரரு நாவு ||18**

லோகமாதெயெந்து - ஜகன்மாதை என்பது. லகுமிய - ஸ்ரீமஹாலட்சுமிதேவி. நாம - பெயர். அம்பிகதேவியெந்து - அம்பிகாதேவி என்பது. கௌரிய ஹெஸரு - சிவபத்னியின் பெயர். விவேகிகளெல்ல கேளி - விவேகம் உள்ளவர்கள் அனைவரும் (இனி நான் சொல்லப் போவதை) கேளுங்கள். இந்த குமதிகளு - (ஜீவேஷ்வர ஐக்யத்தை சொல்லும்) இந்த துர்புத்திகள்.

அச்யுதோऽஹம் - நானே ஸ்ரீஹரி. ஷிவோஹம் - நானே சிவன். எந்தேகெ பேளுவரய்ய - என்று ஏன் சொல்கின்றனர்?. (அவருக்கு) மாத்ருகாமி என்னும். ஈ கஷ்டத பைகளு - (மிகவும் துக்ககரமானது என்று விவேகிகள் நினைக்கும்) இந்த சகிக்க முடியாத திட்டுகள். பேகாயிதேனோ - பிடித்தமானதா? (ஹாகிரபேகு - இல்லையெனில், அச்யுதோऽஹம் ஷிவோऽஹம் என்று ஏன் சிந்திக்க வேண்டும்?). ஸ்ரீகாந்தஹயவதன - லட்சுமிபதியான ஸ்ரீஹயக்ரீவஸ்வாமி. யோ ந:பிதா யெம்ப ஸூக்தக்கெ - 'யோ ந:பிதா' என்னும் வேதத்தின் (ஸ்ருதி வாக்கியத்தின்). தேவதெயாத காரண - ப்ரதிபாத்ய தேவதையான காரணத்தால். நாவு - நாம் அனைவரும். இவன குவரரு - இவனின் மக்கள். (விசேஷமாக ஹரிபக்தர்கள் அனைவரும் இவனின் வாத்ஸல்யத்திற்கு பாத்திரரான மக்கள் - அச்யுதோஹம் என்று சிந்திப்பவர்கள் அல்ல).

** அஹம் பிரம்மாஸ்மி என்று உபாசிப்பவர்களில், விஷ்ணுவே ஜகத்காரணன் என்று சொல்பவரும், சிவனே ஜகத்கர்தன் என்று சொல்பவரும், சூர்யாதி பிற தேவதைகளே ஜகத் கர்த்தன் என்று அறிபவரும், இருக்கிறார்கள். இந்த ஐக்யோபாஸக வகையினர், ஜகத் கர்தன் என்னும் தாம் சொல்லும் தேவதையினால் தாம் அபின்னர் என்று உபாசிக்கின்றனர். இந்த அனைவரையும் குறித்தான லௌகிக ஆதாரம் இந்த பத்யத்தில் இருக்கிறது. தானே விஷ்ணு என்னும் துஷ்ட சிந்தனைகூட மாத்ருகாமி என்னும் மகா பாவச் செயலுக்கு வழிவகுக்கிறது.

இந்த மஹாபாவம் அனைத்து பாவங்களில் மிகக் கொடுமையானது. அதற்கு கிடைக்கும் பலன் அந்தம்தமஸ்ஸே ஆகிறது. மாத்ருகாமி என்று அழைக்கப்படும் மனிதனுக்கு உலகத்தில் உண்டாகும் அவமானம் மற்றும் மனநிலையை நினைத்தால், ஜகன்மாதையை ஸ்வ-பத்னி ஸ்தானத்தில் சிந்திக்கும் மூர்க்கன், இஹத்தில் லோக- நிந்தையையும், பரத்தில் அதோகதியையும் அடைகிறான் என்பதில் என்ன வியப்பு? - துர்கதியே நிச்சயம் என்று தெளிவாகப் புரிகிறது.

அந்தம் தம:ப்ரவிஷந்தி யேऽவித்யாமுபாஸதே || (ஸ்ருதி)

மக்னஸ்ய ஹி பரேऽஞானே கிம் ந துக்கதரம் பவேத் || (மோக்ஷதர்ம)

ஆகிய ஸ்ருதிஸ்ம்ருதிகள் ஐக்யோபாஸனையினால் தவறாமல் கிடைக்கும் மகாதுக்கத்தை சொல்கிறது.

** யோ ந: பிதா ஜனிதா யோ விதாதா தாமானி வேத புவனானி விஷ்வா (ரிக்வேத). யாரொருவன் நம் அனைவரின் (அனைத்து ஜகத்தின்) மக்களின் - தந்தையாக இருக்கிறானோ, மற்றும் யார் ஸர்வபிரகாரத்தினால் தன் மூலமாக படைக்கப்பட்ட ஜகத்திற்கு போஷகனாக இருக்கிறானோ, மற்றும் யார் அனைத்து உலகங்களையும், அங்கிருக்கும் எண்ணிக்கையற்ற ஜீவர்களின் ஸ்வரூபங்களையும் அறிந்திருக்கிறானோ, என்னும் அர்த்தத்தை கொடுக்கும் வேத வாக்கியம் ஸ்ரீஹரியே அனைவரின் முக்ய பிதன் என்று சொல்கிறது.

ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: |
தாஸாம் பிரம்ம மஹத்யோனி: அஹம் பீஜப்ரத: பிதா || (கீதை)

ஹே அர்ஜுனனே. அனைத்து யோனிகளில் நிரந்தரமாக பிறக்கும் அனைத்து பிராணிகளின் உற்பத்திக்கு ரமாதேவியே (மஹத்பிரம்ம) தாய். நானே மூலகாரணனான தந்தை (ஜீவபிரம்ம). இவ்வாறு ஸ்ருஷ்டி காலத்தில் மட்டுமல்லாமல் நித்யமும் பிறக்கும் பிராணிகளின் உற்பத்திக்குக்கூட ரமா நாராயணரே மாதாபித்ருகள் என்று தெரிவதால், தானே அந்த நாராயணன் என்று அறிந்து உபாசிக்கும் மித்யா ஞானிக்கு ஸர்வாதிக துக்க பிரதமான தமஸ்ஸே பலன் என்று சொல்வது தவறானது அல்ல. அது சரியே.

**அத்$^{3}$வைதவாதி$^{3}$ நின்ன வித்$^{3}$வன்மதத$^{3}$ல்லி**
**பு$^{3}$த்$^{3}$த$^{4}$தே$^{3}$வகெ$^{3}$ பெஸரித்$^{3}$த$^{3}$ காரணதி$^{3}$ந்த$^{3}$**
**அத்$^{3}$வயவாதி$^{3}$யெந்து$^{3}$**
**ராத்$^{3}$தா$^{4}$ந்தத$^{3}$ கு$^{3}$ரு ஷுத்$^{3}$தோ$^{4}$த$^{3}$ன முனி பே**
**ளித$^{3}$ பு$^{3}$த்$^{3}$த$^{4}$ மதவ**
**ஷுத்$^{3}$தா$^{4}$கி$^{3}$ ஷோதி$^{4}$ஸி ஸித்$^{3}$தா$^{4}$ந்த கதெக$^{3}$ள**
**ப$^{3}$த்$^{3}$த$^{4}$வாது$^{3}$தி$^{3}$ல்லவெ**

**பு$^3$த்$^3$தி$^4$வந்தரு கூடி$^3$ த்$^3$வைதமதவன்னெ**
**ஹொத்$^3$தி$^3$ ப$^3$து$^3$கி ஸிரிஹயவத$^3$னன பாத$^3$**
**பத்$^3$மவன்னெ ப$^4$ஜிஸிரோ ||19**

அத்வைதவாதி - ஹே மாயாவாதியே. (ஜீவபிரம்ம ஐக்ய வாதியே). நின்ன - உன் (நீ அங்கீகரித்திருக்கும் வித்வன்மதத்தில் - பாண்டித்ய பலத்தினால் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் மதத்தில். புத்ததேவகெ - புத்த தேவனுக்கு. பெஸரித்த காரண - அவனின் மதமே என்னும் பெயர் இருப்பதால் (மாயாமதம் பிரச்சன்ன பௌத்த மதமே என்னும் பெயர் இருக்கும் காரணத்தால்). அத்வயவாதியெந்து - அபேதவாதி என்று (அத்வைத மத என்னும் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறாய்). அழைக்கப்படுவாய். ராத்தாந்தத குரு - சித்தாந்தத்தை உபதேசித்த ஷுத்தோதன (முனி-ஜின) என்னும் முனி. சென்னாகி ஷோதிஸி - (புத்தனின் உபதேசத்தை) தன் சொந்த புத்தியினால் ஆராய்ந்து. அதாவது, தவறான அர்த்தங்களுக்கு இடம் இல்லாதவாறு செய்கிறேன் என்று அறிந்து. ஸித்தாந்தகதெகள - நிர்ணயகள் என்னும் வாதங்களை. பேளித புத்தமதவ - அந்த புத்த மதத்தையே (சற்று மாற்றி, கூறினான்). புத்தவாதுதில்லவெ - (உன் வாதத்தில்) இந்த தத்வங்களே அடங்கியிருக்கிறது அல்லவா? ஹெணெயல்பட்டிவே - சொற்களால் மட்டும் சற்று மாறியவாறு, வேறு மதமோ என்று சொல்வதைப் போல அழைக்கப்படுவதில்லையா? புத்திவந்தரு கூடி - விவேகிகள் அனைவரும் சேர்ந்து சிந்தித்து. த்வைதமதவன்னெ - (ஜீவேஷ்வரரின் பேதத்தை ஒப்புக் க்கொள்ளும்) த்வைத மதத்தையே. ஹொத்தி - அடைந்து (சேர்ந்து, அங்கீகரித்து). பதுகி - அனர்த்தங்களில் சிக்காமல். ஸிரிஹயவதனன பாதபத்மவன்னெ - ஸ்ரீஹயக்ரீவனின் சரண கமலங்களையே. பஜிஸிரோ - வணங்குங்கள்.

புத்தனின் உபதேச வாக்கியங்கள் மற்றும் அவற்றால் தவறான அர்த்தங்களை புரிந்து கொண்டு, வியாக்யானங்களை இயற்றிய சிஷ்யர்களின் செயல்களால், பௌத்தரில் பிறந்த வைபாஷிகாதி வகைகளின் விவரணையைப் பற்றி பத்ய 14த்தின் விளக்கத்தில் பார்க்கலாம். பௌத்த வகைகளில் முக்கியமான மாத்யமிகரின் ஸித்தாந்தங்களை பரிசீலிக்கும் சமகாலத்து மற்றும் தற்போதைய

பல வித்வாம்ஸர்கள், அத்வைத மதத்தை, ப்ரச்சன்ன பௌத்த மத என்று சிந்திப்பது தெரிய வருகிறது. புத்தனின் தந்தையான ஷுத்தோதனன். புத்தனின் உபதேசத்தை சொந்த புத்தியினால் ஆராய்ந்து, சுத்தமான பௌத்த தத்வங்கள் என்று, தானும் உபதேசித்தான்.

இவனுக்கு 'ஜின' என்று மற்றொரு பெயர் இருக்கிறது. அதனாலேயே இவனது மதம் 'ஜைன' மதம் என்று அழைக்கப்படுகிறது. வேதபிரமாண்யத்தையும், வேதோக்த யக்ஞாதி கர்மங்களையும் புறக்கணித்து, நாத்திகத்தை பரப்பும் அவைதிக பௌத்த மதம், வேதபிரமாண்யவாதிகளால் முழுமையாக கண்டிக்கப்பட்டு, பரத கண்டத்தில் தலையெடுக்க முடியாதவாறு விரட்டப்பட்டது. இந்த தகவல்களை 'மணிமஞ்சரி' முதலான கிரந்தங்களிலிருந்து அறியலாம். பத்ய 14த்தின் விவரணையில் உதாரணம் கொடுக்கபட்டுள்ள பிரமாண வாக்கியங்களால் அறிவதான, பௌத்த தத்வங்களையே 'பிரம்ம' முதலான மாற்று வார்த்தைகளால் சொல்லி, மாயாவாதம் (அத்வைதம்) தன்னை 'அத்வைத சித்தாந்தம்' என்று அழைத்துக் கொள்கிறது என்றும், விவேகிகள் பேதவாதிகளான 'தத்வவாதி'களையே சேரவேண்டும் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யோமகேஷனொப்$^3$ப$^3$ வ்யோமபாத$^3$னொப்$^3$ப$^3$**
**ப்$^4$ராமக வரவீவனொப்$^3$ப$^3$ கொல்லுவனொப்$^3$ப$^3$**
**க்ஷாமத$^3$க்ஷாதி$^3$க$^3$ள**
**ஸீமெயரியெ கொந்த$^3$வனொப்$^3$ப$^3$ ரக்ஷிஸி**
**த$^3$ மஹாபுருஷனொப்$^3$ப$^3$**
**ராமாத்$^3$யவதாரதி$^3$ந்த$^3$ முரித$^3$ பி$^3$ல்லு**
**ஆ மஹேஷனத$^3$ல்லவெ**
**ஸ்ரீமுடி$^3$யலி விஷ்ணுபதி$^3$யெம்ப$^3$ நதி$^3$ பொத்த**
**ஆ மஹாதே$^3$வ ஹயவத$^3$னனெந்தாஹ**
**நீ மானவனெந்தாஹெயோ ||20**

வ்யோமகேஷனொப்ப - ஒருவன் (சிவன்) கங்கா ஜலத்தை ஜடையில் தரித்தவன். வ்யோமபாதனொப்ப - மற்றொருவன் (விஷ்ணு) கங்கையை பாதத்தில் கொண்டவன்.

ப்ராமகவரவீவனொப்ப - ஒருவன் (சிவன்) சம்சார பிரமையை அதிகப்படுத்தும் வரங்களை (தைத்யருக்கு யாராலும் வெல்ல முடியாதவர்கள் போன்ற வரங்களை) கொடுப்பவனானால், கொல்லுவனொப்ப - (அப்படி வரம் பெற்று கர்வம் கொண்டவர்களை) சம்ஹரிஸுவவனு மத்தொப்பனு (விஷ்ணு அல்லது வாயுதேவர்). ஸீமெயெரியெ - உலகம் அறிந்திருப்பதைப் போல (அல்லது). சம்ஹாரரக்ஷணெகள எல்லெயன்னு - எல்லைகளை கவனிக்காமல். காமதக்ஷாதிகள - மன்மத, தக்ஷ முதலானவர்களையும். கொந்தவனொப்ப - சம்ஹரித்தவன் சிவன். ரக்ஷிஸிதா மஹாபுருஷனொப்ப - (பக்தர்களின் அபராதங்களை மன்னித்து) அருள்பவன் விஷ்ணு. (இந்த இருவரில், சிவ விஷ்ணுகளில்). ராமாத்யவதாரதிந்த - ஸ்ரீராமாதி அவதாரங்களை எடுத்து. முரித பில்லு - முறித்த வில். ஆ மஹேஷனதல்லவெ - அது சிவனுடையதல்லவா? (அது சிவ தனுஸ் அல்லவா?). ஸ்ரீமுடியலி - தன் பவித்ர ஜடையில். விஷ்ணுபதி எம்ப - (விஷ்ணுபாதத்தினால் பிறந்த காரணம்) 'விஷ்ணுபதி' என்னும் காரணப் பெயர் உள்ள. நதிஹொத்த - நதியை (கங்கையை தலையில்) தரித்த. ஆ மஹதேவனு - அந்த சிவன். ஹயவதனனெந்தாஹ - ஸ்ரீஹயக்ரீவன் எப்படி ஆனான்? நீ - நீ (சமமான லட்சணங்களைக் கொண்ட இவர்களில் யார் உத்தமர் என்பதை அறிவதற்கு அஸமர்த்தன் ஆனால்). மானவனெந்தாஹெயோ - மானவன் என்று அழைக்கப்படுவதற்கு எப்படி யோக்யன் ஆகிறாய்? (இவ்வளவு அறியாதவன் மனிதனே அல்ல - பிணமே ஆவான்).

** வ்யோம சொல்லிற்கு ஆகாயம் மற்றும் தண்ணீர் என்று அர்த்தங்கள் உண்டு. சிவன் தன் ஜடையில் கங்கையை தரித்திருக்கிறான். விஷ்ணு பாதத்தினால் பிறந்தவள் கங்கை. விஷ்ணுபத என்பது ஆகாயத்தின் மற்றொரு பெயர். விஷ்ணு பாதத்தினால் ஜனித்து ஆகாஷ மார்க்கத்தினால் பூமிக்கு இறங்கிய கங்கைக்கு, விஷ்ணுபதீ, ஆகாஷ கங்கா ஆகிய காரணப் பெயர்கள் உண்டு. 'ஆகாஷ' என்னும் சொல்லும் விஷ்ணு வாசகமே. ப்ரகாஷ என்னும் அர்த்தத்தைக் கொண்டது. பாத - என்னும் சொல், உத்தமரின் ஸ்வரூபத்தை சொல்கிறது. ஆகையால் 'வ்யோமபாத' என்றால் பிரகாஷ ஸ்வரூபன் என்னும் அர்த்தமும் வருகிறது.

சிவவிஷ்ணுகளின் நடுவினாலான வித்தியாசங்களை இந்த பத்யத்தில் நிரூபித்து, விஷ்ணுவின் உத்தமத்வத்தை ஆதாரங்களுடன் நிரூபிக்கிறார்.

** உலகப் பார்வையில் தவறு என்றே அழைக்கப்படாத அல்லது குறைவான அபராதங்களுக்கு சிவன் மரண தண்டனையைக் கொடுக்கிறான். மன்மதன், தக்ஷன் ஆகியோருக்குக் கொடுத்ததைப் போல. ஸ்ரீவிஷ்ணுவோ பக்தாபராத ஸஹிஷ்ணு. தன்னை காலால் உதைத்தவர்களையும் மன்னித்து அருளியவன். பிரம்ம சிவ விஷ்ணுவிடம் சென்று வந்த ப்ருகு ரிஷிகளின் பேச்சினைக் கேட்ட ரிஷிகள், ஸ்ரீவிஷ்ணுவே சர்வோத்தமன் என்று நிர்ணயம் செய்த கதையை பாகவதாதிகளில் பார்க்கிறோம்.

** ஸ்ரீவிஷ்ணு மற்றும் பிரம்மஷிவதிகளில் இருக்கும் வேறுபாடுகளை, அவர் மகிழ்ந்து வரபிரதானம் செய்யும் அம்சங்களை கவனித்து, ஸ்ரீமத்பாகவதம் ஆதாரத்துடன் இவ்வாறு சொல்கிறது.

ஷாபப்ரஸாதயோரீஷா பிரம்மவிஷ்ணு ஷிவாதய: |
ஸத்ய:ஷாபப்ரஸாதோऽங்க ஷிவோ பிரம்மா ச நாச்யுத: ||
அத்ரைவோதாஹரந்தீமம் இதிஹாஸம் புராதனம் |
வ்ருகாஸுராய கிரிஷோ வரம் தத்வாऽப ஸங்கடம் ||

வர சாபம் ஆகியவற்றை கொடுப்பவர்களில் பிரம்ம விஷ்ணு சிவ ஆகிய தேவதைகள் சமர்த்தர்கள். ஹே பரீக்ஷிதனே. சிவன் சீக்கிரமாக மகிழ்ந்து, அல்ப தவத்தையே மெச்சி, வர மற்றும் சாபங்களை கொடுக்கிறான். பிரம்மனும் அப்படியே. ஆனால், அச்யுதன் (விஷ்ணு) சுலபமாக மகிழ்வதில்லை. இந்த விஷயத்தை நிறுவுவதற்காக, ஞானிகள் புராதனமான கதை ஒன்றினை சொல்கிறார்கள்.

ருத்ரன், வ்ருகாஸுரனுக்கு வரத்தினைக் கொடுத்து அதனால் ஆபத்துக்கு ஆளாகி, விஷ்ணுவால் காப்பாற்றப்பட்டான். வரம் பெற்ற வ்ருகாசுரன் அதனால் தன்னையே அழித்துக் கொண்டான். இப்படியே அனேகர் பிரம்ம, ருத்ர, பார்வதி முதலானவர்களால், விரும்பிய வரங்களைப் பெற்று, அதனால் கர்வம் கொண்டு,

உலகினர்க்கு துன்பம் கொடுப்பவர்களாக இருந்து, ஸ்ரீகிருஷ்ணனால் கொல்லப்பட்டவர்கள் என பற்பல உதாரணங்கள் இருக்கின்றன.

விஷ்ணு பிரசாதத்தை அடைபவன், மோட்சாதி புருஷார்த்தங்களை அடைந்து தாமும் சுகமாக வாழ்ந்து, உலகிற்கும் சுகத்தைக் கொடுப்பவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் என்றும் கர்வம் கொண்டு உலகிற்கு கஷ்டத்தை கொடுப்பதில்லை. இப்படியே சிவன் முதலானவர்களால் கொடுக்கப்பட்ட சாபங்களும்கூட ஸ்ரீவிஷ்ணு பிரசாதத்தினால் பரிகாரம் ஆன உதாரணங்கள் ஏராளமாக உள்ளன.

** ராமாவதாரத்தில் சீதா ஸ்வயம்வரத்தின் காலத்தில், கிருஷ்ணாவதாரத்தில் கம்ஸ சம்ஹாரத்திற்கு முன்னர், ஸ்ரீராம மற்றும் ஸ்ரீகிருஷ்ணனால் முறிக்கப்பட்ட வில்'கள். சிவ வரத்தினால், வேறு யாரும் தூக்கி நிறுத்தமுடியாத சைவ தனுஸ்கள். ராமகிருஷ்ணர்கள் விஷ்ணுவின் அவதாரங்கள். இதனாலும்கூட சிவனைவிட விஷ்ணு உத்தமன் என்று சித்தமாகிறது என்னும் குறிப்பு தெளிவாகிறது.

**ஸ்துஹி ஸ்ருதம் க$^3$ர்த்தஸதா$^3$ யுவானெந்தா$^3$**
**ஹரன கூடெ$^3$ வேத$^3$ பேளிதாகி$^3$ ஆ**
**மஹாபுருஷனொப்$^3$ப$^3$**
**மஹிமெயுள்ள நரஸிம்ஹன தன்ன ஹ்ருத$^3$ய**
**கு$^3$ஹெயொளகி$^3$ப்பன**
**ஸிம்ஹனந்தெ ப$^4$யங்கரவீவன ஸ்துதி**
**கா$^3$ ஹந்த ஹரியெ பே$^3$கு**
**ஸ்ரீஹயவத$^3$னனெ இவனெந்து$^3$ ஸித்$^3$த$^4$ ந**
**ம்ம ஹிரியர மதவனு ஜரிவெயெந்தோ**
**ஸோஹம் எம்ப$^3$ மனுஜ ||21**

ஸ்துதி ஸ்ருதம் கர்த்தஸதா யுவானெந்து - 'ஸ்துஹி ஸ்ருதம் கர்த்தஸதா யுவானம்' என்று சொல்லும், வேத - வேதம். ஆ ஹரன கூடெ - அந்த மஹதேவனுக்காக (ருத்ரனுக்காக). பேளிதாகி - விதிக்கப்பட்டிருப்பதால் ஆ மஹாபுருஷனொப்ப - (பக்த ஸ்ரேஷ்டனான) மகாத்மனான சிவன். மஹிமெயுள்ள -

மகாத்மனான. (அல்லது அந்த மகிமை உள்ள புருஷன் ஒருவன் மகாமகிமனான. பரமபுருஷனான). ஹ்ருதயகுஹெயொளகிப்பன - (அனைவரின்) இதய குகைக்குள் இருக்கும். ஸிம்ஹதந்தெ பயங்கரவீவன - (காட்டு விலங்குகளுக்கு) சிம்மத்தைப் போல (துஷ்டருக்கு) பயபிரதமான துக்கம் கொடுப்பவனான. நரசிம்மன - நரஹரி. ஸ்துதிகெ - ஸ்தோத்திரத்திற்கு. ஆ - புருஷோத்தம என்று ஸ்ருதி பிரசித்தமான. ஹரியெ பேகு - ஸ்ரீஹரியே விஷயனாக வேண்டும். ஆஹந்த - ஆச்சரியம். ஸ்ரீஹயவதனனெ இவனெந்து - ஸ்ரீஹயக்ரீவனே ஸ்ரீஹரி என்று. (ஸ்ரீஹரி - ஸ்ரீநரசிம்மன் - ஸ்ரீஹயக்ரீவாபின்னன் என்று). ஸித்த - ஆதாரபூர்ணமானது. ஸோ஽ஹம் எம்ப மனுஜ - நானே பிரம்மன் என்று (ஹரி என்று - சிவன் என்று) உபாசிக்கும் ஹே மூர்க்கனே. நம்ம ஆ ஹிரியர - நம் (நமக்கு ப்ரியரான) பூஜ்ய குருகளான ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதரின். மதவனு - சித்தாந்த தத்வத்தை. ஜரிவெயெந்தோ - இவ்வாறு துச்சமென்று புறக்கணிப்பாய் (அவரின் சித்தாந்தம் ஸர்வ சஜ்ஜனர்களால் பின்பற்றுப்படுவதே ஆகும்).

** மனுஜ என்றதால், இதுவரை நிரூபிக்கப்பட்ட ஸ்பஷ்ட யுக்திகளை புரிந்து கொள்ள முடியாதவன், மனிதனாகப் பிறந்தவன் மட்டுமே. ஞானம் உள்ள மனிதன் அல்ல என்று சொல்லப்படுகிறது.

** உற்பத்தி, பாரதந்த்ர்யாதிகள் உள்ளவன் என்று சொல்லும் ஸ்ருதிகளை எதிர்த்து, பசுபதிக்கு (ருத்ரனுக்கு) ஜகத்காரணத்வத்தை சொல்லும் 'பாஷுபத' மதத்தை இந்த பத்யத்தினால் சரியல்ல என்று சொல்கிறார் என்று அறிய வேண்டும். ஸ்ரீஹயக்ரீவாபின்ன ஸ்ரீவிஷ்ணுவே ஸர்வோத்தமன் என்று நிறுவிய ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தமே சரியானது என்று ஆதாரங்களால் சொல்கிறார். பிரம்மசூத்ர 2-2-11ம் அதிகரணத்தில் ஸ்ரீபாதராயணர் பாஷுபத மதத்தை வேறு உதாரணங்களால் நிராகரித்திருக்கிறார்.

** ஸ்ருதி ருத்ரனிடம் தன் ஹ்ருத்குஹா வாசியான, சர்வவேத ப்ரதிபாத்யனும் சர்வோத்தமனுமான ஸ்ரீவிஷ்ணுவை உபாசிக்க ஆணையிடுகிறார். இவ்வாறு இருக்கையில், ருத்ரன் எப்படி

சர்வாதிகனாக இருக்க முடியும் என்னும் கேள்வியை இந்த பதம் கேட்கிறது. அந்த ஸ்ருதி வாக்கியம் இதுவே:

ஸ்துஹி ஸ்ருதம் கர்த்தஸதம் யுவானம்
ம்ருகன்ன பீம முபஹந்துமுக்ரம் |
ம்ருடா ஜரித்ரே ருத்ரஸ்தவானோ அன்யம்
தே அஸன்மிவபந்து ஸேனா: ||

ருத்ர - ஹே ருத்ரனே. கர்த்தஸதம் - இதய குகையில் வசிப்பவனான. யுவானம் - நித்ய தருணனான. ம்ருகம் ந - ம்ருகராஜனான ஸிம்மத்தைப் போல. பீமம் - பயங்கரனும். உபஹந்தும் - அருகில் இருந்து (ஹிரண்யக்ஷனை தன் துடையின் மேல் போட்டுக் கொண்டு) கொன்றவனும். உக்ரம் - எதிரிகளுக்கு பயங்கரனும். ஸ்ருதம் - ஸ்ருதி பிரதிபாத்யனுமான ஸ்ரீநரசிம்மனை. ஸ்துஹி - வணங்கு. ஸ்தவான: - இவ்வாறு நரஹரியை வணங்கும் நீ. ஜரித்ரே - (உன்னை) ஸ்தோத்ரம் செய்யும் எனக்கு. ம்ருடா - நன்றாக அருள்பவனாக ஆகு. தே ஸேனா: - உன் சேனைகளான பூதப்ரேதாதிகள். அஸ்மத் - என்னைப் போல உன் பக்தரான மற்றவர்களால். அன்யம் - பின்னனானவனை (நரசிம்ம பக்தர்கள் அல்லாத மற்றவரகளை) நிவபந்து - கொல்லட்டும். இந்த ஸ்ருதியில் சிவ அந்தர்யாமியான ஸ்ரீ நரஹரியை, சிவனால் வணங்கப்பட்டவன் என்று சொல்லியிருப்பதால், சிவனிடமிருந்து பின்னனும், உத்தமன் என்றும் தெளிவாக புரிகிறது.

**நீ நாயி எந்த$^{3}$ரெ கோபவேகோ மனுஜ**
**ஹீனரைக்யவ பேளலது$^{3}$ ப$^{3}$யிகளாத$^{3}$ரெ**
**மனெமனெக$^{3}$ளிகெ$^{3}$ போகி$^{3}$**
**தீ$^{3}$னதனவ தோரி தனுவ பொரெயுவ**
**நானா ஜீவரைக்யவ**
**ஸ்ரீநாத$^{2}$கெ பேள்வதே$^{3}$ஸு ப$^{3}$யிக$^{3}$ளோ மூட$^{4}$**
**கு$^{3}$ணஷூன்யனெம்பு$^{3}$வுது$^{3}$**
**மானவரிகெ$^{3}$ ப$^{3}$யிக$^{3}$ளாத$^{3}$ரெ ஹயவ**
**த$^{3}$னகெ$^{3}$ கு$^{3}$ணவில்லவெம்போ$^{3}$து$^{3}$ ப$^{3}$யிக$^{3}$ள**
**ல்லேனெலோ ப$^{3}$லுமூட$^{4}$ ||22**

மனுஜ - ஹே மானவனே. நீ நாயி எந்தரெ - (யாராவது) உன்னை 'நீ நாய்' என்றால். கோபவேகோ - ஏன் கோபம் கொள்கிறாய்? ஹீனரைக்யவ பேளலு - நீசர்களுடன் அபேதத்தை கூறினால் (தாழ்வானவர்களுக்கும் உத்தமனுக்கும் அபேதத்தைக் கூறினால்). அது - அப்படி ஐக்யத்தை சொல்வது. பைகளாதரெ - அதனை நிந்தை (திட்டு) என்று நீ அறிவதானால். மனெமனெகளிகெ போகி - ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று. தீனதனவ தோரி - தன் தீனத்வத்தை (அந்த வீட்டினரின் அருளுக்கு பாத்திரன் என்று) காட்டிக் கொண்டு. தனுவ - தேகத்தை. பொரெயுவ - அருளிக்கொள்ளும். நானா ஜீவர - பற்பல தீன மக்களுடன். ஐக்யவ - ஐக்யத்தை (அபேதத்தை - அவரே இவன் என்று). ஸ்ரீநாதகெ - (பிரம்மாதிகளுக்கும் சகல சம்பத் பிரதளான) லட்சுமிதேவியின் தலைவனான ஸ்ரீஹரிக்கு. பேள்வுது - சொல்வது. மூட - ஹே மூர்க்கனே. ஏஸு பைகளோ - எவ்வளவு நிந்தைகள் ஆகிறதோ? (அனைத்தும் திட்டுகளே ஆகும்). குணஷூன்யனெம்புது - நற்குணம் இல்லாதவன் என்பது. மான்வரிகெ - மனிதனுக்கு. பைகளாதரெ - நிந்தைகள் எனப்பட்டால். எலோ பலுமூட - ஹே மூர்க்க சிகாமணியே. ஹயவதனகெ - ஹயக்ரீவனுக்கு. குணவில்லவெம்போது - (நற்குண ஷூன்யன் என்று சொல்வது). நிர்குணன் என்று சொல்வது. பைகளல்லேனு - (ஸ்ரீஹரியின்) நிந்தைகள் இல்லையா? (அவை நிந்தைகளே ஆகும்).

** ஒருவனுக்கு இன்னொரு நீசனுடன் ஐக்யத்தை (இருவரும் ஒன்றே என்று) சொல்வது. அந்த உத்தமனின் நிந்தையே ஆகிறது என்பது அனைவரும் அறிந்ததே. ஜீவபரமாத்மர்கள் நீசோச்ச ஸ்வபாவ உள்ளவர்கள். முறையே அல்பஞத்வ - ஸர்வக்ஞத்வ, பாரதந்த்ர்ய - ஸ்வாதந்த்ர்ய, ஆகிய மகா எதிர்மறையான லட்சணங்களைக் கொண்டவர்கள். குண ஸ்ரேஷ்டனான பரமாத்மனுக்கு, துச்சனான ஜீவனுடன் ஐக்யத்தை சொன்னால், இதைவிட அதிகமான திட்டு என்பது எங்கு இருக்கிறது?. உலகில் இருக்கும் அனைத்து திட்டுகளையும் (அனைத்து ஜீவர்களிலும் இருக்கும் தோஷங்களை) பரமாத்மனுக்கு சொல்லியதைப் போல ஆகிறது. அனைத்து தோஷதூரன் என்றும் அனந்த கல்யாண குணபூர்ணன் என்றும் சொல்வது, வேதாதி அனைத்து சத்

ஆகமங்களின் மகா தாத்பர்யங்களாக இருக்கிறது. ஆனால், அதற்கு எதிராக பரமாத்மன், தோஷ பூர்ணன் என்று (ஐக்ய பிரதிபாதனையால்) சொல்லியதைப் போல ஆகிறது. ஸ்ரீவாதிராஜரின் யுக்திமல்லிகாதி அவரின் மற்ற கிரந்தங்களில், இந்த பத்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தின் விளக்கத்தினை காணலாம்.

பிரம்மைவ ஹீனயோனீஸ்தாப்ராப்ய ஸ்வேனைவ கர்மணா |
ஸம்ஸரேச்சேதியம் ஸர்வா காலீகஸ்ய கலே வத ||
ஸத்குணாபாவதோ நிந்தாஸ்தாஸ்து நைர்குண்யதினாம் |
மதே ஸ்யுர்பிரம்மணி பதே ஸர்வா:ஸர்வஸ்ய ஸம்மதா: ||
(யுக்திமல்லிகா)

(ஜீவனே பிரம்மன் என்றால்) பிரம்மனே ஜீவத்வத்தை அடைந்து தன் கர்மத்தினால், கிருமி, பூச்சி, பசு ஆகிய நீச யோனிகளில் பிறந்து, துக்கமய சம்சாரத்தில் உழல்கிறான் என்று அறிவது போலாகிறது. அப்படியென்றால், லோகத்தில் (ஜீவர்களில் பிரயோகிக்கப்படும் பெண்பித்தன், திருடன், குருடன், முடவன் ஆகிய) சொல்லும் திட்டுகளை யாருக்கு சொல்ல வேண்டும்? சொல். ஸ்ரீஹரி குணஷூன்யன் என்றால், கருணை, தைரியம், ஸ்வாதந்த்ர்யம், பூர்ணஞானம் ஆகிய நற்குணங்கள் இல்லாததால், அனைத்து உலக திட்டுகளையும் அவனுக்கும் சொல்ல வேண்டுமல்லவா? மற்றும்:

அக்ஞோ஽ஸீதி து யா நிந்தா ஸா மாயாஸ்ரயதோக்தித: |
பகவத்யுச்யதே கர்மபத்தத்வோக்த்யா ச பாபிதா ||
(யுக்திமல்லிகா)

அதாவது, (பிரம்மனே ஜீவன் என்பது மாயாவாதிகளின் சித்தாந்தம்) பிரம்மனுக்கு அ-வித்யா நிலையை தெளிவாக குறிப்பிடுவதால், பிரம்மன் அஞ்ஞானி என்றும், கர்மத்திற்கு கட்டுப்பட்டு நீச யோனிகளில் வருவதால் பாவி என்றும் கூறுவதாக ஆகிறது.

**நரரொளு பரநிந்தெ³ ஸல்லது³ ஸர்வே**
**ஷ்வரன நிந்தி³ஸுவுது³ த⁴ர்மவேனோ ஸஜ்ஜ**
**நரொடனாடெ³ந்தெ³ந்து³**

**து$^{3}$ருளர கூட$^{3}$ணாட$^{1}$வ பி$^{3}$டு$^{3}$ ஹரிய**
**சரணஸேவெய மாடு$^{3}$**
**து$^{3}$ரித ராஷிக$^{3}$ள நீட்$^{3}$யாடு ப$^{4}$க்திய பே$^{3}$டு$^{3}$**
**பரமபுருஷன நோடு$^{3}$**
**ஸிரிஹயவத$^{3}$ன கருணதி$^{3}$ந்த$^{3}$லி நினகெ$^{3}$**
**ஸிரிஸேருதிப்புது$^{3}$ பரக$^{3}$தியப்புது$^{3}$**
**நிருத ஸுக$^{2}$வு தப்பது$^{3}$ ||23**

நரரொளு - மனுஷ்யரில். பரனிந்தெ - பிறரை திட்டுவது. ஸல்லது - பொருந்துவதில்லை (சரி எனப்படுவதில்லை). (இப்படி இருக்கையில்). ஸர்வேஷ்வரனின் - ஸர்வஸ்வாமியான பகவந்தனை. நிந்திஸுவுது - திட்டுவது (தோஷம் கொண்டவன் என்று சொல்வது). தர்மவேனோ - சரியோ? அல்ல. ஸஜ்ஜனரொடனாடு - சஜ்ஜனர்களின் சகவாசத்தில் இரு. எந்தெந்து - என்றும் (எப்போதும்). துரளர - துர்ஜனரின். கூடணாடவ - கூடிப் பழகுவதை. பிடு - விட்டுவிடு. ஹரிய - ஸ்ரீஹரியின். ஸ்ரீசரணஸேவெய மாடு - பவித்ர பாத பத்மங்களை வணங்கு. துரிதராஷிகளன்னு - பாவராசிகளை. ஈட்யாடு - நாசப்படுத்து (புறக்கணித்து சுகமாக இரு). பக்திய பேடு - (ஸ்ரீஹரியின்) பக்தியை கேட்டுப் பெறு. ஸிரிஹயவதனன கருணதிந்தலி - ஸ்ரீஹரியின் கருனையால். பரமபுருஷன நோடு - (ஆ) புருஷோத்தமனை பார் (தரிசனத்தைப் பெறு). (ஸிரிஹயவதனன கருணையால்). நினகெ ஸிரி ஸேருதிப்புது - உனக்கு அனைத்து சௌபாக்கியங்களும் கிடைக்கின்றன. பரகதியப்புது - பரத்தில் (மரணத்திற்குப் பிறகு) உத்தமகதி கிடைக்கிறது. நிருதஸுகவு - நித்யசுகம் (மோட்சம்). தப்பது - தவறாமல் கிடைக்கிறது.

** சர்வேஸ்வரனான ஸ்ரீஹரியின் திட்டு மிகவும் அதர்மம் என்பது சாஸ்திரத்தால் ஒப்புக் கொள்ளப்பட்டதாகும் என்கிறார். ஸ்ரீஹரியை, நிர்குண, நிராகார, ஜீவாபின்ன என்று அறிவது தவறாகும். இதைவிட அதிகமான த்வேஷம் இல்லை. ஸ்ரீஹரித்வேஷத்தின் பலன் தமஸ். தமஸ்ஸில் த்வேஷ தாரதம்யத்திற்கேற்ப பகுதிகள் உள்ளன. அந்தம்தமஸ் என்பது அதிக த்வேஷிகளுக்கு கிடைக்கும், நித்யதுக்கத்தின், இருட்டான இடம்.

** ஹரி நிந்தனை செய்யாத சுஜீவிகளுக்கு நித்யானந்த ரூபத்தின் மோட்சபிராப்தி என்னும் பரமபுருஷார்த்தம் தவறாமல் கிடைக்கிறது என்றும், அதனைப் பெறுவதற்காக செய்ய வேண்டிய சாதனங்களில் சஜ்ஜன சகவாசம் முக்கியமானது என்று இங்கு நிரூபிக்கிறார். சஜ்ஜன சகவாசம் மோட்சத்திற்கு எப்படி சாதனம் ஆகிறது என்பதை ஸ்ரீமத் பாகவதம் இவ்வாறு சொல்கிறது.

ஸத்ஸங்கமோயர்ஹி ததெய்வ ஸத்கதௌ பராவ ரேஷே த்வயி ஜாயதே ரதி: ||
என்றும்,

ஸதாம் ப்ரஸங்கான்மம வீர்யஸம்பதோ பவந்தி ஹ்ருத்கர்ணரஸாயனா:கதா: |
தஜ்ஜோஷணாதாஸ்வபவர்க்க வர்த்மனி ஸ்ரத்தாவதீ பக்திரனுக்ரமிஷ்யதி ||

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் அர்த்தம் இவ்வாறு:

ஸஜ்ஜன ஸங்கத்தினால் ஸத்கதி தாயகனான, க்ஷாக்ஷர புருஷேஷ்வரனான உன்னில் பக்தி பிறக்கிறது. மற்றும் ஸாது சங்கத்தினால் மனதிற்கும் ஸ்ரவணேந்திரியத்திற்கும் உத்தம தேனைப் போல, சுகத்தைக் கொடுக்கக்கூடிய உன் மகிமைகளை விளக்கக்கூடிய உன் சரித்திரங்களின் சிரவணம் தினமும் ஆகிறது. இவற்றினை பக்தி சிரத்தையுடன் கேட்பதாலும், சாது சேவையினாலும் பகவத் அபரோக்ஷத்திற்கு சாக்ஷாத் சாதகமான பக்தி வளர்கிறது. ரஜோ குண ராஜன், சாது சமாகமத்தின் பலனாக உத்தம மனிதன் ஆகிறான்.

ந ஹ்யத்புதம் த்வச்சரணாப்ஜ ரேணுபிர் ஹதாம்ஹஸோ பக்திரதோக்ஷஜேமலா |
மௌஹூர்த்திகாத்யஸ்ய ஸமாகமாஸ்ச மே துஸ்தர்க்கமூலோSபஹ தோSவிவேக: ||
(பாகவத)

ஒரு முகூர்த்த காலம் மட்டும் இந்த உங்களின் நட்பினால், என் அவிவேகம் அழிந்தது. தம் பாததூளியில் இருக்கக்கூடிய (தம்

பாதசேவையில் நிரந்தரமாக நிலைத்திருக்கும்) புண்யாத்மன், அனைத்து பாபங்களிலிருந்து நீங்கி, அதோக்ஷஜனில் நிர்மலமான பக்தியை பெறுகிறான்.

வைராக்யம் இல்லாமல் தற்காலிக விஷயங்களில் சிக்கி படும் துன்பங்களுக்கு எண்ணிக்கையே இல்லை. அத்தகையவரின் சகவாசமும் சாதகனை வைராக்ய பக்திகளிலிருந்து வெகு தூரம் இழுத்துப் போகிறது. மற்றும் அதர்மத்தில் ஈடுபட வைக்கிறது. ஆகையால், துர்கதியே கிடைக்கிறது.

மஹத்ஸேவாம் த்வாரமாஹுர் விமுக்தே: |
தமோத்வாரம் யோஷிதாம் ஸங்கிஸங்கம் ||
(பாகவத)
என்று விஷயங்களில் ஈடுபடுவோரின் நட்பு, தமஸ்ஸிற்கான த்வாரம் என்று சொல்லப்படுகிறது.

சஜ்ஜன சங்கத்தை, ஜன்மாந்தர புண்ய பல ரூபமாக ஸ்ரீஹரியே கருணையளிக்க வேண்டுமே தவிர, நம் முயற்சியால் அது கிடைப்பதில்லை. ஆகையாலேயே, ‘பக்திய பேகு’ என்கிறார்.

பவாபவர்கோ ப்ரமதோ யதா பவேஜ்ஜனஸ்ய தர்ஹ்யச்யுத ஸத்ஸமாகம: || (பாகவத). அதாவது, சம்சாரத்தில் சுற்றும் ஜீவர்களுக்கு, சம்சாரத்திலிருந்து விடுபடும் காலம் அருகில் வந்தபோது மட்டும் சஜ்ஜன சங்கம் கிடைக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸாது சங்கத்தினால் பக்தியும், தேகம், ஐஸ்வர்ய ஆகிய இஹபர விஷயங்களில் வைராக்கியமும், விஷய சுகமானது அநித்யமானது என்னும் சிந்தனையும், உண்டாகிறது. ஷுத்தாந்த:கரணனாகி, தியானாதி தர்மானுஷ்டானங்களில் ஈடுபடுகிறான்.

யோகேன மய்யர்ப்பிதயா ச பக்த்யா மாம் ப்ரத்யகாத்மானமிஹா஽வருந்தே || (பாகவத) என்று சொல்லியிருப்பதைப் போல, சர்வகர்மங்களையும் பக்திபூர்வகமாக ஸ்ரீஹரியிடம் அர்ப்பித்து, தியானத்தில் (சமாதியில்) தன் அந்தர்யாமியான பிம்பரூபி ஸ்ரீஹரியை பிரத்யட்சமாக பார்க்கிறான்.

யேஷாம் ஞானம் ஸமுத்பன்னம் தேஷாம் மோக்ஷோ விநிஸ்சய: -- (பிரம்மதர்க்க). அபரோக்ஷத்தில் ஸ்ரீஹரி தரிசனம் ஆனவர்களுக்கு மோட்சம் (நிச்சயமாக) கிடைக்கிறது. மற்றும் யஸ்ய ஞானம் தஸ்ய மோக்ஷ இதி நாத்ர விசாரணா || (அக்னிபுராணம்). பிரம்மஸாக்ஷாத்காரத்தை அடைந்தவனுக்கு மோட்சம் நிச்சயம் - இதில் சந்தேகமே இல்லை என்று சொல்லும் பிரமாணங்கள், பரமபுருஷார்த்தமான மோட்சம் ஸ்ரீஹரியின் அபரோக்ஷ தரிசனத்தினாலேயே கிடைக்கிறது என்று சொல்கிறது.

முக்தி: தத: கோ விபவாதிரேக: (மத்வவிஜயம்). முக்தியை மீறிய மஹத் ஐஸ்வர்யம் இல்லை. வைபவத்தின் போகம் இல்லை. ஸ்ரீஹரி தரிசனத்தின் பலன் மோட்சம் மட்டுமல்ல. அதற்கு முன், அபரோக்ஷ ஞானிக்கு கிடைக்காதது எதுவும் இல்லை. ஸ்ரீஹரி மகிழ்தல் - அபரோக்ஷ தரிசனத்திற்கு முக்ய சாதனம் ஆகும். அந்த மகிழ்ச்சி இருந்தால் கிமலப்யம் பகவதி ப்ரஸன்னே ஸ்ரீ நிகேதனே - கிடைக்காததுதான் எது? (அனைத்துமே கிடைக்கிறது).

**ஷோதி4ஸெ ப3ந்த3 ப்ருகு3வனரியதெ3 வ்ருதா2**
**க்ரோத4வ மாடி3த3காரண விதி4 ருத்3ர**
**ராதி4க்யராது3தி3ல்ல**
**வேத3 ஈஷ ஸர்வக்ஞ எந்து3 பேள்த3**
**ஆதி3வஸ்துவ காணய்ய**
**போ3த4வில்லதெ3 மானவரந்தெ இருதிப்ப**
**ஆ தே3வரெந்தப்பரய்**
**ஸ்ரீத4வனெதெ3யனொத்3தா3க3லெ ஸர்வ**
**வேதி3 ஹயவத3னாத3காரண கோ1பி1**
**ஸதெ3 ஹெத்3த3யிவனாத3 ||24**

ஷோதிஸி பந்த - சோதிப்பதற்காக வந்த. ப்ருகுவனு - ப்ருகு ரிஷிகளை. அரியதெ - அறியாமல் (தம்மையே சர்வோத்தமன் என்று சொல்லிவிடுவார் என்று பயம் கொண்டவரைப் போல). க்ரோதவ மாடிதகாரண - (அந்த ரிஷியின் மேல்) கோபம் கொண்டதால். விதிருத்ரரு - பிரம்ம ருத்ரர் இருவரும். அதிக்யராதுதில்ல - உத்தமர் எனப்படுவதில்லை. வேத - வேதம். ஈஷ சர்வக்ஞ - ஈஸ்வரன் ஸர்வக்ஞன். எந்து பேள்த - என்று

கூறியது (வேத புருஷன் கூறினான்). ஆதிவஸ்துவ காணைய்ய - (பிரம்மாதிகளுக்கும்) காரணனான நாராயணனை பாருங்கள். (ஹே மூர்க்கனே. ஈஷ என்னும் சொல்லால் மூல நாராயணனையே குறிப்பிடுகிறார். வேறு யாரையும் அல்ல). அல்லது வேத - வேதம். ஈஷ சர்வக்ஞ எந்து - சர்வ நியாமகன், சர்வக்ஞன் என்று, பேள்த - கூறிய. ஆதிவஸ்துவ - அனைத்திற்கும் மூல காரணனான பரமபுருஷனை. காணைய்ய - அறிந்து பார். போதவில்லதெ - பூர்ணஞானம் இல்லாமல். மானவரந்தெ இருதிப்ப - (அல்பக்ஞரான) மனிதர்களைப் போல இருப்பவர்கள். ஆ - சர்வோத்தம (சர்வக்ஞ)ரைப் போல. தேவரெந்தப்பரை - ஸ்வாமி எப்படி ஆனார்? ஸர்வவேதி - சர்வக்ஞன் ஆனவர். ஹயவதனனு - ஸ்ரீஹயக்ரீவன். ஆதகாரண - ஆகையால். ஸ்ரீதவனு - லட்சுமிபதி. எதெயனு - தன் வக்ஷஸ்தளத்தை. ஒத்தாகலே - (ப்ருகு ரிஷி தன் பாதத்தினால்) எட்டி உதைத்தபோதே. கோபிஸதெ - (ம்ருது நுடிகளால் உபசரித்து) கோபம் கொள்ளாமல். ஹெத்தைவனாத - சர்வ தேவோத்தமன் ஆனான்.

பிரயாக க்ஷேத்திரத்தில் யாகத்தில் இருந்த ரிஷிகள் மும்மூர்த்திகளில் (பிரம்ம விஷ்ணு மஹேஷ்வரரில்) யார் சிறந்தவர் என்று பார்க்க வேண்டி, ப்ருகு ரிஷிகளை இந்த காரியத்தில் ஆலோசித்தனர். ப்ருகு ரிஷி முதலில் பிரம்மசபைக்கு சென்றார். வேண்டுமென்று பிரம்மனை அவர் வணங்கவில்லை. பிரம்மன் அவரை வரவேற்கவில்லை. மரியாதை தரவில்லை. கோபம் கொண்டவனைப் போல அமைதியாக அமர்ந்திருந்தான். அங்கிருந்து ப்ருகு ரிஷிகள் கைலாயத்திற்கு சென்றார்.

மஹேஷ்வரன் அவரைக் கண்டு, மரியாதைகளுடன் கட்டியணைக்க வந்தான். ஆனால், ப்ருகு ரிஷிகள், கபாலபாணி, ஸ்மஷானவாசி என்னும் காரணத்தால், மஹேஷ்வரனை தொட விரும்பவில்லை. அப்போது சிவன், சூலத்தை ஏந்தி அவர் மேல் வீசுவதற்கு வந்தான். பார்வதிதேவி சிவனை தடுத்து சமாதானம் செய்தாள். பிறகு ப்ருகுரிஷிகள் வைகுண்டத்தில் இருக்கும் விஷ்ணுவிடம் சென்றார்.

அப்போது ஸ்ரீவிஷ்ணு லட்சுமிதேவியின் துடையின் மேல் தலை வைத்து படுத்திருந்தார். அந்த காட்சியைக் கண்டு கோபம் கொண்ட

ப்ருகுரிஷிகள், விஷ்ணுவின் மார்பின் மேல் தம் காலால் உதைத்தார். விஷ்ணு உடனடியாக எழுந்து, லட்சுமி சமேதனாக அவரை வணங்கி, ப்ருகு ரிஷிகளின் பாத பிரக்ஷாலனம் செய்து வணங்கினான். ப்ருகு ரிஷிகள் மகிழ்ந்து திரும்ப வந்து, ரிஷிகளின் சபையில் தம் அனுபவத்தைக் கூறினார்.

அதன்படி அந்த சபை, விஷ்ணுவையே சர்வோத்தமன் என்று நிர்ணயித்தது. அந்த ஞானத்தினால் அந்த ரிஷிகள் அனைவரும் நற்கதியை அடைந்தனர். ஸ்ரீமத்பாகவத 10ம் ஸ்கந்த உத்தரார்த்த 93ம் அத்தியாயத்தில் இந்த சம்பவம் வருகிறது. பிரம்மருத்ரர்களுக்கு ப்ருகு ரிஷி எதற்கு வந்தார் என்று முன்னரே தெரிந்திருந்தது. தாம் அப்படி கோபம் கொண்டிருப்பதைப் போல நடந்திருக்காவிடில், ரிஷி அந்த சபைக்குச் சென்று, இவர் தம்மையே உத்தமர் என்று சொல்லிவிடுவாரோ என்று பயம் கொண்டு, உண்மையான தம் ஸ்தானத்தை (தாரதம்யத்தில் ஸ்ரீவிஷ்ணுவைவிட மிகவும் கீழானவர்கள் என்பதை) அறிந்தவர்கள் ஆகையால், லோகத்தில் நாடகத்திற்காக இவ்வாறு செய்தனர் என்று அறிய வேண்டும். ஜீவகோடிகளைவிட உத்தமர் எனப்படும் பிரம்மருத்ரர்கூட ஸ்ரீவிஷ்ணுவே சர்வோத்தமன் என்று உலகிற்கு காட்டினர் என்பது தெளிவாகிறது. ஸ்ரீவிஷ்ணு, தான் க்ரோதாதி அனைத்து தோஷதூரன் என்பதை, ப்ருகு ரிஷிகளில் தன் நடவடிக்கைகளால், உலகிற்கு தெரிவித்தான்.

**ஆவன்ன ரோமகூபதொா$^3$ளகீ$^3$ ஜீவ**
**ராவாஸவாத$^3$ பி$^3$ரம்மாண்ட$^3$ ராசிக$^3$ளு**
**தீவிப்புத்$^3$யத்$^1$ரப்ரியா**
**ஹி விஷ்ணு பரமாண்வாத்$^3$யயெந்து$^3$ பேள்த$^3$**
**ஸ்ரீ வேத$^3$வ்யாஸ தானே**
**ஈ விஷ்ணு ரோமக்கெணெயில்லவென்னெ ஈ**
**தே$^3$வகின்யாவனெணெ**
**ஸ்ரீ வாஸுதே$^3$வ ஹயவத$^3$ன ஸர்வேஷ**
**தே$^3$வரெல்ல இவன தா$^3$ஸதா$^3$ஸரின்னு**
**விவாத$^3$வ்யாகோ ஜீவ ||25**

ஆவன்ன - யாரொருவனின். ரோமகூபதொளகெ - (தேகத்தின்) ரோமகூபத்தில் (ஒவ்வொரு முடியின் நுடியில்). ஈ ஜீவர - உலகில் இருக்கும் சர்வஜீவருக்கு. ஆவாஸவாத - இருப்பிடமான. பிரம்மாண்டராஷிகளு - பிரம்மாண்டங்களின் சமூகங்கள். தீவிப்புது - நிரம்பியிருக்கின்றன. ஈ விஷ்ணுலோகக்கெ - விஷ்ணுவின் இத்தகைய ரோமத்திற்கு. 'யத்ர ப்ரியா ஹி விஷ்ணுபரமாண்வாத்ய' என்று ஸ்ரீவேதவியாஸர், தானே. எணியில்லவென்னெ - சமம் இல்லை என்று சொல்லியிருக்க. ஈ தேவகெ - இந்த (மகிமை உள்ள) விஷ்ணுவிற்கு. இன்னாவனெணெ - வேறு யார் இணையாக இருக்கிறார்கள்? (யாரும் இல்லை). ஸ்ரீவாசுதேவ ஹயவதன - வாசுதேவாபின்னனான ஸ்ரீஹயக்ரீவன். ஸர்வேஷ - ஸர்வஸ்வாமி. தேவரெல்ல - பிரம்மாதி தேவதைகள் அனைவரும். இவன தாஸதாஸரு - இவனின் (ஸ்ரீஹயக்ரீவனின்) சேவகர்களே. (சேவகர்களைவிட அதிக ஸ்தானம் யாருக்கும் இல்லை). அல்லது, அதீனளான (தாஸளான) ரமாதேவியின் தாசர்கள் (சேவகர்கள்). ஜீவ - ஹே அல்ப மானவனே. இன்னு விவாதவ்யாகோ - (அப்படியில்லை என்று வாதிக்க இடமே இல்லை எனும்போது) ஏன் எதிர்மறையாக வாதிடுகிறாய்?

** ஸ்ரீஹரி அனந்தரூபங்களைக் கொண்டவன். ஒவ்வொரு ரூபமும் ஸச்சிதானந்தாத்மகமே. அவனுக்கு ப்ராக்ருத தேகம் என்பது என்றும் இல்லை. அணு ஸ்வரூபத்திலிருந்து துவங்கி, ப்ரம்மாண்டத்தையே வியாபித்திருக்கும் அத்யந்த விஸ்தாரமான ரூபங்களும் உள்ளன. இந்த அனைத்து ரூபங்களுக்கும் கர-சரணாதி அவயவங்கள் உள்ளன. தேகத்தில் ரோமங்கள் உண்டு. அவை அனைத்தும் அப்ராக்ருதங்களே (ஞானானந்த ஸ்வரூபங்களே). தன்னிடமிருந்து படைக்கப்பட்ட பிரம்மாண்டத்தை ஸ்ரீஹரி தானே உள்ளே வெளியே வியாபித்து தரித்திருக்கிறான். பிரம்மாண்ட தாரகத்வ ரூபதர்மம் ஸ்ரீஹரிஸ்வரூபத்தின் அனந்த சகஜ குணங்களில் ஒன்று.

இந்த தர்மம் அனைத்து ரூபங்களுக்கும் உண்டு. இப்படியான அற்புதத்தை ஸ்ரீஹரியின் அருளால் ப்ரம்மதேவன் சாட்சாத்தாக காண்கிறார். இந்த அசிந்த்ய சக்தியினால், தான் படைத்த ஒரு பிரம்மாண்டத்தை, மற்றும் தன் எண்ணிக்கையற்ற ரூபங்களில்

எண்ணிக்கையற்ற பிரம்மாண்டங்களாக தரித்திருக்கிறான். பிரம்மதேவன் தன்னை இந்த அனைத்து பிரம்மாண்டங்களில் காண்கிறார்.

முன்னர் படைக்கப்பட்டு லயம் அடைந்த மற்றும் அடுத்து படைப்பில் வரப்போகும் (அனந்தகாலத்தின் அனந்த) பிரம்மாண்டங்களும் (ஸ்ருஷ்டி செயலானது என்றைக்கும் நிற்பதில்லை ஆகையால்) எண்ணிக்கையற்றவையே. ஒரு பிரம்மன் - அதன் பிரளயம். பிறகு மற்றொரு பிரம்மாண்ட ஸ்ருஷ்டி. இன்னொரு பிரம்மன். என இவ்வாறு எண்ணிக்கையற்ற பிரம்மாண்டங்களின் ஸ்ருஷ்டி அனந்த காலத்தினால் நடந்து வருகிறது. அடுத்து அனந்த எதிர்காலங்களிலும் நடக்கிறது. இந்த எண்ணிக்கையற்ற பிரம்மாண்டங்களின் ஸ்ருஷ்ட்யாதி கர்த்தனான பிரபு - ஸ்ரீஹரி ஒருவனே. தன் நாமகரான இன்னொருவர் இருக்கலாம் என்னும் சந்தேகத்திற்கே இடமில்லை. ஆதாரமில்லை. இந்த இரு ஆதாரங்களால், ஸ்ரீஹரி அனந்தகோடி பிரம்மாண்ட நாயகன் ஆகிறான். இவ்வாறு இல்லாமல், பிரம்மாண்டங்கள் ஏக காலத்தில் எண்ணிக்கையற்றதாக இருக்கின்றன என்று நினைப்பது சரியல்ல. இந்த விஷயத்திற்கான பிரமாண வாக்கியங்கள் இவ்வாறு உள்ளன.

ஷரீராணாம் பஹுத்வேன அதிதானாகதைஸ்ததா |
அஸ்யைவ தேவகாயேஷு ப்ரதிப்ரதி ச தர்ஷனாத் |
விஷ்ணுஸாமர்த்யதோ஽ண்டானாம் பஹுத்வம் நான்யதா பவேத் ||
(பிரம்மதர்க்க)

ஏகமண்டம் பஹுத்வேன ப்ரத்யேகம் ரோமகூபகம் |
பிரம்மா஽பஷ்யத்ததாத்மானம் ஹரேஸ்தேஷு ப்ருதக் ப்ருதக் ||
(பிரம்மாண்ட புராணம்)

மற்றும் 'ப்ருஹதண்டமபூதேகம்' ஆகிய பாகவத 3ம் தாத்பர்யத்தில் உதாரணம் கொடுக்கப்பட்ட பாரத வசனம். இவற்றின் சாராம்சமே இந்த மேற்சொன்ன விளக்கம்.

** ஸ்ரீஹரியின் ஒவ்வொரு ரூபத்திலும் அனந்த ரூபங்கள் உள்ளன. இத்தகைய அனந்த ரூபங்களைக் கொண்டவன் ஸ்ரீஹரி.

ராமரூபத்தில், மத்ஸ்யகிருஷ்ணாதி அனைத்து ரூபங்களும் உள்ளன. அவனின் விருப்பத்திற்கேற்ப ஒரு ரூபத்தில் பிற ரூபங்களும் வெளிப்படுகின்றன. ஜாம்பவந்தன் ஸ்ரீகிருஷ்ணனுடன் போர் புரியும்போது, ராம ரூபத்தைக் கண்டதைப் போல. இந்த அற்புத மகிமை, ஸ்ரீவிஷ்ணுவிற்கு அல்லாமல் பிறருக்கு அல்ல. இவ்வாறு இருக்கையில் ஒரு ரோமகூபத்தில் அனந்த ரூபங்கள் இருக்கிறது என்பது முடியாது என்று சந்தேகம் கூடாது. அவை கண்டிப்பாக இருக்கின்றன. இந்த அனந்த ரூபங்களும் பிரம்மாண்ட தாரகத்வ தர்மவிசிஷ்டங்களே. அனந்தகோடி பிரம்மாண்டங்கள் என்பதை இவ்வாறும் சொல்லலாம் என்று 'ரோமகூபதொளகெ... பிரம்மாண்ட ராஷிகள்' என்னும் இந்த பத்யத்தின் சொற்கள் குறிக்கின்றன.

** அணுகாலம், மஹாகாலம், பரமாணு ஆகிய நிலைகளுக்கு நியாமகனாகி, அவற்றில் பரமாண்வாதி ரூபங்களால் தன்னாமகனாகி ஸ்ரீஹரி இருக்கிறான். 'அண்வாதி நாமவாச்யோஸௌ காலஸ்சேத்யபிதீயதே' (பாக. தாத்). பிரம்மாண்டங்களில் இருக்கும் விஷ்ணு, பரமாண்வாதி கால நியாமக ரூபங்களால்கூட ஸ்திதி- லயாதிகளுக்கு காரணனாக பல ரூபங்களால் இருக்கிறான். இவ்வாறு சூக்ஷ்ம, ஸ்தூல (அணு மஹத்) என்னும் பேதத்தினால் பிரம்மாண்டத்தை வியாபித்திருக்கும் (அபின்னங்களே ஆன) விஷ்ணுரூபங்கள், அணுமஹத் ரூபங்களின் உபாசகரான பிரம்மாதிகளுக்கு மிகவும் பிடித்தமானவையே ஆகும். ஒரு இழை முடியின் மகிமையும் இவ்வாறு சிந்திக்க முடியாததாக இருக்கையில், ஸ்ரீவிஷ்ணுவிற்கு சமமான இன்னொரு வஸ்துவை காணமுடியுமா? (எப்போதும் இல்லை).

**ஸ்வர்க்கா3தி3 ஸத்யந்தவாத3 மேலணலோக**
**கக்3ரணிக3ளாத3 தே3வர நோடு3 மத்4யதொ3**
**ளொக்3கி3ஹ பூ4லோகதி3**
**முக்3கி3ஹ மனுஷ்யராஷிய நோடு3 கெ**
**ளக்3க3ண பாதாளதி3**
**து3ர்க3ர்வி தை3த்யர நோடு3 த்ரிவித4ஜீவ**
**வர்க்க3பதா3க3மக்கெ**

**ஸவர்க்க$^3$வெ ஸாக்ஷி எல்லத$^3$ரிந்த$^3$ மேலண**
**து$^3$ர்கா$^3$தி$^4$பதி ஹயவத$^3$னவனொப்$^3$ப$^3$னெ ஸ**
**ர்வாக்$^3$ரேஸர காணிரோ ||26**

ஸ்வர்க்காதி ஸத்யந்தவாத - ஸ்வர்க்கத்திலிருந்து துவங்கி ஸத்யலோக வரைக்குமான (ஸத்யலோகத்தையும் சேர்த்து). மேலண லோகக்கெ - (பூலோகத்தின்) மேல் லோகங்களுக்கு. அக்ரணிகளாத - உத்தமரான. தேவர - தேவதைகளை. நோடு - பார் (அந்த உலகங்களில் இருக்கிறார்கள் என்று அறி). மத்யதொளு - (பிரம்மாண்டத்தின்) நடுவில். ஒக்கிஹ - சேர்ந்திருக்கும். பூலோகதி - பூலோகத்தில். மனுஷ்ய ராஷிய - மனித சமூகங்களை. நோடு - (இருக்கிறார்கள் என்று) அறி. கௌக்கண - கீழான (பூலோகத்தின் கீழ் இருக்கும்). பாதாளதி - பாதாள உலகங்களில். துர்கர்விதைத்யர - துரஹங்காரிகளன தைத்யர்களை. நோடு - (இருக்கிறார்கள் என்று) அறி. த்ரிவித ஜீவவர்க்கபதாகமக்கெ - மூன்றுவித ஜீவ வர்க்கங்களுக்கு கிடைக்கும் ஸ்தானங்களை சொல்லும் ஆகமங்களுக்கு. ஸ்வர்க்கவே ஸாக்ஷி - ஸ்வர்க்கலோகமே சாட்சி. (பிரத்யட்ச பிரமாணம்). எல்லதரிந்த மேலண - இந்த அனைத்து உலகங்களைவிட மேல் இருக்கும். துர்காதிபதி - வைகுண்ட லோகத்திற்கு அதிபதியான. ஹயவதன னொப்பனெ - ஸ்ரீஹரி ஒருவனே (வேறொருவர் இல்லை). (வைகுண்டாதிபதியான ஸ்ரீஹரியே). ஸர்வாக்ரேஸர - ஸர்வோத்தமன் என்று, காணிரோ - அறியுங்கள்.

** உலகங்கள் 14. அவையாவன: பூலோக, அந்தரிக்ஷ, ஸ்வர்க்க, மஹர்லோக, ஜனோலோக, தபோலோக மற்றும் ஸத்யலோகம். இவை 7 மற்றும் பூலோகத்தின் கீழ் இருக்கும், அதல, விதல, ஸுதல, தலாதல, மஹாதல, ரஸாதல, பாதாள, இவை 7. இவற்றில் பூலோகம் (பிரம்மண்டம்) நடுவில் இருக்கிறது. இதற்கு மேல் இருக்கும் அந்தரிக்ஷாதி லோகங்கள் மேலே வரிசையாக இருக்கின்றன. அதே போல பூலோகத்து கீழ் உலகங்களும் வரிசையாக இருக்கின்றன. இவற்றின் விஸ்தாரம், ஒன்றுக்கொன்றின் தூரம், அங்கு வசிக்கும் மக்கள், கிடைக்கும் போகங்கள் ஆகிய விவரங்களைப் பற்றி பாகவதாதி புராண

கிரந்தங்களை, அவற்றின் மூலமான வேத பாகங்களை படித்து அறிய வேண்டும்.

** பூலோகத்து பிரஜைகள் - மனிதர்கள். அந்தரிக்ஷ லோகத்து பிரஜைகள் - ரிஷி கந்தர்வாதிகள். ஸ்வர்க்க லோக பிரஜைகள் - தேவதைகள். பாதாளாதி லோகங்கள் சாதாரணமாக தைத்ய தானவாதிகளின் இருப்பிடங்கள் ஆகும். பூலோகத்தின் பரத கண்டத்தில் பிறவியெடுத்த ஜீவர்களுக்கு கிடைக்கும் மனித தேகங்கள் ஸ்வ-கதிக்கு சாதனம் ஆகிறது. சர்வ (த்ரிவித) ஜீவர்களின் சாதன லோகமானதால் பூலோகத்தின் பிரஜைகள் மனிதர் என்பதற்கு, ஸ்வரூபத்தினால் மனுஷ்ய ஜீவர்கள் மட்டுமே என்று அறியக்கூடாது. மனித தேகத்தைப் பெற்றுள்ள சர்வ (த்ரிவித) ஜீவர்களும் பூலோகத்தில் இருக்கின்றனர். ஸ்வரூபத்தினால் தேவஜாதியை சேர்ந்த ஜீவர்கள், ஸ்வ-ஸஹஜமான தேவயோனியில் இருக்கும்போது ஸ்வர்க்கத்தில் இருக்கின்றனர். ஸ்வகதி ஸாதனைக்காக மனுஷ்ய தேகத்தை அடைந்தபோது பூமியில் இருக்கின்றனர்.

த்ரிவித ஜீவர்கள் யார் என்றால்: முக்தி யோக்யர், நித்யஸம்ஸாரிகள் மற்றும் தமோ யோக்யர்கள். இவர்கள் ஸாத்விகர்கள், ராஜஸர் மற்றும் தாமஸர் என்றும் சில சந்தர்ப்பங்களில் அழைக்கப்படுகின்றனர். தேவ மனுஷ்ய அசுரயோனிகள் அவரின் சாதாரண ஜன்ம யோனிகள். ஸ்வஸ்வரூபத்திற்கேற்ப இந்த யோனிகளில் பிறந்த இவர்களுக்கு, அந்தந்த யோனிகளின் சகஜ லோகங்களில் (ஸ்வர்க்காதிகளில்) தேகங்களைப் பெறுகின்றனர். இவ்வாறு இருந்தாலும், அவரால் அடையப்படும் கதிகள் வெவ்வேறாகவே இருக்கின்றன.

முக்தியோக்யர்கள் வைகுண்டாதி நித்ய சுகஸ்தானங்களையும், நித்ய சம்சாரிகள் - நித்ய சுகதுக்க மிஸ்ர லோகங்களையும், தமோயோக்யர்கள் நித்ய துக்க ஸ்தானங்களான அந்தம்தமஸ் ஆகிய உலகங்களையும் அடைகின்றனர் என்று ஆகம வாக்கியங்கள் கூறுகின்றன.

** ஆகமங்கள் இவ்வாறு சொல்லும் உண்மைக்கு, ஸ்வர்க்கமே சாட்சி என்கிறார்கள். அதிசயமான விஷய சுகபோகங்கள் உள்ள, புண்ணியம் கிடைக்கக்கூடிய ஸ்தான விசேஷம் - ஸ்வர்க்கம். (பூலோகத்தில்) கர்மபூமியில் ஸாதனையில் ஈடுபட்டிருக்கும் த்ரிவித ஜீவர்களும், தங்களின் கர்மங்களுக்கேற்ப, பல போகத்திற்காக ஸ்வர்க்காதி போகங்களுக்காக, ஸ்வர்க்காதி போகஸ்தானங்களையும் அடைகின்றனர். ஸ்வர்க்கம் - ஸாதனையில் ஈடுபட்டிருக்கும் தேவதைகளின் சகஜ இருப்பிடம். அங்கு புண்ய பல போகத்திற்காக வரும் பிற ஜீவர்களும் அங்கு இருக்கின்றனர். 'ஸ்வர்க்க ப்ரசுர'ரான ராஜசர்களும் (அவர்களின் வேலையில் ஈடுபட்டு, விசேஷமாக பூ-ஸ்வர்க்கங்களில் சுற்றுபவர்கள்) திரும்பத்திரும்ப இங்கு வருகின்றனர்.

நல்ல நட்பு முதலான காரணங்களால் யக்ஞாதி புண்ய கர்மங்களை செய்த தாமஸர்களும் ஸ்வர்க்க லோகத்தின் (கீழ் பாகத்தின்) ஒரு பிரதேசத்தில் போகங்களை அனுபவித்து சில காலம் இருக்கின்றனர். (இந்த போகபூமி ஸாங்கல்பிக- ஸ்வர்க்கம் என்று அழைக்கப்படுகிறது. அங்கு, வீர ஸ்வர்க்கத்திற்கு, ஆசார்யதேஜ பிரபாவத்தினால் தகுதியைப் பெற்றிருந்த துரியோதனாதிகளும்கூட சில காலம் வந்து தங்கியிருந்தனர். இவ்வாறு ஸ்வர்க்கத்தில், மூன்றுவித ஜீவர்களுக்கும் கர்மங்களுக்கேற்ப சுகபோகங்கள் உண்டு என்னும் பிரமேயத்தை விளக்குகிறது.

ஸ்வர்க்கத்தின் மேல் இருக்கும் மஹராதி லோகங்கள் - மோட்ச சாதனையை முழுமையாக அடைந்திருக்கும் முக்தி யோக்ய ஜீவர்கள், மஹாபிரளயத்திற்குப் பிறகு பிரம்மனுடன் விரஜா நதி ஸ்னானத்திற்கு செல்லும் வரை (பிரளயத்தில் அந்த உலகங்கள் அழியும்வரை) தங்களின் தகுதிக்கேற்ப பகவத் உபாசனாதிகளில் ஈடுபட்டு வசிக்கும் உலகங்கள் ஆகும். அங்கிருக்கும் தேவதைகள் சாதனைக்காக பூமிக்கு வருவதில்லை. பிறவி எடுப்பதில்லை. பகவந்தனின் சேவைக்காக பகவத் ஆணையினால் ஒரு அம்சத்தினால் அவதரிப்பதுண்டு.

இவ்வாறே பாதாளாதி கீழே உள்ள உலகங்களும் சாதனை முடிந்த அசுராதிகள் வசிக்கும் உலகங்கள் ஆகும். த்ரிவித ஜீவர்களுக்குக் கிடைக்கும் நித்ய லோகங்கள் வெவ்வேறே ஆகும். மேலே கூறியதைப் போல, வைகுண்டாதிகள், சாந்தானிக (சம்சாரிக) உலகங்கள், நித்ய நரகங்கள், முறையே முக்தி யோக்யரே முதலான த்ரிவித ஜீவர்களுக்கு கிடைக்கிறது. பிரளயத்தின் வரை அதோ லோகத்தில் வசிக்கும் அசுராதிகள்கூட அம்சத்தினால் ஸ்வோத்தமரின் - அதாவது, தம்மைவிட பாபிகளான கல்யாதி தைத்யரின் சேவைக்காக பூமியில் பிறவி எடுப்பதும் மற்றும் (அப்படி பிறவி எடுத்த) அம்சத்தினால் மற்றவர்களில் சேர்வதும் உண்டு. இந்த பல பிரமேய ரகசியங்களை ஆழமான சாஸ்திர அப்யாஸத்தினால் அறியலாம்.

**மூர்த்திய நோட[3]லு விஷ்வதஸ்சக்ஷு எம்**
**உக்தியர்த்த[2]வாத[3] ஸ்ரீஹரிய பிரிய**
**வ்யாப்திய நோட[3]லாகி[3]**
**தத்வவெஷ்டெஷ்டு அஷ்டஷ்டரல்லி வே**
**தோ[3]க்தியிந்த[3]லி ஸர்வ**
**வ்யாப்தி நாராயணஸ்தி[2]த எம்ப[3] ஸ்ருதிகீ[3]**
**நீதிகெ[3] ப்ரதியில்ல**
**க்[2]யாதகு[3]ணக[3]ளிந்த[3] அப்ரதிமல்ல ஸ்ரீ**
**நாத[2] ஹயவத[3]ன மஹிமனந்தகு[3]ண**
**யாதகிந்து வாதி[3]பெ ||27**

மூர்த்திய - (ஸ்ரீஹரியின்) ரூபத்தை. நோடலு - சிந்தித்தால். விஷ்வதச்சக்ஷு - அனைத்து இடங்களிலும் கண்களைக் கொண்டவன் (அனைத்தையும் சாட்சாத்தாக பார்க்கும் வியாப்த த்ருஷ்டி உள்ளவன்). எம்புக்திய - என்று சொல்லும். அர்த்தவாத - அர்த்தம் கொண்ட (ஸ்ருதியின் அர்த்தமான). ஸ்ரீஹரியின் பிரிய வியாப்திய - ஸ்ரீஹரியின் மஹா வியாப்தியை. நோடலாகி - கவனித்தால். தத்வவெஷ்டெஷ்டு - அவ்யக்தாதி தத்வங்கள் எவ்வளவு (எந்த பிரமாணத்தின்) வியாப்தி உள்ளனவோ, அஷ்டஷ்டரல்லி - அனைத்தையும் பூர்ணமாக வியாபித்து, வேதோக்தியிந்தலி - ஸ்ருதி வாக்கியங்களால். ஸர்வவியாப்த நாராயண - சர்வத்ர வியாப்தனான நாராயணன். ஸ்தித -

இருக்கிறான். எம்ப ஸ்ருதிகெ - இவ்வாறு சொல்லும் ஸ்ருதிக்கு. ஈ நீதிகெ ப்ரதியில்ல - (நாராயணனின்) இந்த வியாப்தி நியமத்திற்கு எதிரானது இல்லை. க்யாத குணகளிந்த - புகழ்பெற்ற (ஸ்வாதந்த்ர்ய, ஞானானந்தாதி) குணங்களால். அப்ரதிமல்ல - ஒப்புமை இல்லாதவன் அல்லவா? (எதுரில்லத ஜட்டியு - குணபூர்ணனான ஸர்வஷக்தன்). ஸ்ரீநாதஹயவதன - லட்சுமிபதியான ஸ்ரீஹயக்ரீவன். மஹிமனந்தகுண - சர்வபூஜ்யகளான (அல்லது வைபவபூர்ண) எல்லையற்ற குண ஸ்வரூபன். யாதகிந்து வாதிபெ - ஏன் இவ்வாறு (நிர்குணன் என்று) வாதிக்கிறாய்? (உன் வாதம் ஆதாரம் அற்றது. அதனை நிறுத்து).

** விஷ்வஸ்சக்ஷுருத விஷ்வதோ முகோ விஷ்வதோ பாஹுருத விஷ்வதஸ்பாத்' - ஆகிய (புருஷ சூக்த) வேதம், ஸ்ரீஹரி, சர்வத்ர கண்களை உடையவன், முகங்களைக் கொண்டவன். எல்லெல்லியு - எண்ணிக்கையற்ற தோள்களைக் கொண்டவன். அனைத்து இடங்களிலும் பாதங்கள் கொண்டவன். என (தன் வியாப்த ரூபத்தின் கர சரணாதி அவயவங்களால் கூட) அனைத்து இடங்களிலும் வியாப்தன் என்று, சொல்கிறது.

ஸ்ரீகிருஷ்ணனின் அருளால் கிடைத்த திவ்யதிருஷ்டியினால் விஸ்வரூபத்தைக் கண்ட அர்ஜுனனும் இதையே சொல்கிறான்.

விஸ்வ வ்யாப்தனான விஸ்வரூபமும் கர சரணாதி அவயவங்கள் கொண்டதேயாகும். ஞானானந்தாதி குணங்களே அவயவாதி பற்பல ஆக்ருதிகளாக இருக்கின்றன. அதாவது, பகவந்தனின் அனைத்து ரூபங்களும், விஸ்வரூபமும், சேதனாத்மக - அப்ராக்ருதமானவை. அத்யந்த சூக்ஷ்மங்களான பரமாண்வாதிகளிலும் கூட, ஸூக்ஷ்மதம, கர சரணாதி அவயவங்களைக் கொண்ட அப்ராக்ருத பகவத் ரூபங்களாகும்.

இந்த அணுகத ரூபங்களில்கூட வியாப்தத்வாதி தர்மங்கள் இருக்கின்றன. 'அணோரணீயான் மஹதோ மஹீயான்' என்னும் ஸ்ருதி, அணுவினில் அணுவும் மஹத்தில் பெரியதாகவும் இருக்கிறான் என்று மட்டும் சொல்வதில்லை. கூடவே, பரமாத்மன் தன் அசிந்த்யமான அற்புத சக்தியினால், லோகத்தில் எதிர்மறைகள்

என்று புகழ்பெற்ற அணுத்வ - மஹத்வ முதலான (வெப்பம் - குளிர்ச்சி 'ஸூர்யகோடி பிரதீகாஷம் சந்திரகோடி ஸுஷீதலம்' ஆகிய பிரமாண வாக்கியங்கள் சொல்வதைப் போல) அனைத்து தர்மங்களையும் ஒரே காலத்தில் சர்வரூபங்களில் அடைந்திருப்பவன் என்று சொல்கிறது.

ப்ருதிவ்யாதி ப்ராக்ருத தத்வங்கள் பரிச்சின்னமானவை, அதாவது, எல்லைகள் உள்ள வியாப்தி உள்ளவை. எந்த தத்வம், எவ்வளவு வியாப்தி உள்ளதோ அவ்வளவு வியாப்தி உள்ள பகவத் ரூபம் அதனை அந்தளவுக்கு வ்யாபித்திருக்கிறது என்று சொல்லும் ஸ்ருதிகளை எதிர்ப்பதில்லை. அது மட்டுமல்ல, அனைத்து தத்வங்களையும் தனித்தனி ரூபங்களால் வியாபித்திருக்கிறான் என்னும் மகிமையை தெளிவுபடுத்துகிறது.

தேஷத: வியாப்தமான ரூபத்தினால், பரிச்சின்ன தத்வங்களை வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்கள், மிகவும் அபின்னங்களே ஆகியிருக்கின்றன என்று சிந்திப்பது, லௌகிகமாக எதிர்மறை விஷயங்கள் என்னும் காரணத்தினால் கஷ்டம் என்று சொல்லலாம். ஆனாலும் அது பரம ஸத்யமே சரி. இந்த வித வியாப்தி உள்ள ஸ்ரீஹரி, காலத: குணத: கூட வியாப்தன் - அபரிச்சின்னன்.

** 24 தத்வங்கள் உள்ளன என்பது பொதுவாக அறிந்த விஷயம். அவை எவை என்றால்:

ஆகாஷாதி பூதங்கள் - 5
ஷப்தாதி தன்மாத்ரங்கள் - 5
வாகாதி கர்மேந்திரியங்கள் - 5
சக்ஷுராதி ஞானேந்த்ரியங்கள் - 5
மனஸ், அஹங்கார, மஹத் மற்றும் அவ்யக்த - 4
என மொத்தம் 24.

ஜீவ பரமாத்மரில் துவங்கி தேஹகத தத்வங்கள் (அல்லது உலகில் இருக்கும் தத்வங்கள்) 26 என்றும் சொல்வதுண்டு. பரமாத்மனிடமிருந்து வேறுபட்ட அனைத்து தத்வங்களுக்கும்

அபிமானி தேவதைகள் இருக்கின்றனர். இந்த விவரங்களை சாஸ்திரங்களை படித்து அறிந்து கொள்ள வேண்டும்.

* ஆகாஷாதி மஹாபூதங்களுக்கு கணபதி (விக்னேஷ) முதலான தேவதைகள் அபிமானிகள்.
* ஷப்தாதி தன்மாத்ரங்களுக்கு ஸௌபர்ணி (கருடதேவரின் மனைவி) ஆகியோர்; *
* வாகாதிகளுக்கு அக்னி ஆகியோர்;
* சக்ஷுராதிகளுக்கு ஸூர்யாதிகள்.
* மனஸ் அஹங்காரங்களுக்கு கருட சேஷ ருத்ரர்கள்.
* மஹத் தத்வத்திற்கு வாயுபிரம்மர்
* (இந்த தத்வத்தின் இன்னொரு வகையான விக்ஞான தத்வ) அல்லது புத்தி தத்வத்திற்கு பாரதி சரஸ்வதியர்கள்.
* அவ்யக்த தத்வத்திற்கு மஹாலட்சுமியும் அபிமானிகள்.

தத்வங்களுக்கு அவாந்தர (இடை / நடு) அபிமானிகளும் இருக்கின்றனர். இந்த அனைத்து தத்வங்களும் மற்றும் தத்வாபிமானி தேவதைகளும் ஸ்ரீஹரியின் அதீனர்கள் - அவன் ஒருவனே அனைவரின் ஸ்வதந்த்ர நியாமகன். ரமா நாராயணர்கள் அனைத்து இடங்களிலும் வியாப்தர்கள். மற்ற தத்வாபிமானிகள் தம்மால் நியமிக்கப்பட்ட தத்வங்களுக்கு சமானமான வியாப்தி உள்ளவர்கள். இவர்கள்கூட ஸ்ரீஹரியின் அருள் பலத்தினால் எண்ணிக்கையற்ற சக்தி உள்ளவர்கள் மற்றும் அனந்தாம்ஷங்களால் தத்தம் தத்வாம்சங்கள் இருக்கும் இடத்திலெல்லாம் இருந்து, தம் நியமன வ்யாபாரங்களை செய்கின்றனர்.

* நாராயணனின் வியாப்தி. இந்த பிரம்மாண்டம் அசிந்த்யமான விஸ்தாரம் உள்ள புற ஆவரணங்களைக் கொண்டது. பிரம்மாண்டம் 50 கோடி யோஜன அகலம் உள்ளது. இதன் வெளியில் ஒன்றிற்கு பத்து அளவில் விஸ்தாரமான ப்ருதிவ்யாதி சூக்ஷ்ம தத்வங்களின் ஆவரணங்கள் உள்ளன.

* 24ம் தத்வமான அவ்யக்த தத்வம் த்ரிகுணாத்மகமானது (அத்யந்த விஸ்தாரமானது இந்த த்ரிகுணாத்மக ஆவரணம்). இந்த

ஆவரணத்தை வியாபித்திருக்கும் அனந்த விஸ்தாரமான அவ்யாக்ருதாகாஷமும் இருக்கின்றன. அந்த ஆவரணங்கள் மற்றும் அவற்றின் விஸ்தார அளவுகளை சாஸ்திரங்களை படித்தும், ஸ்ரீவிஜய தாசார்யரின் 'ஸ்ருஷ்டி பிரகரண' சுளாதிகளை அத்யயனம் செய்தும் அறிய வேண்டும்.

இந்த பிரமேய விஷயத்தில் - படைக்கப்பட்ட தெளிவான நிர்ணயங்களை புரிந்து கொள்வது சுலபமல்ல. தக்க குருகளின் உபதேசமும் அவசியம். இவ்வாறு இருக்கும் ஆவரண சஹித பிரம்மாண்டத்தில், அந்தந்த தத்வாபிமானிகள் தம்மால் நியமிக்கப்படும் தத்வங்களின் விஸ்தாரத்தின் அளவிற்கே வியாப்தி உள்ளவர்களாக இருக்கின்றனர். ஸ்வதந்த்ர நியாமகனான ரமாஸமேதனான ஸ்ரீ நாராயணன் அவ்யாக்ருதாகாஷாதி அனைத்தையும் வியாபித்திருக்கிறான் என்றும் மற்றும் அந்தந்த தத்வங்களின் மற்றும் தத்வாபிமானிகளின் நியாமகத்வ மற்றும் வ்யாப்தியை எதிர்ப்பதில்லை. இவ்வாறு தேஷ காலங்களால் வியாப்தனான ஸ்ரீஹரி, குணங்களால்கூட வியாப்தனாக இருக்கிறான். அவன் தன் குணங்களால் அபின்னன். அவனின் குணங்கள் அனந்தமானவை. ஒவ்வொரு குணமும் அனந்தமானவை. தேஷத: குணத: காலத: வியாப்தனான அகணித குணகண ஸ்வரூபனானவன் - ஸ்ரீஹரி.

**ஆருஷாஸ்த்ர ப3ல்லவரெல்ல கேளிரோ**
**நாராயணன நாரியராத3 தா4ருணி**
**ஸிரிதே3வியரிவன**
**தூ3ரிதா3க3லெ நினகெ3 தூ3ரவாக3லு கால**
**நூரலு நெலவ காணெ**
**பா3ரது3 பா3யிகெ3 கூளு இதெ3ல்லவு**
**ஆரேனெம்ப3ரு கேளய்யா**
**ஊரொளகி3ன பதிவ்ரதெயரிரவ கண்டு3**
**ஸாரஹ்ருத3யரெல்ல ஹயவத3னன பாத3**
**ஸரோஜனவனெ ஸாரிரோ ||28**

ஆறு ஷாஸ்திரகள - ஆறு சாஸ்திரங்களை. பல்லவரெல்ல - அறிந்தவர்கள் அனைவரும். கேளிரோ - கேளுங்கள் (கேட்டு

தெளிவடையுங்கள்). நாராயணனின் நாரியராத - ஸ்ரீ நாராயணனின் நித்ய பார்யைளான. தாருணி ஸிரிதேவியரு - ஸ்ரீபூதேவியர்கள். இவன தூரிதாகலெ - இந்த ஜீவனை (உன்னை) கைவிட்டால். நினகெ தூரவாகலு கால - ஸ்ரீ நாராயணனால் தூர விலகும் சமயம் (வந்திருக்கிறது என்று அறி). தூரவாகலு - ஸ்ரீ நாராயணன் உனக்கு வெகு தூரம் ஆனால். காலனூரலு - கால் வைத்து நிற்பதற்கும். நெலவ காணெ - இடம் கிடைக்காது. பாரது பாயிகெ கூளு - உண்பதற்கு ஒரு கைப்பிடி உணவும் கிடைக்காது. இதெல்லவு - இந்த அனைத்திற்கும் (தாரித்ர்யாதி கெட்ட நிலைக்கு). ஆரேனெம்பரு - யார் என்ன காரணத்தை சொல்ல முடியும்? (சொல்ல முடியாது). ஊரொளகின - ஊரில் இருக்கும். பதிவ்ரதெயர இரவ - ஸாத்வி ஸ்த்ரியர்கள் (ஸ்வ பதியை அடைந்து) அனுபவிக்கும் சுக ஷாந்திகளை. கண்டு - பார்த்து. ஸாரஹ்ருதயரெல்ல - குணக்ராஹிகளான சஜ்ஜனரான நீங்கள் அனைவரும். ஹயவதன - (ஜகத்பதியான) ஸ்ரீஹயக்ரீவ தேவனின். பாதஸரோஜவனெ - பாத பத்மங்களையே. ஸாரிரோ - சேருங்கள்.

ஷட் சாஸ்திரங்கள் எவை என்பதை பற்பல விதமாக சொல்கிறார். ஷட்தரிசன (சாஸ்திரங்களையும்) அதாவது சாங்க்ய, யோக, ந்யாய, வேதாந்த, வைசேஷிக, மீமாம்ஸா. ஆறு வேதாங்கங்கள் என்றால்: சிக்ஷா, வ்யாகரண, சந்தஸ், நிருக்த, ஜ்யோதிஷெ, கல்ப. இவ்வாறு புகழ்பெற்ற ஆறு சாஸ்திரங்கள் என்று அழைப்பதுண்டு. மீமாம்ஸா, வேதாந்தங்களுடன் தர்க்க வியாகரணாதிகளையும் சேர்த்து, ஆறு சாஸ்திரங்கள் என்று சொல்வதும் உண்டு.

பொதுவாக, சதுஸ்சாஸ்திர பண்டிதர் என்று புகழ்பெற்ற பண்டிதர்களை சொல்வதும் உண்டு. அப்போது, நியாய, வேதாந்த (தர்க்க - பிரம்மசூத்ர அல்லது உத்தர மீமாம்ஸா), வியாகரண மற்றும் பூர்வ மீமாம்ஸைகள் ஆகியவை இத்துடன் சேர்ந்தவை என்று அறிய வேண்டும். மொத்தத்தில், அனைத்து பூர்வ பக்ஷங்களையும் எதிர்த்து, அவற்றினை விலக்குவதான வேதாந்த நிர்ணயங்களை விளக்கும் சாமர்த்தியம் உள்ள பண்டிதர்களை ஷட் சாஸ்திர ஞான சம்பன்னர் என்று கூறினால் அதில் தவறு இல்லை. இப்படியான பண்டிதர்கள் அனைவரும் அறிய வேண்டிய

மற்றும் அறிந்து செய்ய வேண்டிய கடமைகளை இந்த பத்யத்தில் நிரூபிக்கிறார்.

** ஸ்ரீபூரூபங்களால் ஸ்ரீஹரியை எப்போதும் வணங்கும் ஸ்ரீமஹாலட்சுமிதேவி, சகல ஸம்பத்களின் அபிமானி தேவதையாக இருக்கிறாள். அவளின் க்ருபா கடாக்ஷம் இல்லையெனில், ஸ்ரீநாராயணனிடமிருந்தும் தூர விலகுகிறான் - ஜீவன். அது மட்டுமல்ல. கால் வைப்பதற்கும் இடம் இல்லாமல், தின்பதற்கும் கைப்பிடி உணவு கிடைக்காமல் ஏழையாக பற்பல துக்கங்களுக்கு ஈடாகிறான்.

** ஏழ்மை முதலான நிலைக்கான காரணத்தைத் தேடுவதற்கு (பிறரைக் கேட்பதற்கு) அவசியமே இல்லை. பதிவிரதையரான பெண்களை பார்த்தால் போதும், என்கின்றனர். தத்தம் பதிகளை தம் ஸ்வாமியென்று வணங்கியவாறு சரணடையும் பெண்கள் பதிவிரதைகள் ஆவர். அவர்கள் சர்வபிரகாரத்தினால் அருளப்பட்டு சுகமாக இருக்கின்றனர். இவ்வாறே, அனைத்து ஜீவர்களின் ஸ்வதந்த்ர நியாமகனான ஸ்ரீஹரி, அனைவரின் முக்யபதியானவன். பதிக்கு சதியைப் போல அனைத்து ஜீவர்களும் அந்த மஹாஸ்வாமிக்கு அத்யந்த அதீனர்களாக இருக்கின்றனர்.

இவ்வாறு சொல்லும் ஞானம் உள்ளவர்களாக, சரணடையும் ஜீவர்கள், அனைத்து விதங்களிலும் அனைத்து நிலைகளிலும் ஸ்ரீஹரியினால் அருளப்படுகிறார் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. சர்வாதிபதியான ஸ்ரீஹரியை வணங்கி, பின்பற்றும் ஜீவர்கள், கணவன் இல்லாத பெண்களைப் போல அமங்கள ஸ்வரூபர் எனப்படுகின்றனர். ஷட்சாஸ்திர பண்டிதர்கள்கூட இந்த நியமத்திற்கு கட்டுப்பட்டவர்களே. 'பிண்டாண்டதொளகின கண்டன காணதே முண்டெயராதரு பண்டிதரெல்ல' என்று புரந்தரதாசர் பாடல் இந்த அர்த்தத்தையே சொல்கிறது.

** க்லேஷோ஽திகதரஸ்தேஷாம் அவ்யக்தாஸக்த சேதஸாம் |
அவ்யக்தா ஹி கதிர்துக்கம் தேஹவத்பிரவாப்யதே ||
(கீதை)

ஸ்ரீதேவியின் (ஸ்ரீதேவியே பிரதான உபாஸ்ய தத்வளாத) உபாசனையினால், கடைசியில் தன்னை அடைந்தாலும், தன் பக்தனுக்கு அந்த மார்க்கம் (லட்சுமி உபாசனை) கஷ்டமானது என்று சொல்கிறான். தன் உபாஸகரே உத்தமமான உபாயம் உள்ளவர்கள் என்றும், லட்சுமி உபாஸனையின் மார்க்கத்திற்கு தன் உபாசகர்களைவிட அதிகமான இந்திரிய நிக்ரஹம், சதாசாரம் ஆகியவை தேவை என்றும் சொல்கிறான். பகவந்தனுடன் லட்சுமி, முக்யபிராணனையும் தியானம் செய்ய வேண்டும். ஆனால், பிரதான உபாஸகன் ஸ்ரீஹரியே ஆகவேண்டும். ‘வேத்யா ஸஹாஸௌ ப்ராணேன சோபாஸ்யஸ்சாகிலாகுணா:’ என்று ஸ்ரீஹரியின் உபாசனை, லட்சுமி, முக்யபிராணரின் சகிதமாகவே செய்யப்பட வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

மனஸ்யைவ ஸ்வபக்தானாம் த்ருஷ்யோऽஸௌ ரமயா ஸஹ|
(ஸத்தத்வ ரத்ன மாலா)

என்று, ரமாசமேதனான ஸ்ரீஹரியின் சாட்சாத்காரம் ஆகிறது என்று சொல்லப்படுகிறது. இந்த ஸூக்ஷ்ம விசேஷத்தை அறிந்து லட்சுமிபிராணனை பரிவாரங்களுடன் ஸ்ரீஹரியுடன் சிந்தித்து தியானத்தில் ஈடுபடுவது அவசியம்.

**நரககூபதொா$^{3}$ளேளுத முளுகு$^{3}$த**
**ஹரித்$^{3}$வேஷிக$^{3}$ளெல்ல மலமூத்ரக$^{3}$ள திந்து$^{3}$**
**கா$^{3}$ரஹரெந்த$^{3}$ரிய**
**புராண பா$^{4}$ரத ராமயணங்க$^{3}$ள**
**பிரியரிந்த$^{3}$லி கேளி**
**ஓரந்தெ ஷாஸ்த்ரார்த்த$^{2}$க$^{3}$ளன்னெல்ல வி**
**சாரிஸி திளிது$^{3}$கொள்ளி**
**நாராயணனெந்து$^{3}$ சேரித$^{3}$ அஜாமிள**
**ஸேரனெ ஹயவத$^{3}$னன்னரமனெய**
**ஸாரி தா ப$^{3}$து$^{3}$கிரனெ ||29**

நரககூபதொளு - நரகத்தின் (துக்கமய) கிணறுகளில். ஏளுத முளுகுத - மேலே எழுந்தவாறு மற்றும் மூழ்கியவாறு. ஹரித்வேஷிகளெல்ல - தமோயோக்யர்கள் அனைவரும்.

மலமூத்ரகள திந்து - மலமூத்திரங்களை தின்று, குடித்தவாறு. காராஹரெந்து - சோகத்தில் இருக்கின்றனர் என்று. அரிய - தெரியாதா? (அப்படியெனில்). புராண பாரத ராமாயணங்கள - புராணங்களையும் பாரத ராமாயணங்களையும். பிரியரிந்தலி - ஞானிகளின் (மூத்தவர்களின்) மூலமாக. கேளி - கேட்டு. ஓரந்தெ - (நிரந்தர) விட்டுவிடாமல். ஷாஸ்திரங்களனெல்ல - அனைத்து சாஸ்திரங்களையும். நோடி - படித்து. விசாரிஸி - விமர்சித்து. திளிதுகோ - (சாஸ்திர நிர்ணயங்களை) திடமாக அறி. நாராயணனெந்து சேரித - நாராயண என்று மரண காலத்தில் (பாசக்கயிற்றினை பிடித்த யம தூதர்களைக் கண்டு பயந்து) மகனை அழைத்த. அஜமிள - அஜாமிளன். ஹயவதனன்னரமனெய - ஸ்ரீஹரியின் பரமபக்தரான தேவதைகளின் லோகத்தை. ஸேரனெ - சேரவில்லையா? (சேர்ந்தான் என்பது தெரிந்ததே). தா - தான். ஸாரி - ஹரி நாமோச்சாரணை செய்து. பதுகிதனெ - யமதூதர்களால் முக்தன் ஆகவில்லையா? அடுத்து முக்தி அடையவில்லையா?

** 'மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்' (கீதை) என்று, ஸ்ரீகிருஷ்ணன், தமோ யோக்யருக்கு கிடைக்கும் கதியை அந்தம்தமஸ் என்னும் நித்ய நரகம் என்றும், தன்னை அடைந்தவர்களுக்கு என்றும் அது கிடைக்காது என்றும் சொல்கிறான். 'பூயாஸ்ருங் மூத்ரவிஷ்டாக்ருமி குலகலிலே' (ஸ்ரீஹரிவாயுஸ்துதி) வாக்கியங்களில் தாமசர்கள் அங்கு அனுபவிக்கும் பற்பல துக்கங்களின் விவரணை இருக்கிறது.

** ஹரித்வேஷிகள் தமோயோக்யர்கள் எனப்படுகிறார்கள். ஹரிபக்தர்கள் முக்தியோக்யர்கள். ஸ்ரீஹரியில் த்வேஷ பக்திகள் கொண்டிருப்பது, இவர்களின் ஸ்வரூப தர்மங்கள். சம்சார நிலையில் இவை சாதனைக்கேற்ப குறைவு / அதிகம் என வெளிப்படுகிறது. தமஸ் ஸாதகமான ஹரித்வேஷம் ஒன்பது விதமானவை. ஹரிபக்தியும் ஒன்பது விதமானவை. ஹரிபக்தியானது:

சிரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவனம் |
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் சக்யம் ஆத்ம நிவேதனம் ||

என்று சொல்லியிருப்பதைப் போல, ஹரிகதா சிரவணம், ஹரி மகிமைகளின் கீர்த்தனை. ஹரி ஸ்மரணை, ஹரி பாதசேவை, ஹரி மூர்த்திகளின் பூஜை, ஹரி நமஸ்காரம், ஹரி தாஸத்வம் (நிரந்தர சேவை), ஹரி ஸக்யம் (அனாதி அனந்த காலம் வரைக்கும் நம்முடனேயே இருக்கும் அனிமித்த உபகாரி என்னும் அனுசந்தானம்) மற்றும் ஆத்ம நிவேதனம் (ஸ்வஸ்வரூபம் ஸ்ரீஹரியின் நித்யாதீன என்னும் நிஸ்சய ஞானத்தினால் ஸ்வதந்த்ர கர்த்ருத்வ அபிமானத்தை முழுமையாக புறக்கணித்து சரணாகதி அடைவது) என்று 9 விதங்களாக இருக்கின்றன.

அவற்றில் ஒவ்வொரு உத்தம கதிக்கு காரணமான ஸ்ரீஹரி மகிழ்ச்சி அடைய வேண்டும். அதிகாரிகளின் யோக்யதைக்கேற்ப, ஒன்றைவிட அதிக பக்தி பாவங்களும் ஒவ்வொருவரில் இருக்கிறது. நவ வித பக்தி பாவங்களையும் முழுமையாக அடைந்திருப்பவர் ஜீவோத்தமரே (வாயு பிரம்மரே) ஆவார்.

நவவித த்வேஷங்கள்:

ஜீவாபேதோ நிர்குணத்வம் அபூர்ணகுணதா ததா |
ஸாம்யதிக்யே ததஸ்யேஷாம் பேதஸ்தத்கத ஏவ ச |
ப்ராதுர்பாவ விபர்யாஸ: தத்பக்தத்வேஷ ஏவ ச |
தத்பிரமாணஸ்ய நிந்தா ச த்வேஷா ஏதேऽகிலா மதா: ||
(பா-தா).

* ஜீவன் ஸ்ரீஹரியிடமிருந்து அபின்னன் என்று அறிவது;
* ஸ்ரீஹரி ஆனந்தாதி குண ஷூன்யன் என்று அறிவது;
* குணங்கள் இருந்தாலும் அபூர்ணகுணன் என்று அறிவது.
* ஸ்ரீஹரிக்கு சம அதிகர் உள்ளார்கள் என்னும் ஞானம்,
* பிரம்ம ருத்ராதிகளுக்கு ஸ்ரீஹரியின் சாம்யமோ, அவர்கள் அல்லது மற்றவர்கள்

ஸ்ரீஹரியைவிட உயர்ந்தவர்கள் என்று அறிவது;
* ஸ்ரீஹரியின் ரூபங்களுக்கு பரஸ்பரமாக மற்றும் ஒவ்வொரு ரூபத்தின் கர சரணாதி அவயவங்களுக்கு அல்லது குண க்ரியாதிகளுக்கு பேதத்தை சொல்வது.

* ஸ்ரீஹரியின் அவதாரங்களை எதிர்மறையாக அறிவது (ப்ராக்ருத தேக உள்ளவன் என்றோ அல்லது அவதார, அம்ச, ஆவேஷாதிகளை வேறுபட்டு அறிவது);
* ஹரிபக்தர்களை த்வேஷிப்பது;
* ஸ்ரீஹரியை போற்றும் / விளக்கும் வேதாதி பிரமாணங்களை நிந்திப்பது (புறக்கணிப்பது);

இவை நவ வித த்வேஷங்கள் ஆகும். நவ வித த்வேஷங்கள் (நவ வித பக்திகளைப் போல) ஒவ்வொன்றும் நரகாதி நிலைகளுக்கு காரணமான ஸ்ரீஹரியின் அருளுக்கு காரணமாகிறது.

** ரிக்யஜு:ஸாமாதர்வாஸ்ச பாரதம் பஞ்சராத்ரகம் |
மூலராமாயணம் சைவ சாஸ்திரமித்யபிதீயதே ||
யஜ்ஜானுகூலமேதஸ்ய தச்ச சாஸ்திரம் ப்ரகீர்த்திதம் |
அதோsன்யோ க்ரந்தவிஸ்தாரோ நைவ சாஸ்திரம் குவர்த்ம தத் ||
(பாஷ்ய)

ரிக், யஜுஸ், ஸாம மற்றும் அதர்வண என்னும் நான்கு வேதங்கள், பாரத, பஞ்சராத்ரம மற்றும் மூல ராமாயண, இந்த ஏழும் சாஸ்திரங்கள் என்று பெயர் பெற்றவை. இவற்றிற்கு தக்கவாறு (எதிராக இல்லாதவாறு) விஷயங்களை பிரதிபாதிக்கும் கிரந்தங்களும் (வாக்கிய சமூகங்களும், சாஸ்திரமே. சாஸ்திரங்களுக்கு விரோதமானாலும் அல்லது உதாஸீனமானவை (சாஸ்திர விஷயத்திற்கு அவசியமாக கொடுக்க வேண்டிய முக்கியத்துவத்தை கொடுக்காமல் பிற விஷயங்களை பிரதிபாதிக்கும்) அதாவது சாஸ்திரங்களுக்கு வேறுபட்ட பிற விஷயங்கள் சாஸ்திரம் அல்ல. அவை துர்மார்க்க சாதனம் ஆகும். ஆகையால், சாஸ்திரானுசாரித்வ, விரோதித்வ மற்றும் உபயாத்மக பேதத்தினால், புராணங்கள் சாத்விக, தாமஸ, ராஜஸ என்று த்ரிவிதம் என்று சொல்லப்படுகின்றன.

இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் என்னும் ஸ்ருதி, பாரத மற்றும் புராணங்களால் வேதஞானத்தை பூர்ணமாக்கிக் கொள்ள வேண்டும் என்று சொல்கிறது. இந்த பத்யத்தின் 'ஓரந்தெ சாஸ்திரகளனெல்ல' என்னும் சொற்கள், 'ஓம்

ஸர்வவேதாந்த ப்ரத்யயம் சோதனாத்ய விசேஷாத் ஓம்’ (பிரம்மசூத்ர) என்னும் சூத்திரத்தினால் துவங்கும் ஆதிகரணத்தில் நிர்ணயிக்கபட்டிருப்பதைப் போல, சர்வவேதார்த்தங்களை அறிந்து, பிறகு ஸ்வயோக்ய பகவத் உபாஸனையில் இருக்க வேண்டிய அவசியத்தை குறிப்பிடுகிறது.

குணஞானாதிகாரிகள் அனைவரும் (குணோபஸம்ஹார என்னும்) உபாசனாதிகாரிகள் அல்ல.

பரமாத்மனின் குணங்களின் ஞானத்தை பெறுவதற்கு, சாமான்யமாக சர்வ முக்தி யோக்ய ஜீவர்களும் அதிகாரிகளே. ஆனால், பகவத் குணங்களின் த்யானாதிகாரம் ஸ்வயோக்யதையை அனுசரித்து, ஸத், சித், ஆனந்த, ஆத்மா என்னும் பிரதானங்களான நான்கு குணங்களில் துவங்கி, பஹுகுண - அனைத்து வேதோக்த அதற்கேப குணங்களின் வரை ஆகியிருக்கிறது. பிரம்மசூத்ர 3-3ம் சர்வவேதாதிகரணத்தை குருமுகத்தினால் அத்யயனம் செய்து, நிர்ணயத்தில் நம்பிக்கையை சம்பாதிப்பது அவசியம்.

** ம்ரியமாணோ ஹரேர் நாம க்ருண்ஹன் புத்ரோபசாரிதம் |
அஜாமிளோऽப்யகாத்தாம கிமுத ஸ்ரத்தயா க்ருண்ஹன் || (பாகவத)

மரணத்தை சமீபித்த அஜாமிளன் தன் மகனை அழைக்கும் சாக்கில், அவனின் பெயரான நாராயண என்று ஸ்ரீஹரி நாமத்தை உச்சரித்து, சத்கதியைப் பெற்றான். (முதலில் யமதூதர்களிடமிருந்து விடுதலை பெற்று, பின் சம்சாரத்திலிருந்தும் முக்தனாகி, வைகுண்டத்தையே அடைந்தான்). ஸ்ரீஹரி நாமத்தின் மகிமை இவ்வாறு இருக்க, சிரத்தையினால், ஞான பூர்வக பக்தியுடன் ஹரி நாமத்தை உச்சரிப்பவன் விஷ்ணு உலகத்தை அடைகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலனமேவ வா |
வைகுண்ட நாமக்ரஹணமசேஷாகஹரம் விது: || (பாகவத)

என்று, ஸ்ரீஹரி நாமம், குறியீடு, நகைச்சுவை, கேலி, ஆகியவற்றால் உச்சரிக்கப்பட்டாலும் பாப பரிகாரம் ஆகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. குறியீடுகளால் சொல்லப்படும்

நாமோச்சாரணைகளில் பக்தனுக்கு நாமஸ்வாமியான ஸ்ரீஹரியின் ஸ்மரணை உண்டாகிறது. அது பாவங்களை பரிகரிக்கிறது. இங்கு உதாரணம் கொடுக்கப்பட்ட பாகவத ஸ்லோகத்தின் தாத்பர்யம்:

நாமஸ்வாமிதயா தஸ்ய ஸ்மரணம் ஜாயதே யத: |
பக்தஸ்யாதோ நாமகீர்த்தி: ஸங்கேதாதாவபீரித: || (பாக-தாத்)

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது தக்க ஆதாரங்களை மேற்கோள் காட்டுகிறது. பக்திபூர்வகமாக உச்சரிக்கப்பட்ட ஹரி நாமத்திற்கு எண்ணிக்கையற்ற பாப பரிஹாரக சக்தி உள்ளது என்று,

நாம்னோ஽ஸ்தி யாவதீ ஷக்தி: பாப நிர்ஹரணே ஹரே: |
தாவத்கர்த்தும் ந ஷக்னோதி பாதகம் பாதகீ ஜன: ||
(கிருஷ்.மஹார்)

அதாவது, ஸ்ரீஹரி நாமத்தின் பாப பரிஹார சக்திக்கு தக்கவாறு பாவங்களை பாப ஜன சமூகத்தால் செய்யவே முடியாது. (நாமோச்சாரணையால் எரிக்கப்படும் அளவிற்கு, எந்த பாவியாலும் பாவங்களை செய்யவே முடியாது).

**ஆ தே3வ ஈ தே3வனெந்த்3யாகெ கலஹ நா**
**நா தே3ஷத3வரிகெ3 பே3டி3தி3ஷ்டவனீவ**
**ஸாதி4ஸித3 த4னதி3**
**ஈத4ரெயொளகி3ர்த்த3 ராமகெ3 கோடி த்3ர**
**வ்யாதி3 கட3ன கொட்ட**
**வாத3வ முரித3 வெங்கடகி3ரிராயனம்**
**தா2தே3வனன்னு தோரோ**
**ஸ்ரீதே3வியுரத3 திம்மய்யராயகெ3 ப்ரத்ய**
**க்ஷதி3 எணெகா3ணெ ஹயவத3ன்னன**
**பாது3பது3மதா3ணெ ||30**

ஆ தேவ ஈ தேவனெந்த்யாகெ கலஹ - அந்த ஸ்வாமியே உத்தமன், இந்த ஸ்வாமி சர்வோத்தமன் என்று ஏன் கலகம் (விவாதத்திற்கே இடமில்லை). நானா தேஷதவரிகெ - பற்பல நாட்டின் மக்களுக்கு (பற்பல குலத்தவர்களுக்கு ஜாதி முதலான

பேதங்கள் இல்லாமல்). பேடிதிஷ்டவனீவ - விரும்பும் விருப்பங்களை கொடுப்பவனும்; ஸாதிஸித தனதி - (பக்தியுடன்) சம்பாதித்த செல்வத்தினால். ஈ தரெயொளகிர்த்த ராமகெ - இந்த பூமியில் இருக்கும் (ஸ்வக்ருஹத - தேவாலயத்தின்) அதிகாரிக்கு. கோடித்ரவ்யாதி - கோடி த்ரவ்ய ரூபத்தினால். கடன - (தான் பெற்றிருந்த) கடனை. கொட்ட - கொடுத்தான். வாதவ - (பரஸ்பரம் நாடுகளுக்கிடையில் நடைபெறும்) கடனை. முரித - கொடுத்து அடைத்தான். வெங்கடகிரிராயனந்த தேவனன்னு - வெங்கடாசலபதி ஸ்ரீனிவாஸனுக்கு சமனான ஸ்வாமியை. தோரோ - காட்டு. (சமமே இல்லையென்றால், அதிகம் எங்கிருந்து வருவார்கள்?). ஸ்ரீதேவியுரத - லட்சுமிவக்ஷனான. திம்மய்யராயகெ - திருப்பதி திம்மப்பனுக்கு (திருமலை ராயனுக்கு); ப்ரத்யக்ஷதி - தேடிப் பார்த்தாலும். எணெகாணெ - (எங்கும்) சமரான பிறர் யாரும் இல்லை. ஹயவதனன - ஸ்ரீஹயமுகனின். பாதபதுமதாணெ - இது பாதபத்ம சாட்சியாக சொல்கிறேன்.

** சர்வாபீஷ்டங்களை அனைவருக்கும் அளிக்கும் வெங்கடாசலபதி ஸ்ரீனிவாசனே தேவதைகளில் சர்வோத்தமன் என்று ஆதாரத்துடன் சொல்லியிருக்கிறார். சிவபக்தர்கள், காணாபத்யர்கள், ஷாக்தேயர்கள் ஆகிய வேறு தேவதா பக்தர்களுக்கு (தன்னை வணங்கியவர்களுக்கு) ஒரே மாதிரியான அபீஷ்டங்களை அருளியதால், ஸ்ரீனிவாசனே சர்வோத்தமன். பத்மாவதியை திருமணம் செய்து கொள்ளும் சமயத்தில் ஸ்ரீனிவாசன், லௌகிக புருஷனைப் போல நாடகம் ஆடி, (எதிர்கால கலியுகத்தின் பிரஜைகளின் செயல்களை குறிப்பிடுமாறு) குபேரனிடமிருந்து 14 லட்ச ஹேமனிஷ்கங்களை (ராம டங்கி வரஹ) கடனாகப் பெற்று, அன்றிலிருந்து 1,000 ஆண்டுகள் வரை, வட்டியை திருப்பிக் கட்டுவதாக ஒப்புக் கொண்டான். இது புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீனிவாசன், தன் ஆணைக்கேற்ப, தொண்டைமான் அரசனிடமிருந்து நிர்மாணம் செய்யப்பட்ட பவ்யமான தேவஸ்தானத்தில், சன்னிதானம் கொண்டு நின்று, பக்தர்களால் தனக்கு கொடுக்கப்படும் செல்வத்தைக் கொண்டு, குபேரனின் கடனை திருப்பிக் கொடுக்க ஏற்பாடு செய்து, குபேரனின் வம்சத்தவரான

மஹாந்தர் என்பவர்களுக்கு, தன் ஆலயத்தின் அனைத்து அதிகாரங்களையும் ஒப்படைத்தான். இப்படியாக பக்தர்களின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும், கதாவிசேஷங்களை இங்கு நினைவுபடுத்திக் கொண்டார் என்று அறிய வேண்டும்.

** ஆகாசராஜனின் தம்பி தொண்டமானனுக்கும், ஆகாசராஜனின் மகன் வசுதானனுக்கும் அரசாட்சியை கைப்பற்றுவதற்காக விவாதம் பிறந்து, போர் துவங்கியது. அப்போது பத்மாவதியின் பிரார்த்தனைக்கேற்ப ஸ்ரீனிவாசன் அந்த இருவரில் சமாதானம் செய்வித்து, இருவரையும் காத்தான் என்னும் அவனது மகிமையை சர்வோத்தமத்வத்தின் சமர்த்தனைக்காக நிதர்ஷன ரூபத்தினால் கூறினாள் என்று அறிய வேண்டும். 'அத பத்மாவதீ பிரார்த்தனயா ஸ்ரீனிவாஸக்ருத தொண்டமான வஸுதான சந்திக்ரம:' என்று பவிஷ்யோத்தர புராணத்தில் வருகிறது.

**ஆவன நாபி4கமலத3ல்லி புட்டித3**
**தே3வ பிதாமஹா எனிஸிகொம்பு3வனாகி3**
**ஜீவராஷிகெ3 எல்ல**
**ஈ விஷ்ணுவிகெ3 ஆ தி3விஜரேனாஹரெந்து3**
**ஆவ ஸர்வேஷனெந்து3**
**நீவிட்ட பிண்ட3வு ஆர பா1லாஹுதெ3ந்து3**
**பா4வக்3ளுரெல்ல கேளி**
**தே3வ ஹயவத3னனொல்லத3 வாதி3கெ3**
**தாவுதி3ஸி தாயில்ல எம்ப3கா3தெ3 ப3ஹுது3**
**ஸேவிஸவன ஜீவ ||31**

ஆதன - யாரொருவனின். நாபிகமலதல்லி - நாபியிலிருந்து பிறந்த பத்மத்தில், புட்டித தேவ - பிறந்த ஸ்வாமி. ஜீவராஷிகெ எல்ல - அனைத்து ஜீவ சமுதாயத்திற்கு. பிதாமஹ - பிதாமகன் (மூலபிதன்). எனிஸிகொம்புவனாகி - (என்று) சொல்லிக் கொள்கிறான் ஆகையால். ஆவ - அவன். ஸர்வேஷனெந்து - ஸர்வஸ்வமி என்று. ஈ விஷ்ணுவிகெ - பிரம்மபித என்று அழைத்துக் கொள்ளும் விஷ்ணுவிற்கு. ஆ திவிஜரு - அந்த பிரம்மாதி தேவதைகள். ஏனாஹரெந்து - என்ன ஆகவேண்டும் என்று (என்ன சம்பந்தம் உள்ளவர்கள் என்று அறிய வேண்டும்

என்பதை) மற்றும் நீவிட்ட பிண்டவு - (சிரார்த்திகளில் பித்ருகளை குறித்து) நீங்கள் கொடுக்கும் பிண்டங்கள். ஆர பாலாஹுதெந்து - யாருக்கு போய் சேர்கிறது என்று. பாவக்ஞரெல்ல - சாஸ்திரக்ஞர் அனைவரும் (ஆத்திகர்கள் அனைவரும்). கேளி - கேளுங்கள் (நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள். நல்ல பதில்களை பெற்றுக் கொள்ளுங்கள்). தேவஹயவதனன - க்ரீடாதி குணங்களில் சிறந்தவனான ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமியை. ஒல்லத - ஒப்பாத (ஜகத் காரணன் என்று அங்கீகரிக்காத). வாதிகெ - வாதிக்கும் குதர்க்கிக்கு. தா வுதிஸி - தான் பிறந்திருந்தாலும். தா யில்ல எம்ப - தான் இல்லை என்னும் (அல்லது தாயி - தாய். இல்லை என்னும்). காதெ - உலகப்புகழ் பெற்ற கதை. பஹுது - பொருந்துகிறது. (தன் தாய், குழந்தை இல்லாதவள் என்று சொல்லிக் கொள்பவனின் நிலை வருகிறது. அதாவது, முரணாக சொல்கிறான் என்னும் தோஷம் வருகிறது). ஜீவ - ஹே பிராணியே. அவன ஸேவிஸு - (பிதாமகன் என்னும் மூலபிதனுக்கும் பிதனாத - ஜகத்பதியான) ஸ்ரீஹரியை வணங்கு (வணங்கி நற்கதியைப் பெறு).

** இங்கு பிதாமகன் என்றால் ‘தந்தையின் தந்தை’ என்னும் அர்த்தம் அல்ல. பத்மனாபனால் (நாபி கமலத்தில்) பிறந்து, ஸ்ருஷ்டிகர்த்தன் என்று (அனைத்து பிராணிகளின் ஸ்ருஷ்டிகர்த்தன் என்று) பெயர் பெற்ற பிரம்மன் மூலபிதன். அவனிடமிருந்தே பரம்பரையால் அனைத்து பிராணிகளும் பிறந்தன. பிரம்மனை படைத்த ஸ்ரீஹரியே சாட்சாத் ஜகத்பிதன். இவ்வாறு இருக்கையில், பித்ருதேவதைகளே முதலான அனைத்து தேவதைகளும் ஸ்ரீஹரிக்கு புத்ரர்களே ஆகியிருக்கிறார்கள் அல்லவா? புத்ர - என்னும் சொல், பௌத்ர ப்ரபௌத்ராதி சந்ததி அனைவரையும் சொல்கிறது. ஆகையால், ஸ்ரீஹரியை அனைவரும் பித்ருபாவத்தினால் வணங்கவேண்டும்.

ஸ்ரீமகாலட்சுமிதேவியின் அந்தர்யாமியாகி ஸ்த்ரீ ரூபத்தில் இருக்கும் ஸ்ரீஹரி, அனைவரையும் பிரசவிக்கும் ஜகஜ்ஜனனியும் (தாயும்) ஆகியிருக்கிறான். நான் பிறக்கிறேன். எனக்கு இவ்வளவு வயதாகிறது. ஆகிய ஞானம் உள்ள மனிதன் ஸ்ரீஹரியை ஜனனி என்று ஒப்புக் கொள்ளாவிட்டால், என் தாய்க்கு மக்கள் இல்லை என்று சொல்லிக் கொள்வதைப் போலவே ஆகிறது. தன்

ஸ்ருஷ்டிகர்த்தன் ஸ்ரீஹரியே என்னும் நிச்சய ஞானம் உள்ளவன் ஆகவேண்டும்.

** ஸ்ராத்தாதிகளில் பிண்டங்களை அர்ப்பிக்கின்றனர். அந்த பிண்டங்கள் ஜகத்பிதனான ஸ்ரீஹரிப்ரீத்யர்த்தமாகவே என்னும் அனுசந்தானம் ஆகவேண்டும் என்னும் தத்வத்தை சொல்லியவாறு, 'ஆ பிண்டகளு யார பாலெம்புதன்னு யோசிஸிரி' என்று சொல்வதால், பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் பித்ரு பிதாமஹ பிதாமஹரின் அந்தர்யாமிகளான பகவத் ரூபங்களை சிந்தித்து, அர்ப்பிக்கும் கிரமத்தை நினைவுபடுத்தி, அதன் மூலம் ஸ்ரீஹரியே சர்வஸ்வாமியென்றும் சர்வபாவத்தினால் அவனை வணங்கி க்ருதார்த்தர் ஆகவேண்டும் என்றும் உபதேசிக்கிறார்.

**ஆதிகாலத$^3$ல்லி ஆலதெ$^3$லெய மேலெ**
**ஸ்ரீதே$^3$வியரொட$^3$னெ மலகி$^3$த்$^3$தா$^3$க$^3$**
**ஆ தே$^3$வரெல்லிஹரோ**
**மாத$^4$வனக$^3$ரிகெ$^3$ மொத$^3$லாத$^3$ விதி$^4$**
**போதா$^3$க$^3$ போத$^3$ரெல்ல**
**ஆதா$^4$ரவாத$^3$ தத்வங்க$^3$ளெல்லவு அ**
**ளிதா$^3$க$^3$ அளித$^3$ரெல்ல**
**வேத$^3$ ஏகோ நாராயணாஸீதெ$^3$ந்து$^3$ பே**
**ளித$^3$ காரண ஹயவத$^3$னனெ ஜக$^3$தொ$^3$**
**ளதி$^4$க தெ$^3$ய்வவாத$^3$ ||32**

ஆதிகாலத்தில் - ஸ்ருஷ்டிக்கு முன்னர் (இதமக்ரே). ஆலயிலையின் மேல். ஸ்ரீதேவியரொடனெ - பல ரூபங்கள் தரித்த லட்சுமிதேவியுடன். மலகித்தாக - படுத்திருக்கும்போது. ஆ தேவரெல்லிஹரோ - பிரம்மாதி தேவதைகள் எங்கிருக்கின்றனர்? (அனைவரையும் விழுங்கி தன் வயிற்றில் வைத்துக்கொண்ட - ஸ்ரீஹரி படுத்திருக்கிறான்). மாதவனகரிகெ - வைகுண்டத்திற்கு. மொதலாதவிதி - பிரம்மனே முதலான முக்தியோக்ய ஜீவர்கள். போதாக - புறப்பட்டபோது. போதரெல்ல - அனைவரும் (விரஜா நதி ஸ்னானத்திற்கு) சென்றனர். அங்கிருந்து ஸ்ரீஹரியின் உதர பிரவேசம் செய்து. பிரளய காலத்தில் முழுவதும் தியானத்தில்

இருக்கின்றனர்.

ஆகையால், அப்போது யாரும் இல்லை என்று சொல்லப்படுகிறது). ஆதாரவாத - ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு மூலசாதனங்களான. தத்வங்களெல்லவு - ப்ராக்ருத (மஹதாதி) அனைத்து தத்வங்களும். அளிதாக - நஷ்டம் ஆனபோது. அளிதரெல்ல - (அந்த தத்வங்களின் அபிமானிகளான) பிரம்மாதிகள் அனைவரும் நஷ்டமாயினர் (வ்யாபாரரஹிதர் ஆயினர்). (அப்போது). வேத - வேதம். ஏகோ நாராயண ஆஸீதெந்து - 'ஏகோ நாராயண ஆஸீத்' என்று (நாராயணன் ஒருவனே இருந்தான் என்று). பேளித காரண - சொன்னதால். ஹயவதனனெ - ஸ்ரீஹரியே. ஜகதொளு - அனைத்து ஜகத்திற்கு. அதிகதெய்வவாத - சர்வோத்தம தேவதை என்று இருந்தான். (இவ்வாறு சொல்லும் வேதம் ஸ்வயம் அனாதி நித்யம். ஆகையால் ஸ்ரீஹரி அனைத்து காலத்திலும் சர்வோத்தமனே ஆகிறான்).

** 'ஆதிகாலத்தில்' என்பது, 'இதமக்ர ஆஸீத்' என்னும் ஸ்ருதி, ஸ்ருஷ்டிக்கு முன்னர் என்னும் அர்த்தத்தை குறிக்கிறது. 'ஏகோ நாராயண ஆஸீத் ந பிரம்மா ந ச ஷங்கர:' என்று சொல்லும் ஸ்ருதி, நாராயணன் ஒருவனே ஸ்வதந்த்ரனாக ஸ்ருஷ்டிக்கு முன்னர் (பிரளய காலத்தில்) கூட வீற்றிருந்தான் என்றும், அப்போது பிரம்ம ருத்ரர்கள் யாரும் இருந்திருக்கவில்லை என்றும் சொல்கிறது. 'இரலில்ல' என்றால் க்ரியாவிசிஷ்டராக இருந்திருக்கவில்லை என்று அர்த்தம். ஆகையால், சர்வகாரணனான ஸ்ரீநாராயணனே சர்வோத்தமன் என்று நிர்ணயம் ஆகிறது என்கிறார்.

** பிரளய காலத்தில் பிரளயோதக ரூபத்தினாலும் அதில் இருக்கும் வட-பத்ர ரூபத்தினாலும், ஸ்ரீதேவியே இருக்கிறாள். ஸ்ரீஹரிக்கு சயன ரூபளாகவும், அவனுடன் சயனம் செய்து, வணங்கும் ஸ்ரீமகாலட்சுமிதேவியின் மகிமை சிந்தனைக்கு அப்பாற்ப்பட்டதும், அற்புதமும் ஆகும்.

யத்ர வாயூதஷய்யாதிரூபேண ப்ரக்ருதி:ஸ்திதா (பாக-தாத்).

-- பிரளய காலத்தில் வாயு, தண்ணீர், படுக்கை முதலான ரூபங்களால்

ஸ்ரீலட்சுமிதேவியே இருந்திருந்தாள் மற்றும்;

லட்சும்யைவோதகரூபேண ஷய்யாரூபேண சாண்டஜ |
ஆஸீத்கர்ப்போதகே சேத்தம் நான்யதாஸீத் கதஞ்சன ||
(பிரம்மகாண்ட)
-- லட்சுமிதேவியே பிரளய காலத்தில், தண்ணீர் ரூபத்தினாலும், ஷய்யா (படுக்கை) ரூபத்தினாலும் இருந்தாள். ஹே கருடனே. அங்கு வேறு யாரும் இருந்திருக்கவில்லை -- என பிரமாணங்கள் சொல்கின்றன.

** வைகுண்ட நாமக ஸ்ரீஹரி, நித்யபிரகடனாகி, தரிசனம் கொடுக்கும் வைகுண்ட லோகத்தின் நடுவில் சப்த பிரகாரங்களால் சூழப்பட்ட வைகுண்ட என்றே அழைக்கப்படும் (பிறருக்கு அகம்ய ஆனதால் 'அயோத்யா' என்றும் அழைக்கப்படும்) ஸ்ரீஹரியின் அந்தப்புரம் இருக்கிறது. இந்த அந்தப்புரம் விசாலமும் விசித்ரமும் ஆன புரம் - நகரி. இதன் வெளிப்புற வளையத்தில் ஏழாம் பிரகாரத்தை சுற்றியும் ஸ்ரீலட்சுமிதேவியே 'விரஜா' நாமக நதிரூபத்தினால் பிரவகிக்கிறாள்.

பிரளயத்தினால் பிரம்மாண்டம் லயம் அடையும்போது, பிரம்மனுடன் இந்த கல்பத்தில் முக்தர் ஆவதற்கு தயாராக இருக்கும் ஜீவர்கள் அனைவரும், பிரம்மதேவனுடன் இந்த விரஜா நதியில் ஸ்னானம் செய்து, தம் லிங்கதேகத்தையும், அதனுடன் அவர்களின் பிராரப்த கர்மத்தையும் இழந்து, பிறகு ஸ்ரீஹரியின் உதர பிரவேசம் செய்கின்றனர்.

** மூல பிரக்ருதியின் விகாரங்களான தத்வங்கள் ப்ராக்ருத தத்வங்கள் எனப்படுகின்றன. தத்வங்கள் மற்றும் தத்வாபிமானிகளின் விவரங்களைப் பற்றி பத்ய 27ன் குறிப்புகளை பார்க்கலாம். ஒவ்வொரு தத்வத்தின் முக்ய அபிமானியுடன், அவாந்தர (இடை / நடு) அபிமானிகளும் இருக்கின்றனர். தத்வங்கள் பரஸ்பர 'கார்யகாரண ரூபத்தின்' சம்பந்தம் உள்ளவை. த்ரிகுணங்களால் மஹத் தத்வமும், மஹத் தத்வத்தினால்

அஹங்கார தத்வமும் பிறக்கின்றன. அஹங்கார தத்வம் த்ரிவிதமானவை. அதில், வைகாரிகத்திலிருந்து மனஸ், தைஜஸத்திலிருந்து 10 இந்திரியங்கள் மற்றும் தாமஸத்தினால் பஞ்சதன்மாத்ரங்கள் உடனான பஞ்சபூதங்கள் பிறக்கின்றன.

இந்த அனைத்து தத்வங்களுக்கும், ப்ரக்ருதியே மூல காரணம் ஆனாலும், தத்வங்களில் முதலில் பிறந்ததே காரணம் என்றும், பிறகு பிறந்தது கார்ய என்றும் அழைக்கப்படுகிறது. மூலகாரணமான ப்ரக்ருதி 'அவ்யக்த தத்வ' என்று அழைக்கப்படுகிறது. அதன் அபிமானினி ஸ்ரீமகாலட்சுமிதேவி.

ஸ்ருஷ்டி கிரமத்திற்கு எதிரானது லயக்ரமம். பிறகு பிறந்தவை முதலில் லயம் அடைகின்றன. தனக்கு காரணமான தத்வத்தில் அனைத்தும் லயம் அடைகிறது. இவ்வாறு அனைத்து தத்வங்களும் இதே கிரமத்தில் லயம் அடைந்தவாறு, பிரளய காலத்தில், அனைத்தும் அவ்யக்த தத்வத்தில் லயம் அடைகின்றன. இந்த தத்வங்களின் அபிமானி தேவதைகள்கூட இதே கிரமத்தில் ஸ்வோத்தமரில் (அதாவது காரண தத்வங்களின் அபிமானிகளில்) லயம் அடைகின்றனர்.

தத்வாபிமானிகளே முதலான அனைத்து முக்தியோக்ய ஜீவர்களும், பிரளய காலத்தில் கருட சேஷ மார்க்கங்கள் என்று நிரூபிக்கப்படும் இரு மார்க்கங்களினால் வந்து, அனைவரும் பிரம்மதேவனை சேர்கின்றனர். பிரம்மதேவன், விரஜா ஸ்னானத்திற்குப் பிறகு, இங்கு மேலே கூறியதைப் போல ஸ்ரீஹரியின் உதரத்தை, அனைவருடன் பிரவேசம் செய்கிறான்.

நஷ்டே லோகே த்விபரார்த்தவஸானே
மஹாபூதேஷ்வாதிபூதம் கதேஷு |
வ்யக்தேऽவ்யக்தம் காலவேகேன நீதே
பவானேக:சிஷ்யதேऽசேஷ ஸங்க்ய: ||
(பாகவத)

என்று, லய பிரகாரமும், 'ஏகோ நாராயண ஆஸீத்' எனும் ஸ்ருதியின் அபிப்பிராயமும் சொல்லப்படுகிறது. இதன் அர்த்தம்:

இரு பரார்த்தங்கள் என்னும் (பிரம்மனின் 50 ஆண்டு காலம்) பிரம்மனின் ஆயுள் முடியவும், ஜகத் நாசம் அடைந்து ப்ருதிவ்யாதி பூதங்கள் காரண தத்வமான அஹங்கார தத்வத்தில் சேர, அது மஹத் தத்வத்திலும், மஹத் தத்வம் மூல ப்ரக்ருதியையும் சேர்கிறது. கால நியாமக - கால நாமக ஸ்ரீஹரியின் சாமர்த்தியத்தினாலேயே அனைத்து தத்வங்களும் அவ்யக்த தத்வத்தை அடைய, அசேஷ சங்க்யனான (ஸர்வ நாமங்களால் முக்ய வாச்யனான - ' நாமானி ஸர்வாணி யமாவிஷந்தி') நீ ஒருவனே உன் மூலரூபத்தினால் (ஆஸந்த பூர்ணனாகி) ஜாக்ரதனாக இருக்கிறாய்.

**ஹொட்டெயெம்ப3 பொன்ன தொட்டிலொளகி3ட்டு**
**விட்2ட2ல ஜீவர நித்3ரெகொ3ளிஸுவனு**
**ஸ்ருஷ்டிகால ப3ந்தா3க3**
**ஹுட்டிஸி ப3ஹுரூபதா3ட1வனாடி3ஸி**
**இஷ்டங்க3ள கொடு3வ**
**து3ஷ்டமக்கள மண்டெ3 ஹெட்டுவ கெலவர**
**கட்டலெயனு பி3டி3ஸ**
**ஸிஷ்டரெத்திகொம்ப3 ஹயவத3னன பாத3**
**பி3ட்டிய காம்ப3ந்தெ காணதெ3 மன**
**முட்டி ப4ஜிஸோ ஜீவ ||33**

பொட்டெயெம்ப - வயிறு என்னும். பொன்னதொட்டிலொளகெ - தங்கத் தொட்டிலில் (சிதானந்தாத்மகமான தன் வயிறு என்னும் தொட்டிலில்). இட்டு - படுக்கவைத்து. விட்டல - ஸ்ரீஹரி. ஜீவர - (அடுத்த கல்பத்தில் ஸ்ருஷ்டிக்கு வரவிருக்கும்) ஜீவர்களை. நித்ரெகொளிஸுவனு - தூக்க நிலையில் (பிரளய காலம் முடிந்து ஸ்ருஷ்டி காலம் வரும் வரைக்கும்) வைக்கிறான். ஸ்ருஷ்டிகால பந்தாக - ஸ்ருஷ்டிகாலம் வரும்போது, ஹுட்டிஸி - அந்த ஜீவர்களுக்கு யோக்ய சாதன தேகங்களைக் கொடுத்து. பஹுரூபத - பற்பல. ஆடவனாடிஸி - செயல்களை செய்வித்து. இஷ்டங்கள கொடுவ - அவரவர்களின் விருப்பங்களை கொடுக்கிறான். கெலவர - சில துஷ்ட ஜீவர்களின். மண்டெ ஹெட்டுவ - தலை மேல் அடி கொடுத்து புத்தி கற்பிக்கிறான். கட்டலெயனு - நியமத்தை (அவரவர்களின் ஸ்வபாவங்களை). பிடிஸி - விடுவிப்பதில்லை

(வேறுபடுத்துவதில்லை). சிஷ்டரெத்திகொம்ப - ஸாது ஸ்வபாவம் கொண்டவர்களை அன்புடன் ஏந்திக் கொள்கிறான் (அருள்கிறான்). ஹயவதனன - (இந்த சங்கல்பம் உள்ள) ஸ்ரீஹயக்ரீவ தேவனின். பாத - பாதங்களை. ஜீவ - ஹே அல்பசேதனனே. பிட்டெய காம்பந்தெ காணதெ - உதாசீனம் செய்யாமல் (புறக்கணிக்காமல்). மனமுட்டி - மனப்பூர்வகமாக (முயற்சி செய்து). பஜிஸோ - வணங்கு.

** ஸ்ரீஹரியின் வயிறு அப்ராக்ருதமானது - சிதானந்தாத்மகமானது. 'தங்கத் தொட்டில்' என்றதால் இவ்வாறு குறிக்கப்படுகிறது.

** பிரளய காலத்தில் ஸ்ரீஹரியின் உதரத்தில் இருக்கும் சேதன சமுதாயங்களில் சிலர் ஏற்கனவே பல கல்பங்களில் முக்தர் ஆனவர்கள். சிலர் இந்த கல்பத்தின் பிரம்மனுடன் லிங்கதேகத்தை விட்டு, உதர பிரவேசம் செய்த முக்தர்கள். இந்த அனைவரும் ஸ்ருஷ்டிகாலம் வரும்வரைக்கும் ஸ்ரீஹரிதியானத்தில் இருக்கின்றனர். தியானத்தால் கிடைக்கும் ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். ஸ்ருஷ்டி துவங்கியவுடன் சாதன தேகங்களை அடைந்து உலகத்தில் வருகின்றனர். அனைவரும் பிரளய காலம் முழுவதும் தூக்க நிலையில் இருக்கின்றனர்.

(பாவி-பிரம்மான வாயுதேவரைத் தவிர மற்ற அனைவரும், அதாவது, ஒரு கல்பத்தைவிட அதிகம் சாதனை உள்ள தேவாதி மற்ற முக்தியோக்யர்கள், கல்பாதி அசுரர்கள், மனுஷ்ய மத்யமர் ஆகியோர் தூக்க நிலையில் இருக்கின்றனர்). முக்த வர்க்கத்தில் இருப்பவர்கள், இந்த கல்பத்தில் லிங்கதேகத்தை விட்டு முக்தராகி ஸ்ரீஹரியின் உதர பிரவேசம் செய்தவர்கள், ஸ்ருஷ்டிகாலம் வரும்போது ஸ்ரீவாசுதேவனால் ஷ்வேதத்வீபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்கு ஸ்ரீ நாராயணனின் தரிசனமான பிறகு, ஸ்வயோக்ய பூர்ணானந்தானுபவத்திற்கு தகுதி பெறுகிறார்கள். ஸ்ரீஹரியின் உதரத்தில் இருப்பவர்களான ஜீவர்களின் நிலைகளைப் பற்றி பாரத தாத்பர்ய வாக்கியங்களால் அறியலாம்.

** பிரளய காலத்தில் பரமாத்மனின் உதரத்தில் இருக்கும் ஜீவர்கள், யார்யார் எந்தெந்த பாகத்தில் இருக்கின்றனர் என்னும் விவரங்களை பிரம்மாண்ட புராணம் இவ்வாறு சொல்கிறது.

தாமத்ரயஸ்திதா முக்தா வடபத்ரஸ்தஷௌரிண: |
குக்ஷிம் கதா த்யானயுக்தா யாவத்ஸ்ருஷ்டிர் பவேத்புன: ||
தாவத்திஷ்டந்தி சானந்தா: ஸ்ருஷ்டௌ யாந்தி ஸ்வகம் ஸ்தலம் |
தம:ப்ராப்தா தாமஸாஸ்ச ஸ்வரூபேண வ்யவஸ்திதா: |
நாபேரதஸ்ச திஷ்டந்தி துக்கமாத்ரஸ்வரூபிண: |
நாபேதுபரி பாகே து ஸ்ருதிஸ்தா: ஸுப்திமாகதா: ||
த்ரிவர்கா அபி திஷ்டந்தி யாவத்ஸர்க்க: புனர்பவேத் ||

* ஸ்ரீஹரியின் குக்ஷியில் (வயிற்றின் ஒரு பாகம்), ஸ்ருஷ்டி துவங்கிய பிரகு வைகுண்டாதி தாம-த்ரயங்களை அடைந்து ஆனந்தாதிஷயத்தை அடையும் முக்த ஜீவர்கள் தியானத்தில் இருக்கின்றனர்.
* நாபியின் கீழ் பாகத்தில் நித்ய தமஸ்ஸினை அடைந்த தாமஸர்கள் (துக்கமாத்ர ஸ்வரூப நிலையை அடைந்தவர்கள்) இருக்கின்றனர்.
* நாபியின் சிறிது மேல் பாகத்தில் அமுக்தர்கள் - அதாவது, ஸ்ருஷ்டியின் துவக்கம் ஆனவுடன் சம்சாரத்திற்கு வரவிருக்கும் ஜீவர்கள் தூக்க நிலையில் இருக்கின்றனர்.

** பூர்ணகாமனான ஸ்ரீஹரிக்கு ஜகத்தின் ஸ்ருஷ்ட்யாதி வியாபரங்களால் எவ்வித பலன்களும் இல்லை. த்ரிவித ஜீவர்களுக்கு அவரவர்களின் கதிகளை கொடுப்பதற்கு மட்டுமே ஸ்ருஷ்ட்யாதிகள் நடக்கின்றன.

ஸ்ரக்ஷ்யே ஹி சேதனகணான் ஸுகதுக்கமத்ய
ஸம்ப்ராப்தயே தனுப்ருதாம் விஹ்ருதிம் மமேச்சன் |
ஸோயம் விஹார இஹ மே தனுப்ருத்ஸ்வபாவ
ஸம்பூதயே பவதி (பாரத தாத்பர்ய)

ஸ்ரீஹரி, 'ஸ்வரூபபூத வெறும் சுகத்தையும், வெறும் துக்கத்தையும், துக்கமிஸ்ர சுகத்தையும் அந்தந்த ஸ்வரூபங்கள் உள்ள

ஜீவர்களுக்கு கொண்டு சேர்க்க (த்ரிவித ஸ்வபாவங்களின் தோற்றத்திற்காக மட்டும்) த்ரிவித ஜீவர்களையும் படைக்கிறேன். இது என் க்ரீடை' என்கிறான். ஸ்திதி காலத்தில் ஸுஜீவர்களை ஸன்மார்க்கத்தில் வைத்து பற்பல சுகங்களை கொடுக்கிறான். துர்மார்க்கத்தில் விழுந்தவர்களை தக்க பாடம் கற்பித்து, சன்மார்க்கத்தை அடைய வைத்து அருள்கிறான். இத்தகைய பிரபுவை புறக்கணிக்காமல், அவரை பக்தியுடன் வணங்கி தன்யர் ஆகவேண்டும் என்று உபதேசம் செய்யப்படுகிறது.

**மக்கள தப்புக3ள லெக்கிஸதெ3 தாயி**
**மிக்க க2ளர தப்பு உக்கு தக்3கி3ஸுவளு**
**பக்ஷிவாஹன னொம்மொம்மெ**
**ஸொக்கி நடெ3த3ரு ப4க்குதர காவ**
**நக்கு காருண்யத3லி**
**உக்கித3 ரக்கஸர ஷிக்ஷிஸதெ3 பி3ட3**
**க்ஷிபாம்யஜஸ்ரவெம்ப3**
**அக்கொ பத3வ மக்கர்மக்ருன் மத்பரமெம்ப3**
**உக்தியனேனெம்பெ3 ஹயவத3னன ப4ஜிஸி**
**முக்திபே3கெம்பு3வரு ||34**

தாயி - தாய் ஆனவள். மக்கள - தன் (ஸாது ஸ்வபாவத்தின்) மக்களின். தப்புகள - தவறுகளை (அபராதங்களை). லெக்கிஸதெ - கவனத்தில் கொள்ளாமல் (மன்னித்து). மிக்க களர - (தன் மக்களே ஆன) மற்ற துஷ்ட மக்களின். தப்பு - தவறுகளை. உக்கு - அதன் வளர்ச்சியை. தக்கிஸுவளு - குறைப்பாள். [பற்பல தவறுகளுக்கு காரணமான அவர்களின் வளர்ச்சியை / கர்வத்தை, தக்க சிகிச்சையைக் கொடுத்து குறைக்கிறாள்]. பக்ஷிவாஹனனு - கருட வாகனனான ஸ்ரீஹரி. ஒம்மொம்மெ - சில சமயங்களில். ஸொக்கி நடெதரு - (அஞ்ஞானத்தால்) கர்வத்தினால் நடந்தாலும் (ஸ்வதந்த்ர கர்த்ருத்வாதிகளை தம்மில் இருப்பதாக நினைத்து நடந்தாலும்). காருண்யதலி நக்கு - கருணையால் மந்தஹாஸ மாடி (தண்டிக்காமல்). பக்குதர காவ - தன் பக்தர்களை காக்கிறான். உக்கித - வளர்ச்சியடைந்த (அதிக பலம் கொண்டு தன் நியமங்களை மீறிய). ரக்கஸர - அசுரர்களை (துஷ்டர்களை - தன் மக்களெ ஆனாலும்). சிக்ஷிஸதெ பிட - நரகாதி தண்டனையைக்

கொடுக்காமல் இருப்பதில்லை. க்ஷிபாம்யஜஸ்ரமெம்ப - 'க்ஷிபாம்யஜஸ்ரம்' என்னும் (கீதையில் இருக்கும்). அக்கோ - அதைப் பார். பதவ - (அவனின்) நுடியை. (அப்படியே). மத்கர்மக்ருஸ்மத்பரமெம்ப - 'மத்கர்ம க்ருன்மத்பரம்' என்னும் (கீதையின்). உக்தியனு - நுடியை. ஏனெம்பெ - என்னவென்று சொல்வது? (சுஜீவ, துர்ஜீவர்களுக்கு கிடைக்கும் அந்த்ய கதிகளை சொல்லும் இந்த கீதா வாக்கியங்கள் தெளிவாக இருக்கிறதே?). (ஆகையால்), முக்திபேகெம்புவரு - முமுக்ஷுகள் (சம்சாரத்திலிருந்து விடுதலை வேண்டி நித்ய சுகானுபவத்தை விரும்புபவர்கள்). ஹயவதனன - ஹயக்ரீவரூபி ஸ்ரீஹரியை. பஜிஸி - வணங்குங்கள்.

* ஸ்ரீஹரி, பக்தாபராத சஹிஷ்ணு. தேவேந்திரனின் அகல்யா ஜாரத்வ, சந்திரனின் குருபத்னி கமன, ப்ருகு ரிஷிகளின் (தன் மார்பில்) எட்டி உதைத்தல், ஆகிய மகா அபராதங்களை புறக்கணித்து அவர்கள் அனைவரையும் அருளியிருக்கிறான். எண்ணிக்கையற்ற ஏராளமான தைத்யர்களை சம்ஹரித்து தமஸ்ஸிற்கு அனுப்பினான். 'ஸ்ருதிஸ்ம்ருதி ஹரேராக்ஞே' - ஸ்ருதி ஸ்ம்ருதிகள் ஸ்ரீஹரியின் ஆணைகள் ஆகும். அவற்றை மீறுவது தவறாகும். இத்தகைய தவறுகள் நம்மால் ஏராளமாக செய்யப்படுகின்றன. ஆகையாலேயே :

அபராத சஹஸ்ராணி க்ரியந்தேऽஹர்னிஷம் மயா |
தானி சர்வாணி மே தேவ க்ஷமஸ்வ புருஷோத்தம ||

என்று தினமும் பிரார்த்திக்க வேண்டும். ஸ்ரீஹரி மன்னிக்க மாட்டான் என்றால், இந்த பிரார்த்தனை வீண் என்று அர்த்தம் ஆகிறதே? அவன், கருணைக்கடல் ஆகையாலே இத்தகைய பிரார்த்தனையை செய்ய வேண்டும்.

** த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மின் தெய்வ ஆஸுர ஏவ ச |
விஷ்ணுபக்திபரோ தெய்வோ விபரீதஸ்ததாऽஸுர: ||
(ஸதாசார ஸ்ம்ருதி)

அதாவது, உலகில் தெய்வ அசுரர் என்னும் இரு ஸ்வபாவத்தின் ஜீவர்கள் இருக்கின்றனர். தெய்வ ஸ்வபாவத்தவர் விஷ்ணு

பக்தியே ஸ்வரூபமாக உள்ளவர்கள். அசுர ஸ்வபாவத்தவர் அதற்கு எதிரான (விஷ்ணு த்வேஷி) ஸ்வரூபம் கொண்டவர்கள். இந்த இரு வித ஸ்வபாவத்தின் ஜீவர்களுக்கு கிடைக்கும் அந்த்ய-கதிகளும் வெவ்வேறாகவே இருக்கின்றன. தேவஸ்வபாவத்தைக் கொண்டவர்களுக்கு நித்யசுக ரூபத்தின் நிலையும் (வைகுண்டாதி லோகங்களும்), அசுர ஸ்வபாவத்தவர்களுக்கு நித்ய துக்கமே (அந்தம் தமஸ்ஸே முதலான ஸ்தானங்களும்) கிடைக்கின்றன.

தானஹம் த்விஷத: க்ரூரன் ஸம்ஸாரேஷு நராதமான் |
க்ஷிஸாம்யஜஸ்ரமஷுபான் ஆஸுரீஷ்வேவ யோனிஷு |
ஆஸுரீம் யோனிமாபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி |
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோயாந்த்யதமாம் கதிம் || (கீதை)

அதாவது, அமங்கள ஸ்வரூபரான, ஹரித்வேஷாதி உக்ர ஸ்வபாவத்தின் மனுஷ்ய அதமர்களை, சம்சார சாகரத்தில், அசுர ஜாதி தேகத்தில் திரும்பத்திரும்ப தள்ளுகிறேன் (பிறக்க வைக்கிறேன்). இவர் இவ்வாறு பல பிறவிகளில் ஆஸுரி தேகங்களைப் பெற்று, என்றும் என்னை அடையாமல், நித்ய நரகத்தை (அந்தம் தமஸ்ஸினை, அதம கதியை) அடைகின்றனர் -- என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஹரிபக்த்யாதி ஷுப குண ஸ்வபாவத்தின் ஜீவர்களுக்கு ஸாயுஜ்யாதி நித்யசுகானுபவ முக்தி கிடைக்கிறது.

இவ்வாறான நிர்ணயத்தை, ஸ்ரீகிருஷ்ணன் விஷ்வரூபத்தை முடித்துக் கொண்டு, அர்ஜுனனுக்கு தன் அடைவதற்கான முக்கிய வழியை உபதேசம் செய்தவாறு,

மத்கர்ம க்ருன்மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: |
நிர்தெய்ர: ஸர்வபூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ ||

அதாவது, நானே (ஸ்ரீகிருஷ்ணனே) சர்வோத்தமன் என்னும் நிச்சய ஞானம் உள்ளவனாகி, என் ப்ரீத்யர்த்தமாக மட்டும் ஸ்வ-விஹித-கர்மங்களை செய்தவனாகி, கட்டுப்படுத்தும் விஷயங்களில் ஈடுபடாமல், என்னில் பக்தி உள்ளவனாகி, அனைத்து சஜ்ஜனர்களில் (அனைத்து பிராணிகளில்) எதிரி பாவத்தை விட்டு, என்னையே சரணடைந்தவன், என்னையே அடைகிறான் - என்று ஸ்ரீகிருஷ்ணன்

உபதேசிக்கிறான். ஆகையால், நித்யசுகாபேக்ஷிகளான அனைவரும் ஶ்ரீஹரியையே சரணடைந்து பஜிக்க வேண்டியது மிகவும் அவசியம் ஆகும்.

**எம்ப$^3$த்து நால்குலக்ஷ யோனிக$^3$ளல்லி**
**தும்பி$^3$ர்த்த$^3$ ஜீவரிகீ$^3$ருபங்க$^3$ளெ**
**இம்பா$^3$த$^3$ ப$^3$ஹரூப**
**ஸம்ப்$^4$ரமதெ$^3$ நிஜரூபதி$^3$ந்தெ$^3$ஸெவ**
**கம்பு$^3$ சக்ராதி$^3$க$^3$ள**
**எம்போ$^3$ மாதிகெ$^3$ ஸந்தே$^3$ஹ ஸல்ல மே**
**லும்ப$^3$ ஸுக$^2$வனீவ**
**ஷம்பு$^4$ முக்$^2$யகு$^3$ருக$^3$ளிந்த$^3$ கேளிரோ நா**
**நெம்ப$^3$ ஹங்க்ருதியிந்த$^3$ ஹயவத$^3$னன பா**
**தா$^3$ம்பு$^3$ஜகிந்தேருவ ||35**

எம்பத்து நால்கு லட்ச யோனிகளில் - 84 லட்ச யோனிகளில் (பிராணி தேகங்களில்). தும்பித - நிரம்பியிருக்கும். ஜீவரிகெ - ஜீவசேதனர்களுக்கு. இம்பாத - பிம்பனான (ஆதரவனான). ஈ ரூபங்களெ - இந்த பிம்பங்களே (பிம்ப ரூபங்களே). பஹுரூப - அனந்தரூபங்களாக இருக்கின்றன. (இந்த பஹுரூபங்கள்). எஸெவ - விற்றிருக்கும். கம்புசக்ராதிகள - ஷங்கசக்ரங்கள் உள்ள. ஸம்ப்ரமத நிஜரூபதிந்த - மகா வைபவத்தைக் கொண்ட மூலரூபத்தின் அம்சங்களே ஆகும். எம்போ மாதிகெ - என்று சொல்லும் நுடிக்கு. ஸந்தேஹ ஸல்ல - சந்தேகம் இல்லை. மேலும்ப ஸுகவனீவ - மேலே - வைகுண்டாதி மேல் உலகங்களில். உம்ப - அனுபவிக்கும் அல்லது உண்ணும் சுகத்தைக் கொடுக்கிறான். அல்லது, மேலெ - இது மட்டுமல்ல. உம்பஸுகவனீவ - அனுபவிக்கும் சர்வவித சுகங்களை கொடுக்கிறான். ஷம்புமுக்ய குருகளிந்த - ருத்ராதி ஞானோபதேஷகர்களால் (ஷம்பு - பிரம்ம. பிரம்மாதிகுருகளால்). கேளிரோ - கேட்டு அறியுங்கள். நானெம்ப அஹங்க்ருதியிந்த - 'நான்' என்னும் கர்வத்தினால் (ஸ்வதந்த்ர கர்தன் என்னும் சிந்தனையில்). ஹயவதனன - ஶ்ரீஹரியின். பதாம்புஜகெ - சரண கமலத்தை. எந்தேருவ - எப்படி சேர்வான்? (அடைவதற்கு சாத்தியமே இல்லை).

** ஜீவராஷிபிராகீர்ண அண்டகோஷாங்க்ரீபோ மஹான்' (பாகவத). விசாலமான பிரம்மாண்ட என்னும் வ்ருக்ஷம், ஜீவராசிகளால் நிரம்பியிருக்கிறது. ஜீவராசிகளோ ஏராளமான எண்ணிக்கையில் இருக்கின்றனர். ஒவ்வொரு ராஷியிலும் ஏராளமாக இருக்கின்றனர். 'பரமாணுப்ரதேஷேऽபி ஹ்யனந்தா: ப்ராணிராஷய:' (விஷ்ணு தத்வ நிர்ணய). ஒவ்வொரு பரமாணு அளவிற்கு சிறிய இடங்களில்கூட அனந்த பிராணிகள் இருக்கின்றன. ஸ்ருதியும் இவ்வாறே சொல்கிறது.

அனாகதா அதீதாஸ்ச யாவந்த: ஸஹிதா:க்ஷணா: |
அதீதானாகதாஸ்சைவ யாவந்த: பரமாணவ: |
ததோऽப்யனந்தகுணிதா ஜீவனாம் ராஷய: ப்ருதக் || (வத்ஸஸ்ருதி)

இறந்த-எதிர் காலங்களில் மொத்தம் எவ்வளவு நொடிகள் இருக்கின்றனவோ, அதே காலங்களில் எவ்வளவு பரமாணுகள் இருக்கின்றனவோ, அதைவிட அதிக எண்ணிக்கையில் ஜீவராசிகள் இருக்கின்றன. ஜீவருக்கு கிடைக்கும் ஸ்தூல தேகங்களை, தேவ- தானவ- மானவ- பசு- பக்ஷ்யாதி பேதத்தினால் 84 லட்ச ஜாதிக்கு (குழுவிற்கு) சேர்கின்றன என்று தொகுத்து சொல்லப்பட்டிருக்கிறது. நவீன விஞ்ஞானத்திற்கேற்ப கிருமி, பூச்சி ஆகிய விவரங்களையும் கவனித்தால், இன்னும் அதிக எண்ணிக்கையில் தேக ஜாதிகள் கிடைத்தாலும் கிடைக்கலாம். இருக்கட்டும். ஒவ்வொரு யோனியில் எண்ணிக்கையற்ற ஜீவர்கள் தேகங்களை அடைகின்றனர். ஒவ்வொரு ஜீவ சேதனர்களின் அந்தர்யாமியாகி ஸ்ரீஹரி 'ஒவ்வொன்று பிம்பரூப'த்தினால் நிலைத்திருக்கிறான். இவ்வாறு ஜீவபிம்பங்களே அனந்தமாக இருக்கின்றன. ஸ்ரீஹரி அனைத்து அதிஷ்டானங்களிலும் அனந்தானந்த ரூபங்களால் வீற்றிருக்கிறான். இவ்வாறு இருக்கும் அனந்த ரூபங்களால் அபின்னனானவன், சங்க சக்ராதிகளால் விராஜிக்கும் மூலரூபி ஸ்ரீஹரி. இந்த தத்வத்தில் எந்த சந்தேகத்திற்கும் இடமில்லை. 'தத்வோபதேஷ குரு'களால் இந்த பிரமேயத்தின் மேலதிக விஷயங்களை கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

** உலகம் முழுக்க, பரமாத்மனின் ப்ரதிபிம்பங்களே ஆகும். ஜடசேதனாத்மக எண்ணிக்கையற்ற வஸ்துகளால் கூடிய

ஜகத்திற்கு இந்த பிரதிபிம்பத்வம் ஒரே மாதிரியாக இல்லை. ஆகையாலேயே சேதனர்களில் குணாதி தாரதம்யம் இருக்கிறது. ஜட வஸ்துகளுக்கு சேதனரைவிட குறைவான பிரதிபிம்பத்வம் மட்டுமே. 'சிச்சேத்யமேததகிலம் அம்ஷாம்ஷ ப்ரதிபிம்பிதம்' என்று சொல்லியிருப்பதைப் போல, பகவதாகாரத்தில் ஸாத்ருஷ்யமும், ஸத்வ (அஸ்தித்வ), சித்வ (ஞான), முதலான தர்மங்களில் ஸாத்ருஷ்யமும், பகவதீனத்வமும் இருப்பதால் மட்டும் ஜடசேதன வஸ்துகள் அனைத்தும் பரமாத்மனின் ப்ரதிபிம்பங்கள் ஆகும் - கண்ணாடி முதலான உபாதிகளில் தெரியும் உபாத்ஜன்ப பிரதிபிம்பங்களைப் போல அல்ல. ஜடவஸ்துகளுக்கு பகவந்தனின் ஸாத்ருஷ்யம் ஸத்தாதிகளால் மட்டுமே. ஜீவர்களைப் போல ஞானாதிகளில் இல்லை.

தமோயோக்ய ஜீவர்களுக்கு, முக்தி யோக்ய ஜீவர்களைப் போல ஆனந்தாதிகளின் ஸாத்ருஷ்யமும் இல்லை. பிரம்மாதி உத்தம ஜீவர்களுக்குக்கூட பகவந்தனின் ஸாத்ருஷ்யம் மிகக் குறைவே. குண ஸாம்யம் யாருக்கும் இல்லவே இல்லை. ஸ்ரீமகாலட்சுமிதேவிக்குக்கூட இல்லை. பகவததீனத்வம் அனைவருக்கும் சமமே. சகல வஸ்துகளின் பிம்பனான ஸ்ரீஹரியின் அனந்தபிம்ப ரூபங்கள் மூலரூபத்தின் அம்சங்களே ஆனாலும், அம்சங்களுக்கும் அம்ஷிக்கும் (மூல ரூபத்திற்கும்) எந்த பேதமும் இல்லை. இவ்வாறு இருப்பது பகவந்தனின் அசிந்த்ய சக்தியினாலேயே சாத்தியம்.

** ஈஷ்வராத் ஞானமன்விச்சேத் மோக்ஷமிச்சேத் ஜனார்த்தனாத் -- மோக்ஷப்ரதத்வ ஞானத்தை ஈஷ்வரனிடமிருந்தும், மோட்சத்தை (ஞானத்தின் பலனை) ஜனார்த்தனனிடமிருந்தும் விரும்ப வேண்டும் என்று சொல்வதால், மனோபிமானியான ருத்ரதேவனின் பிரஸாதத்தினாலும், அவனின் அருளுக்கு பாத்திரரான மற்ற ஞானிகளாலும், தத்வஞானத்தை அடைய வேண்டும். 'ஷம்பு' சொல்லுக்கு பிரம்ம என்னும் அர்த்தமும் உள்ளது. ஞானோபதேஷகர்களில் (குருகளில்) பிரம்மதேவனே சிறந்தவன். பிரம்மனின் (வாயுதேவனின்) அருளுக்கு பாத்திரரான மற்ற அனைத்து ஞானிகளும் சகல முக்தியோக்ய ஜீவர்களுக்கு

குருஸ்தானீயர் ஆவர். ‘பிரம்மாந்தா குரவ: ஸாக்ஷாத் இஷ்டம் தெய்வம் ஸ்ரிய: பதி:’ என்னும் பிரமாண வாக்கியம்,

பிரம்மனே கடைசியாக உள்ள ஞானிகள் அனைவரும் குருகள் - லட்சுமி நாராயணனே இஷ்ட தேவதை - என்று சொல்கிறது. வாயு அவதாரரான ஸ்ரீமதானந்த தீர்த்தரே குரூத்தமர் - அவராலேயே இந்த பத்யத்தில் சொல்லப்பட்ட நிர்ணயங்களை அறிய வேண்டும் (அவரால் இயற்றப்பட்ட சாஸ்திரங்களாலேயே அறிய வேண்டும் என்று அர்த்தம்).

** ‘அஹங்க்ருதி’ என்றால் ‘அஹம் கர்தா’ என்னும் சிந்தனை. ஜீவனும் கர்தனே - ஆனால், ஸ்வதந்த்ர கர்தன் அல்ல. ஸ்ரீஹரி அவனில் இருந்து செய்து செய்விப்பதைப் போல பராதீன கர்தன் மட்டுமே. நானே கர்தன் என்று அறிவது மித்யாஞானம் ஆகும். ‘ஈஷ்வரோऽஹம்’ என்னும் ஞானத்தைப் போல. மித்யா ஞானிக்கு என்றும் ஹரிலோகங்களின் பிராப்தி இல்லை.

**ஒந்தெ3 அம்பு3தி4 ஒந்தெ3 கட3கோ3லு நேணொந்தெ3**
**ஒந்தெ3 ஸாத4ன ஸர்வஸாத4னங்க3ளு ஸரி**
**முந்தெ3 பரிவ தை3த்யர**
**வ்ருந்த3க்கெ ஸுதெ4யில்ல வ்ருந்தா3ரகரிகு3ண்டு**
**எந்து3 நிர்ணயிஸிதாகி3**
**முந்த3ண முகுதியோக்3யரிகு3ண்டு இதரரி**
**கெ3ந்தெ3ந்தி3கா3க3தைய்ய**
**தந்தெ3 ஹயவத3னனொல்லத3 வாதி3கெ3**
**ஸந்தே3ஹ ஸல்ல பூ3தி3ய ஹோமத3ந்த3தி3**
**எந்தெ3ந்தி3க3ஹுதெய்ய ||36**

ஒந்தெ அம்புதி - அதே (பாற்கடலே) கடல். ஒந்தே கடகோலு - அதே (மந்தர பர்வதமே) மத்து. நேணொந்தெ - ஒன்றே (தேவதைத்யர் இருவருக்கும் ஒன்றேயான) வாசுகி சர்ப்ப ரூபத்தின் கயிறு. ஒந்தே ஸாதன - மற்ற அனைத்து பொருட்களும் அதுவே. ஸர்வஸாதங்களு சரி - (அமிர்தத்திற்காக பாற்கடலை கடைந்த சாதனங்கள் அனைத்தும் (இருவருக்கும்) சமமே. முந்தெ பரிவ - அடுத்து நடக்கப் போவதை அறியாத. தைத்யர வ்ருந்தக்கெ -

தைத்ய சமூகத்திற்கு. ஸுதெயில்ல - அமிர்தம் கிடைக்கவில்லை. வ்ருந்தாரகரிகெ உண்டு - தேவதைகளுக்கு கிடைத்தது. எந்து - இவ்வாறு (அம்ருதவு - மோட்ச அல்லது ஞானம், அதற்கு தகுதியுள்ள ஸ்வபாவம் உள்ளவர்களுக்கு மட்டும் என்று). நிர்ணயிஸிதாகி - (பாகவதத்தில் சொல்லப்பட்ட அமிர்த மதன சரித்திரம்) நிர்ணயித்திருப்பதால், முந்தண முகுதி - (சம்சாரத்தை தாண்டிய பிறகு) அடுத்திருக்கும் மோட்சம் (நித்ய நிர்துக்கானந்த நிலை). யோக்யரிகுண்டு - தகுதி உள்ளவர்களுக்கு மட்டும் உண்டு. இதரரிகெ - மற்றவர்களுக்கு (முக்தி யோக்யர் அல்லாத தைத்யாதி ஸ்வபாவம் கொண்டவர்களுக்கு). எந்தெந்திகெ - எந்த காலத்திலும். ஆகதைய்ய - கிடைக்காது. தந்தெ ஹயவதனன - ஜகத்பதியான ஸ்ரீஹரியை. ஒல்லத வாதிகெ - (அவன் ஸர்வோத்தமன் என்றும் தான் அவனின் நித்ய தாசன் என்றும்) அறிந்து அங்கீகரிப்பவனுக்கு. பூதிய ஹோமதந்ததி - சாம்பலில் ஹோமம் செய்வதைப் போல (சரு முதலான ஹவிஸ்களை அக்னி இல்லாத சாம்பலில் போட்டதைப் போல). எந்தெந்திகு - எந்த காலத்திற்கும் எந்த முயற்சி செய்தாலும். ஆஹுதைய்ய - ஆகிறது (வீண் ஆகிறது). ஸந்தேஹ ஸல்ல - இதில் சந்தேகம் இல்லை (தகுதியற்றவர்களின் முயற்சிகள் நிஷ்பலன் ஆகிறது).

தேவதையர்கள் இருவரும் அமிர்தத்தை எடுப்பதற்காக பாற்கடலைக் கடைந்தனர். மந்தர மலையே மத்தானது. சர்ப்பராஜ வாசுகியே மத்தினை சுற்றும் கயிறு ஆனான். மந்தர மலையைக் கொண்டு வந்து கடலில் நிற்க வைப்பதற்கு ஸ்ரீஹரியே உதவினார். கருடனின் மேல் அந்த மலையை வைத்து கொண்டு வந்தான். அஜித நாமக இன்னொரு ரூபத்தினால் தேவதைகளுடன் சேர்ந்து (சர்ப்பத்தை) கயிற்றைப் பிடித்து கடைந்தான். மந்தர பர்வதம் மூழ்கும்போது கூர்மனாகி தன் முதுகு மேல் தாங்கிப் பிடித்து கடைவதற்கு உதவினான். தன்வந்தரி நாமக இன்னொரு ரூபத்தினால் ஸுதா (அமிர்த) கலசத்தை கையில் பிடித்து ப்ரத்யக்ஷம் ஆனான். தேவதைகளுக்கு அமிர்தத்தை கொடுக்காமல் தாமே அபகரிக்கும் தைத்யரின் கெட்ட சிந்தனையை வெளிப்படுத்துவதற்காக தன் கையில் இருந்த அமிர்த கலசத்தை தைத்யர்கள் பிடுங்கிக் கொள்ள வாய்ப்பளித்தான்.

ஸ்த்ரீ ஸௌந்தர்யத்தின் மொத்த உருவமாக இருந்த மோகினி ரூபத்தினால், அமிர்தத்திற்கு தகுதியற்ற தைத்யர்களை ஏமாற்றி, தேவதைகளுக்கு அமிர்தத்தைக் கொடுத்தான். அமிர்தத்தை தாம் கஷ்டப்பட்டு அடைந்தோம் என்னும் கர்வத்தைக் கொண்ட தைத்யர்கள், ஸ்ரீஹரியை சூழ்ந்து அமிர்தத்தை வசப்படுத்திக் கொண்டனர். அவர்கள் என்றும் ஸ்ரீஹரியை எந்த பிரகாரத்தினாலும் வணங்கவில்லை. அத்தகைய அயோக்யர்களுக்கு அமிர்தம் எப்படி கிடைக்கும்? ஞானம் (யதார்த்தஞானம்) ஞானயோக்யருக்கு மட்டுமே கிடைக்கும் என்பதால், 'ஓம் ஸர்வதா அபி து த ஏவோபயலிங்காத் ஓம்' என்று (பிரம்மஸூத்ர) சொல்கிறது. பிரம்ம வித்யையை கற்பதற்கு, இந்திர விரோசன இருவரும் பிரம்மதேவனிடம் சென்றனர். குறிப்பிட்ட காலம் வரை இருவரும் குரு சுஷ்ருஷையை செய்து வந்தனர்.

இருவருக்கும் உபதேசமும் ஒரே மாதிரியே ஆனது. ஞான லாபத்திற்குத் தேவையான உபதேஷாதி சாதனங்களால் இந்திர விரோசனன் இருவரும் சமரே ஆனாலும், பரஸ்பரம் விரோதமான ஞானங்களே அவர்களுக்கு கிடைத்தது. அக்ஷிஸ்திதனை சர்வோத்தமனான ஸ்ரீஹரி என்று இந்திரன் அறிந்தான். தைத்யனான விரோசனன், அக்ஷிஸ்திதன் தானே என்று (கண்ணாடியில் இருக்கும் தன் பிரதிபிம்பத்தின் கண்ணில் தன்னையே கண்டு) அறிந்து மித்யாஞானி ஆனான்.

இவ்வாறே ஞானஷப்த முக்யவாச்யமான ஸ்ரீஹரியின் அபரோக்ஷ தர்ஷனம், தேவஸ்வபாவத்தின் ஜீவர்களுக்கு மட்டுமே கிடைக்கிறது. பிறருக்கு அல்ல. தேவதைகளுக்கு மட்டும் அம்ருதம் கிடைப்பதற்கான காரணத்தை ஸ்ரீமத் பாகவதம் இவ்வாறு சொல்கிறது.

ஏவம் ஸுராசுரகணா: ஸமதேஷகால ஹேத்வர்த்தயோக கதயோऽபி பலே விகல்பா: |
தத்ராம்ருதம் ஸுரகுணா:பலமஞ்சஸாபு: யத்பாதபங்கஜரஜ: ஸ்ரயணான்ன தைத்யா: ||

இவ்வாறு தேவதைத்ய சமூகங்கள் தேஷ, கால, காரண, பிரயோஜன மற்றும் சாதன வகைகளால் சமராக இருந்தாலும், பல பிராப்தியில் விரோதங்களைக் கொண்டிருக்கின்றன. (பரஸ்பரம் எதிர் எதிரான பலன்களைப் பெறுகின்றன).

இருவருக்கும் கிடைத்த உபதேசங்கள் ஒன்றேயானாலும், தேவ சமூகம் ஸ்ரீஹரியின் பாத கமலங்களை (பாததூளியை) சேர்ந்த காரணத்தால், அமிர்தம் என்னும் பலனையே அடைந்தனர். தைத்யர் அதனை அடையவில்லை.

**கள்ளப4க்தரிகெ3 ஸல்லது3 ஷுப4ப2ல**
**எல்ல பீ3ஜகெ ஸல்லது3 ஸல்லிகெ1**
**எல்லி யோக்3யதெயுண்டோ**
**அல்லியெ ப2ல அதி3ல்லத3வரிகி3ல்ல**
**ப3ல்லபு3த4ரு கேளிரோ**
**எல்ல ஸாத4னக3ளொல்லத3வகெ3 ஈ**
**ப2ல்ல து3ர்லப4காணிரோ**
**ப3ல்லித3 ஹயவத3னனொல்லிதா3க3லெ அ**
**ஹல்யெயித்3த3 ஷிலெ ஹெண்ணாத3வோலு இம்**
**துளித3த்3து3 ஹெண்ணாயிதெ ||37**

கள்ள பக்தரிகெ - டாம்பீக பக்தர்களுக்கு. ஷுபபல - நற்பலன். ஸல்லது - கிடைப்பதில்லை. எல்ல பீஜகெ - அனைத்து விதைகளுக்கும். ஸல்லிகெ - விளையும் பலன். ஸல்லது - கிடைப்பதில்லை. எல்லி யோக்யதெயுண்டோ - எங்கு (யாரில்) பலன்களைப் பெறுவதற்கு தகுதி உள்ளதோ, அல்லியே பல - அங்கே (அவர்களுக்கே) பலன். அதில்லதவரிகெ இல்ல - பலனைப் பெற தகுதி இல்லாதவர்களுக்கு பலன் இல்லை. பல்ல புதரு - இதனை அறிந்த ஞானிகள். கேளிரோ - இப்படியான விஷயத்தை கேட்டு சிரத்தையை அடையுங்கள். ஈ பல - இந்த பலன் (அமிர்த - ஞான அல்லது மோட்ச என்னும் பலன்). எல்ல ஸாதனகளொல்லதவனிகெ - பலன்களைப் பெறுவதற்கு செய்ய வேண்டிய எந்த சாதனைகளையும் செய்யாதவனுக்கு. துர்லபகாணிரோ - கிடைப்பதில்லை என்று நிச்சயமாக அறியுங்கள். பல்லித ஹயவதன - சர்வஷக்தனான ஸ்ரீஹரி. ஒல்லிதாகலே -

தரிசனம் அளித்தால் மட்டும். அஹல்யெ இத்த ஷிலெ - அகல்யாதேவி இருந்த கல் (அகலிகைக்கு ஆதரவு அளித்த கல் - அந்த கல் ரூபத்தினால் விழுந்திருந்த அகலிகை). ஹெண்ணாத வோலு - பெண் ஆனதைப் போல. இந்துளிதத்து - அப்படியில்லாமல் மற்ற கற்கள் ஏதாவது. ஹெண்ணாயிதே - பெண்ணாக மாறியதா? (இல்லை).

பலன்களைப் பெறுவதற்கு தகுதி உள்ளவர்களுக்கு மட்டும் பலன் கிடைக்கிறது என்னும் முந்தைய பத்யத்தின் நிர்ணயத்தை உதாரணத்துடன் இங்கு விளக்குகிறார். ஸ்ரீராமனின் கருணைப் பார்வை பட்ட அனைத்து கற்களும் பெண் ஆகவில்லை. அகலிகையைப் பெற்ற கல் மட்டும் பெண் ஆனது. யோக்ய சாதனைகளால் மட்டும் ஸ்ரீஹரி பிரசாதம் கிடைக்கிறது. தகுதி இல்லையென்றாலும், ஸ்ரீஹரி பிரசாதம் இல்லையெனில் மோட்சம் இல்லை, ஞானம் இல்லை, அமிர்த பானம் இல்லை. தக்க சாதனைகளின் நடுவில் பக்தியே சிறந்தது. சிரவண மனனாதி அனைத்து சாதனைகளும் பக்தியைக் கொண்டிருக்க வேண்டும். துர்புத்தியைக் கொண்டிருந்து, அதன் மூலம் செய்யும் அத்யயனம், அர்ச்சனாதி சாதனைகள் எவ்வித பலன்களையும் கொடுப்பதில்லை. இந்த பிரமேயத்தை ஸ்ரீமத் பாகவதம் இவ்வாறு நிர்ணயித்து நிரூபிக்கிறது.

மன்யே தனாபிஜன ரூபதப:ஸ்ருதௌஜ
ஸ்தேஜ: ப்ரபாவ பலபௌருஷபுத்தி யோகா: |
நாராதனாய ஹி பவந்தி பரஸ்ய பும்ஸோ
பக்த்யா துதோஷ பகவான்னனு யூதபாய ||

தனம், குலம், ரூபம், தபஸ், வித்யை, அத்யயன, தேஜஸ், அதிகார பலம், புகழ், அறிவு ஆகிய எந்த சாதனைகளும் பக்தியில்லாமல் இருந்தால், பரமபுருஷனின் மகிழ்ச்சிக்கு காரணமாவதில்லை என்று அறிகிறேன். பக்தியுடன் மகிழ்ந்ததாலேயே ஸ்ரீஹரி, கஜேந்திரனை முதலையிடமிருந்து காத்தான் அல்லவா?

**எனகெ நின்னலி ப$^{4}$க்தி இரலி இல்லதி$^{3}$ரலி**
**ஜன ஹரிப$^{4}$க்தனெந்தெ$^{3}$ன்ன கரெயலாகி$^{3}$**

**மன பாபகெரக$^3$த$^3$ந்தெ**
**அனுதி$^3$ன நீனின்ன காயபே$^3$காயிது**
**அனிமித்த ஸுஜனப$^3$ந்து$^4$**
**கனரிஸி யமப$^4$டரு முந்தெ$^3$ கொந்த$^3$ரெ நின்ன**
**க$^4$னதெகெ$^3$ ஸாலத$^3$ய்ய**
**தன்னவர ஹயவத$^3$னனய்யரிகொ$^3$ப்பிஸித$^3$**
**நென்னுவ து$^3$ர்வார்த்தெ தப்பிஸிகோ தந்தெ$^3$**
**முன்னி ஜனவந்த்$^3$யபாத$^3$ ||38**

எனகெ - எனக்கு. நின்னலி பக்தியிரலி இல்லதிரலி - உன் மகிழ்ச்சிக்குத் தேவையான பக்தி இருக்கட்டும் அல்லது இல்லாதிருக்கட்டும் (அதனை உண்மையை அறிந்தவன் நீ ஒருவனே). ஜன - மக்கள். என்ன - என்னை. ஹரிபக்தனெந்து - விஷ்ணு பக்தன் என்று. கரெயலாகி - அழைக்க (அல்லது ஹரிபக்தன் என்று சொல்வதற்காக) மன - என் மனம். பாபகெரகதந்தெ - பாப கர்மத்தில் ஈடுபடாதவாறு. அனுதின - தினமும். நீனென்ன - நீ என்னை. காயபேகாயிது - அருள வேண்டும். (அப்படி நீ காப்பாற்றவில்லை என்றால், ஹரிபக்தன் என்று என்னை யாரும் சொல்ல மாட்டார்கள். பாவங்களை செய்பவர்களை யாரும் மதிப்பதில்லை). அனிமித்த ஸுஜனபந்து - ஸ்வாபாவிகமாக (எந்த பலன்களையும் எதிர்பார்க்காமல்). ஸுஜீவிகளை அருளும் ஸ்ரீஹரியே. (ஹே ஸஜ்ஜன ஸுஹ்ருத்தம!). முந்தெ - முந்தைய பிறவியில். யமபடரு - யம தூதர்கள். கனரிஸி - நீ உதாசீனம் செய்ததால். கொந்தராகி - கொன்று இழுத்துச் சென்றனர். ஹயவதன - ஸ்ரீஹரி. தன்னவர - தன் பக்தர்களை. அன்யரிகெ - பிறருக்கு (யமதூதருக்கு). ஒப்பிஸிதனெம்புவ - விட்டுக் கொடுத்தேன் என்னும். துர்வார்த்தி - அபகீர்த்தியான (உத்தம கீர்த்தியான உனக்கு அபகீர்த்தியைத் தரும்) இந்த செயல். கனதெகெ - மகாத்மனான உன் கௌரவத்திற்கு. ஸாலதைய - பொருந்துவதில்லை. பிரபோ. முன்னிஜனவந்த்யபாத - ஞானிகளால் வணங்கப்படும் சரணங்களைக் கொண்ட. தந்தெ - ஹே தந்தையே. தப்பிஸிகோ - (இந்த அபகீர்த்தியிலிருந்து) உன்னை காப்பாற்றிக் கொள். (சுஜீவர்களை யமதூதர்களிடம் ஒப்படைக்க வேண்டாம்).

** ஸ்வரூபத்தினால் விஷ்ணுபக்தரான முக்தியோக்ய ஜீவர்களை ஸ்ரீஹரி அருளும் விதத்தை குறிப்பிடுகிறார். ஸ்வரூபத்தில் இருக்கும் அந்த பக்தி, சாதன சரீரத்தில் இருக்கும்போது வெளிப்படுவதைப் போல அருள்பவன் ஸ்ரீஹரியே. ஹரிபக்தி மனதின் பாவம். புற நடவடிக்கைகள் (அத்யயனம், அர்ச்சனை, கீர்த்தனாதிகள்) பக்தியை வெளிப்படும் விதங்கள் ஆகும். இது பொதுவான நியமம். டம்ப-ஆசாரங்கள் இந்த நியமத்திற்கு எதிரானவை. டம்பாசாரங்கள் நீண்ட காலம் இருப்பதில்லை. டாம்பீகர்கள் சீக்கிரமாக பாவக் கிணற்றில் விழுகிறார்கள். டாம்பீகன் அல்லாத நிஜ பக்தனின் ஆசரணைகள் பக்தியைக் கொண்டிருப்பதால், அவனின் மனதிற்கு எதிரான பாவ கர்மங்களில் அது ஈடுபடுவதில்லை. நீண்ட காலம் சாது கர்மங்களில் ஈடுபட்டிருக்கிறான்.

கர்மேந்திரியங்களை தன் வசப்படுத்திக் கொண்டு, நியமிக்கப்பட்ட புற ஆசரணைகளில் அவன் ஈடுபட்டிருந்தாலும் (பாவ கர்மங்களை செய்யாமல் இருந்தாலும்), மனதினால்கூட பாவம் வந்துவிடாமல் இருக்க, மிகவும் உயர்ந்த நிலையான அந்தக்கரண சுத்தி (மன சுத்தி) அவசியம் ஆகிறது. ஆகையால், எப்பேற்ப்பட்ட பக்தனுக்குக்கூட சில சமயம் மானசிக பாவங்கள் வந்துவிடலாம். இப்படியான பாவங்களால்கூட நம்மை அருள்பவன், முக்ய மனோ நியாமகனான ஸ்ரீஹரியே. இவ்வாறு பற்பல காலங்கள் அருளப்பட்ட பக்தனே உலகத்து மக்களால் ஹரிபக்தன் என்று கௌரவிக்கப்படுகிறான். இப்படியான கௌரவத்திற்கு ஸ்ரீஹரியின் கருணையே காரணம். இவ்வாறு அனைத்து மகாத்மரின் அபிப்பிராயம் இருக்கிறது. இதைக் குறித்தான, ஸ்ரீஜகன்னாத தாசரின் நுடியை பார்க்கலாம்.

க்ருணவத்ஸல நின்ன கருணெகெ
உபமெகாணெனோ ஸந்ததவு கா
ஷ்யபியொளகெ புதரிந்த ஜகதா
திபன கிங்கரனெனிஸி மெரெதெ ||

உலகில் அறிஞர்கள் ஹரிபக்தர்கள் என்று (ஹரிதாசன், ஹரிபக்தன் என்று) ஒருவனை கௌரவிக்க, ஸ்ரீஹரியின் கிருபையே காரணம் என்கிறார்.

** ஸ்ரீஹரி அனைவரின் நண்பன். சுஜீவர்களின் இதயத்தில் இருப்பவன். இவ்வாறு சொல்வது ஸ்ருதி ஸ்ம்ருதியின்படியே ஆகும். 'த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா..' என்னும் ஸ்ருதி, ஜீவ பரமாத்மர் என்னும் இரு பக்ஷிகள் அனாதி காலத்திலிருந்து ஒன்றாக இருக்கும் நண்பர்கள் என்றும், 'ஸோ஽ஹம் ப்ரியஸ்ய ஸுஹ்ருத: பரதேவதாயா லீலாகதாஸ்தவ ந்ருஸிம்ஹ விரிஞ்சிகீதா: | அஞ்சஸ்தராம் யனுக்ருணன்...' என்னும் பாகவத வாக்கியம், பக்த ப்ரியனும் அனிமித்த நண்பனும், ஸர்வோத்தமனும், பிரம்மாதிகளால் வணங்கப்படுபவனும் ஆன உன் லீலா சரித்திரங்களை எப்போதும் துதித்து, அனைத்து துக்கங்களையும் தாண்டுவேன் என்றும், சொல்கிறது. ஸ்ரீஹரி, முக்தியோக்ய ஜீவர்களின் இதயங்களில் வசிப்பவன் ஆனாலும், ஸ்வதந்த்ரனான தானே ஸ்வபக்தர்களை யோக்ய சாதனைகளில் ஈடுபடுத்தி, அவர்களின் அல்ப முயற்சிகளை காரணமாக வைத்துக்கொண்டு, மகாபலன்களைத் தருகிறான். எந்தவொரு பலன்களையும் விரும்பாமல், வெறும் ஸ்வரூப யோக்யதையை கவனித்து, அவர்களின் ரட்சகன் ஆகிறான். பலன்களைக் கொடுப்பதில் நிமித்தங்களை விரும்புகிறான் என்பது பொதுவான நியமம். உத்தமாதிகாரிகளுக்கு எந்த நிமித்தமும் இல்லாமல் மஹாபலன்களை அருள்கிறான். இதனால் ஸ்ரீஹரியில் வைஷம்யத்தை (பாரபட்சத்தை) சிந்திக்கக்கூடாது. உத்தமாதிகாரிகளின் 1. ஸ்வரூப யோக்யதை மற்றும் 2. ஸ்வாபாவிகமான அவரின் நிரந்தர ஸ்மரணைகளே நிமித்தங்கள் ஆகின்றன என்று அறியவேண்டும்.

3. 'யமபடரு முந்தெ கொந்தராகி...' என்னும் இந்த பத்யத்தில் இருக்கும் வாக்கியங்களால் நிரூபிக்கப்பட்ட ரகசிய பிரமேயத்தை இவ்வாறு தொகுத்து சொல்லலாம். முக்தியோக்யர்கள் மூன்று விதங்கள் ஆனவர்கள். 1. மனுஷ்யோத்தமர் கர்மயோகிகள். 2. ஸனகாதிகள் ஞானயோகிகள் மற்றும் 3. தேவதைகள் பக்தியோகிகள். கர்மயோகிகள் பற்பல யோனிகளில் பல

பிறவிகளை எடுக்கின்றனர். நடுநடுவில் ஸ்ரீஹரிக்ருபையினால் துர்லபமான மனித தேகமும் கிடைக்கிறது. அவற்றை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளாமல், திரும்பத்திரும்ப நீச யோனிகளை அடைபவர்களும் இருக்கின்றனர். முக்தியோக்யர் யாருக்கும் யமலோகத்தின் நரகங்கள் கிடைப்பதில்லை.

ஜிஹ்வா ந வக்தி பகவத்குண நாமதேயம்
சேதஸ்ச ந ஸ்மரதி தச்சரணாரவிந்தம் |
க்ருஷ்ணாய நோ நமதி யச்சிர ஏகதாऽபி
தானானயத்வமஸதோऽக்ருதவிஷ்ணக்ருத்யான் || (பாகவத)

பகவத் குண ப்ரதிபாதக நாமங்களை யாரின் நாக்கு ஒருமுறையாவது சொல்வதில்லையோ, பகவந்தனின் பாத கமலங்களை யார் என்றும் நினைப்பதில்லையோ, யாரின் தலை ஸ்ரீகிருஷ்ணனை ஒரு முறையாவது நமஸ்கரிப்பதில்லையோ, அத்தகைய பகவத் கர்ம ஷூன்யரை இழுத்து வாருங்கள், என்பது யமதேவன் தன் தூதர்களுக்கு இட்டிருக்கும் கட்டளை ஆகும். பக்தர்களால் செய்யப்படும் நாமசங்கீர்த்தனை மட்டும் பலன்களைத் தருகிறது. அபக்தர்கள் செய்வதை 'வ்யர்த்த' (வீண்) என்பது சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விஷயம் ஆகும்.

அசுர ஸ்வபாவத்தின் ஜீவர்களுக்கு என்றும் பக்தி பிறப்பதில்லை. ஸ்வரூபத்தினால் பக்தரான முக்தி யோக்ய ஜீவர்களுக்கு சம்சாரத்தில் எப்போதும் (அனைத்து தேகங்களிலும்) பக்தி தோன்றியே இருக்கிறது என்னும் நியமம் இல்லை. அனாதி கர்மாதி நிமித்தங்களால் சுஜீவர்கள் கூட வழி தவறுவது உண்டு. அந்த ஸ்ரீஹரி, அவர்களை யோக்ய செயல்களால் நல்மார்க்கத்திற்கு கொண்டு வருகிறான். க்ஷமா-சமுத்திரன் ஆகையால் சில சமயங்களில் அத்தகையவர்களை, தந்தை மகனை மன்னிப்பதைப் போல, மன்னிக்கிறான். ஆகையால், ஸுஸ்வரூபனான முக்தியோக்ய ஜீவர்கள், எந்தவொரு பிறவியிலும் ஒருமுறையாவது பக்தியுடன் ஸ்ரீஹரியை கண்டிப்பாக நமஸ்கரித்திருப்பார்கள். அந்த காரணத்தால் யமதூதர்கள் என்றும் இவர்களின் அருகில் வருவதற்கு (யமனின் ஆணைப்படி) சந்தர்ப்பமே இல்லை.

ஏகதாऽபி ந வக்தீஇத்யாம்யுக்தம் | இஹ ஜன்மனி ஜன்மாந்தரே வா ந வக்தீதி |
ஏகதாऽபி பகவத்ஸேவா ந க்ருதேத்யாதிகம் து அஸதோ ஜீவஸ்யைவ || (பாகவத ஸாரோத்தார)

ஒரு வேளையாவது நாமஸங்கீர்த்தனை செய்யாதிருப்பது என்றால், இந்தப் பிறவியிலோ அல்லது சென்ற பிறவிகளிலோ என்று அர்த்தம். எந்த விதமான பகவத் சேவையையும் என்றும் (பக்தியுடன்) செய்யாதவன் என்றால் அத்தகையவன் தமோயோக்ய ஜீவனே ஆகிறான். இவ்வாறு 'ஏகதா' என்னும் பாகவத ஸ்லோகத்தின் சொல்லிற்கு ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், வியாக்யானம் செய்து, அடுத்து 'நனு முக்தியோக்யஜீவ மாத்ரஸ்ய யமதூதாதி தண்ட்யத்வாபாவே தஸ்ய நிரயப்ரதிபாதகவாக்ய விரோத:ஸ்யாதிதிசேத் | மைவம்' ஆகிய வாக்கியங்களில், முக்தி யோக்ய ஜீவனுக்கு யமதூதர்களால் தண்டனைகள் இல்லை என்று சொன்னால், பாவங்களை செய்தவர்களுக்கு ஜீவசாமான்யரின் பொது விதிப்படி, நரகத்தை சொல்லும் பிரமாண வாக்கியங்களின் விரோதம் உண்டாகிறது என்றால் -- அப்படியல்ல. என்று துவங்கி, சந்தேகங்கள் அனைத்தையும் பரிகரித்து, நிர்ணயத்தை சொல்கிறார்.

நிரய - சொல்லிற்கு அஞ்ஞான நிரம்பிய யோனிகள் என்றும், மற்றும் ஞான சாதனைக்கு சந்தர்ப்பம் இல்லாத பசு, மரம் போன்ற யோனிகள் என்றும், அர்த்தத்தை அறியலாம் என்றிருக்கிறார். அதற்கேற்ப புராண வாக்கியங்களை உதாரணம் கொடுக்கிறார். புகழ்பெற்ற நரகங்களில் விதவிதமான துக்கங்களை அனுபவிக்கும் சுஜீவிகள், அங்கு வந்த நாரதர் மூலமாக பகவன் நாமகீர்த்தனைகளைக் கேட்டு, துக்க பரிகாரங்களை அடைந்து, உத்தம கதியை அடைந்தனர் என்று சொல்லும் புராண வாக்கியங்களால் - வந்த சந்தேகங்கள் தீர்கின்றன.

ஏனெனில், முக்தியோக்ய கர்ம யோகிஜீவர்களுக்கு ('தேவானாம் நிரயோ நாஸ்தி...' ஆகிய வாக்கியங்களால் தேவாதிகளுக்கு நரகங்கள் இல்லை) பிம்ப அபரோக்ஷ சாதன காலம் 1013 பிறவிகள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு முன் பல ஆயிர பிறவிகளும் வந்திருக்கின்றன. இந்த சாதன ஜென்மங்களின் (1013

ஜென்மங்களின்) காலத்தில் அவர்களுக்கு பிரசித்த நரகங்களும் இல்லை. அந்த முந்தைய பிறவிகளில் நரக வாஸத்தை அனுபவித்திருக்கலாம். முக்ய ஸாதன மார்க்கத்தை பிடித்து அடுத்து சென்று கொண்டிருக்கையில், அவர் மூலமாக செய்திருக்கக்கூடிய அபராதங்களின் காரணமாக யமதூதர்களின் தரிசனம்கூட இவர்களுக்கு இல்லவேயில்லை.

ஸ்ரீவிஷ்ணு தீர்த்தர், ஏகதாபி என்பதற்கு, முந்தைய பிறவிகளில்கூட ஒரு முறையாவது' என்னும் அர்த்தத்தை சொல்லியிருப்பது, பிரதான சாதன மார்க்கமான 1013 பிறவிகளில் யமதூதர்களின் அல்லது நரகங்களின் தர்ஷனம் இல்லை என்று சொல்வதற்காக என்று அறியவேண்டும். கர்ம யோகிகளின் சாதன காலத்தை விவரிக்கும் ஸ்ரீஜகன்னாத தாசரின் நுடிகளை இங்கு பார்க்கலாம்.

ஹீனகர்மக3ளிந்த3 ப3ஹுவித3
யோனியலி ஸஞ்சரிஸி ப்ராந்தகெ
மானுஷத்3வவனைதி3 ஸர்வோத்தமனு ஹரி எம்ப3 |
ஞான ப4க்திக3ளிந்த3 வேதோ3
க்தானுஸார ஸஹஸ்ர ஜனுமதி3
ந்யூனகர்மவ மாடி3 ஹரிக3ர்ப்பிஸித நந்தரதி3 ||5

ஹத்துஜனுமக3ளல்லி ஹரிஸ
ர்வோத்தம ஸுராஸுரக3ணார்ச்சித
சித்ரகர்ம விஷோக4னந்தானந்த ரூபாத்ம |
ஸத்ய ஸத்ஸங்கல்ப ஜக3து3
த்பத்தி ஸ்தி2தி லய காரண ஜரா
ம்ருத்யு வர்ஜிதனெந்து3பாஸனெகெ3ய்த3 தருவாய ||6

மூரு ஜனுமக3ளல்லி தே3ஹா
கா3ர பஷுத4ன பத்னிமித்ர கு
மார மாதாபித்ருக3ளல்லிஹ ஸ்னேஹகிந்ததி4க |
மாரமணனலி பி3ட3தெ3 மாடு3வ
ஸூரிக3ளு ஈ உக்த ஜனுமவ
மீரி பரமாத்மன ஸ்வதே3ஹதி3 நோடி3 ஸுகி2ஸுவரு ||7

இந்த பத்யங்களின் அர்த்தம் இவ்வாறாக உள்ளது. 'ப்ராந்தகெ மானுஷத்வவனைதி' என்பதற்கு பற்பல யோனிகளில் சஞ்சரித்து மனித தேகத்தைப் பெற்ற பிறகு திரும்ப நீச யோனிகளுக்கு செல்வதேயில்லை என்று மட்டும் நினைக்க முடியாது. பற்பல மனித பிறவிகளில் ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்னும் ஞானத்தையும், அதன் மூலம் கிடைத்த பக்தியையும் அடைந்த பிறகு வரும் 1000 பிறவிகளில், ஸ்வ-விஹித கர்மங்களை பின்பற்றி, ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கும்போது, திரும்ப நீசயோனிக்குச் செல்லும் சந்தர்ப்பம் மிகவும் குறைவு மற்றும் நரகம் இல்லவேயில்லை என்று அறிய வேண்டும்.

இந்த பிரமேயத்தின் உதாரணங்களாக இருக்கும் பற்பல புராணங்களில் சொல்லப்படும் கதைகளை காணலாம். ஸ்வவிஹித கர்ம நிஷ்டனான மனிதன்கூட தினந்தோறும் 10 பிறவிகளை பெறக்கூடிய அளவிற்கு கர்மங்களை செய்கிறான். இவ்வாறு இருக்கையில், கர்ம பலன்களையும் அனுபவித்து முடித்தபின்பு மோட்சம் என்றால், மோட்சம் என்பது இல்லவேயில்லை என்று சொல்வது போல ஆகிறது. ஸ்ரீஹரி பிரசாதத்தினாலும், பிராயச்சித்தாதிகளின் ஆசரணைகளாலும் கர்ம நாசம் என்பது உண்டு. நீண்ட விளக்கங்கள் தேவைப்படுவதான இந்த பிரமேயத்தின் நிர்ணயத்தை இந்த பத்யத்தில் குறிப்பிட்டு, ஸ்வபக்தர்களை என்றும் யமதூதர்களின் கைக்கு ஒப்படைக்காதீர்கள் என்று பிரார்த்தனை செய்கிறார்.

**நின்னனெ நோடு3வ நின்னனெ பாடு3வ**
**நின்னனெ பே3டு3வ நின்ன கொண்டா3டு3வ**
**ஜனரொளெந்தி1ப்புதை**
**கண்ணு குக்கி கிவியோள் ஸுண்ணஹொய்து3 ஷிர**
**வன்னு கத்தரிஸுவ**
**ப3ன்னப3டி3ஸி கி3லிகி1ய மெட்டிஸுவ**
**க4ன்னனரகத3 பா3தெ4**
**நின்ன மஹிமெகி3து3 ஸாகெ தே3வரதே3வ**
**என்னாள்த3 ஹயவத3ன்ன விசாரிஸோ**
**அன்னந்த கு3ணபூர்ண ||39**

நின்னனெ நோடுவ - உன்னை (உன் மூர்த்திகளை) பார்க்கும், நின்னனெ பாடுவ - உன் குணகானங்களை பாடும். நின்னனெ பேடுவ - உன்னையே வேண்டும் (பிறரை எதற்கும் யாசிக்காத). நின்ன கொண்டாடுவ - உன் சங்கீர்த்தனையில் ஈடுபட்டிருக்கும். ஜன்மரொளு - பிறவியில். கண்ணு குக்கி - கண்களை குத்தி. கிவியோள் - காதுகளில். ஸுண்ண ஹொய்து - கொதிக்கும் சுண்ணாம்பினை ஊற்றி. ஷிரவன்னு கத்தரிஸுவ - கழுத்தை வெட்டும். பன்னபடிஸி - சகிக்கமுடியாத துக்கத்தைக் கொடுத்து, கிலிகிய - கிலுகிலுப்பையை. மெட்டிஸுவ - காலில் மிதிக்கும் (பல துக்கங்களில் இருப்பவனுக்கு, விளையாட்டுப் பொருட்கள் தேவைப்படுமா?). கன்ன நரக பாதெ - அதிசயமான நரக இம்சைகள். எந்திப்புதை - இவ்வாறு இருக்க சாத்தியமா? (உன் பக்தர்களுகு நரக இம்சைகள் இல்லை). தேவர தேவ - ஹே தேவோத்தமனே. நின்ன மஹிமெகெ - உன் அனந்த மகிமைகளுக்கு. இது ஸாகெ - நரக பாதையினால் ஸ்வபக்தர்களை தப்புவிப்பது என்பது மட்டுமே என்று சொல்லலாமா? (மோட்சாதி புருஷார்த்தங்களை அருள்வதற்கு சமர்த்தனான நீ, வெறும் நரக பாதைகளை தப்புவிக்கிறாய் என்பது ஒரு பெரிய விஷயமா?). அன்னந்தகுணபூர்ண - அனந்த கல்யாண குணபூர்ணனான. என்னாள்த - என் பரமஸ்வாமியான. ஹயவதன்ன - ஹே ஹயமுகனே. விசாரிஸோ - மனதிற்கு கொண்டு வா. ஸ்வாமியே.

** முந்தைய பத்யத்தில், சுஜீவிகளின் இதயத்தில் ஸ்ரீஹரி பக்தியை உருவாக்கி, நரக பயத்தினால் அருள்கிறான் என்று சொல்லி, இந்த பத்யத்தில், வெறும் நரகத்திலிருந்து தப்புவிக்கிறான் என்று சொல்வது அவனின் அபார மகிமைகளின் ஒரு சிறிய அளவு மட்டுமே. மோட்சாதி இஹபர சுகங்களைக் கொடுப்பவனான க்ருபா கடாக்ஷம் உள்ள ப்ரபுவை தொடர்ந்து சரணடையும் மகாபாக்கியத்தை அருள்வாயாக என்று பிரார்த்தியுங்கள், என்கிறார்.

**நா நின்ன மரெத3ரு நீனென்ன மரெத3ரெ**
**ஹானி நினகெ3 நின்ன ப4க்தவத்ஸதெகெ3**
**ஹீனதெ ப3ந்தி3தாகி3**
**ஆ நருதே த்வத்கியதே கிஞ்சனாரேயெம்**
**பா3ம்யாய ஏனெந்தி3தாகி3**

**நீனுதா3ஸீனனாகெ3 க2ளர ஸேனெ ஸ**
**ஜ்ஜனர கொந்தி3தாகி3**
**ஸ்ரீநாத2 ஹயவத3ன ஷிஷுக3ள தப்பனு**
**ஜனனி ஜரெத3ரெ ஜக3வெல்ல நகு3வுதோ3**
**ஜாணர ஜாண நீனு ||40**

நா - நான். நின்ன - உன்னை. மரெதரு - மறந்தாலும். நீனென்ன - நீ என்னை. மரெதரெ - புறக்கணித்து கைவிட்டால். ஹனை நினகெ - அதற்கான நஷ்டம் உனக்கே. எனக்கு அல்ல. ஏனெனில், நின்ன பக்தவத்ஸலதெகெ - பக்தவத்ஸல என்னும் உன் புகழுக்கு (மகிமைக்கு). ஹீனதெ பந்திதாகி - குறைவு வந்துவிடும் ஆகையால், (ஸ்வபக்தனை அருளாமல் கை விட்ட அபகீர்த்தி உனக்கு வரும்). ஆ - புகழ்பெற்ற. ந ருதே த்வத்க்ரியதே கிஞ்சனாரே எம்ப - 'ந ருதே த்வத்க்ரீயதே கிஞ்சனாரே' என்னும் ஸ்ருதி வாக்கியம். ஏனந்திதாகி - என்னவென்று சொல்கிறதோ அதனை. (நீயே சர்வகர்த்தன் என்று சொல்வதால்). நீனுதாஸீனனாகி - நீ சஜ்ஜனர ரக்ஷணையை புறக்கணித்தால். களர ஸேனெ - துர்ஜனர்களின் சமூகம். ஸஜ்ஜனர்களின் கொந்திதாகி - கொல்வதால். (துஷ்டர்களை புறக்கணித்தால், அவர்கள் சஜ்ஜனர்களை துன்புறுத்தி கொல்கின்றனர். கொல்வதற்கு சமர்த்தர் ஆகின்றனர். அவர்களால் வேறு என்ன செய்ய முடியும்? அப்போது சர்வகர்த்தனான நீயே சஜ்ஜனர்களை கொல்கிறாய். அதனால், ஸ்ரீ நாதஹயவதன - லட்சுமிபதியான ஹே ஹயக்ரீவ ஸ்வாமியே. ஜனனி - தாய்.

ஷிஷுகள தப்பனு - மக்களின் தவறுகளை ஜரிதரெ - நினைத்து திட்டினால், ஜகவெல்ல - அனைத்து மக்களும். நகுவரோ - அத்தகைய தாயினைக் கண்டு சிரிக்கின்றனர். ஜாணர ஜாண - ஞானிகளுக்கும் ஞானத்தைக் கொடுப்பவனான / சர்வக்ஞனான. நீனு - நீ அறிந்திருக்கவில்லையா? (அறிந்திருக்கிறாய். ஆகையால், சிசுக்களைப் போல இருக்கும் நம் தவறுகளை மன்னித்து, நம் அனைவரின் தாயான நீ நம்மை காப்பாற்று).

த்ராஹி மாம் க்ருபயா க்ருஷ்ண ஷரணாகத வத்ஸல - என்று அனைத்து ஞானிகளும், ஸ்ரீஹரியை ஷரணாகத ரக்ஷகன் என்றும், பக்தவத்ஸலன் என்றும் வணங்கி பிரார்த்திக்கின்றனர்.

* தேஷாமஹம் ஸர்வத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத்;
* ந மே பக்த: ப்ரணஷ்யதி
* தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்

ஆகிய கீதா வாக்கியங்களில் ஸ்ரீகிருஷ்ணனும் தான் ஷரணாகத வத்சலன் என்று சபதம் செய்கிறான். இந்த தன் சபதத்தை, கஜேந்திர, பலி, அம்பரீஷ, குசேல முதலான பக்தர்களின் விஷயத்தில் நிரூபித்திருக்கிறான். ஷரணாகதர்களை காப்பாற்றாமல் கைவிட்டு, என்றும் கேலிக்கு ஆளாவதில்லை. இதன் உண்மையை த்ருடமாக விளக்கும் ஸ்ரீவாதிராஜ யதிகள், ஒரு தாயைப் போல அனைத்து தவறுகளையும் மன்னித்து அருள்வாயாக என்னும் பிரார்த்தனையை 'நகுவரோ' என்று சொல்லி முடிக்கிறார்.

** பக்தவத்ஸலனான ஸ்ரீஹரியினால் சஜ்ஜனர்களுக்கு அனைத்து பிரகாரத்தின் ரக்ஷணை கிடைப்பது போல, துர்ஜனர்களால் இம்சையும் அவனிடமிருந்தே கிடைக்கின்றன. த்ரிவித ஜீவர்களில் அந்தர்யாமியாக இருந்து, ஷத்ரு, மித்ர, உதாசீனர் என்னும் பரஸ்பர பாவனைகளுக்கு காரணமாகிறவன் அவனே. ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியின் நித்யபிரதிபிம்பர் - ஜீவர்கள்.

தததீனஸ்தத்ஸத்ருஷோ ஹரேர்ஜீவோ ந சம்ஷய: |
ப்ரதிபிம்பஸ்ய ஷப்தார்த்தோ ஹ்யமேவ உதாஹ்ருத: ||
(பிரம்மகாண்ட)

ஆகிய பிரமாண வாக்கியங்கள் பிரதிபிம்பத்வத்தை (ஜீவ தர்மத்தை) நிரூபிக்கிறது.
பிம்பனான ஸ்ரீஹரியினால் மிகுந்த பின்னனும், பிரதிபிம்பத்தைப் போல அதீனனும் ஆகியிருக்கிறான் ஜீவன். என்பதை சொல்வதற்கு, ஜீவனுக்கு பிரதிபிம்பத்வம் சொல்லப்பட்டிருக்கிறது.

பின்னத்வததீனத்வ தத்ஸாத்ருஷைரேவ ஸூர்யகாத்யபமா - என்று இந்த பிரமேயத்தின் தெளிவான விவரணை இருக்கிறது. இவ்வாறு பிரதிபிம்பனான ஜீவன் பிம்பாதீனன், அஸ்வதந்த்ரன். பிம்பனான ஸ்ரீஹரி செய்யாத எந்த செயலும் பிம்பனால் செய்ய முடிவதில்லை.

* ஸ ஹி ஸர்வஸ்ய கர்த்தா
* தேன வினா த்ருணமபி ந சலதி
* கர்த்ருத்வம் க்ருதிஸ்வாதந்த்ர்யம்
* ஸர்வகர்மா
* ஸர்வவ்யாபி ஸர்வபூதாந்தராத்மா கர்மாத்யக்ஷ:

ஆகிய ஸ்ருதிகள் சொல்லும், ஸ்ரீஹரி ஸர்வகர்த்தன் என்னும் மகிமையை இந்த பத்யத்தில் உதாரணம் கொடுத்திருக்கும் 'ந ருதே த்வத்க்ரியதே கிம் ச நாரே' ஸ்ருதி தெளிவாக சொல்கிறது.

அரே - ஹே இந்திரனே. த்வத் ருதே - ஸ்ரீஹரியை விட்டு (அஹம் - த்வம் இத்யாதி அனைத்து ஸ்ர்வ நாம ஷப்தவாச்யன் ஸ்ரீஹரியே). கிஞ்சன - எந்த வஸ்துவும். ந க்ரியதே - எதையும் (எந்தவொரு அல்ப க்ரியையையும்) செய்வதில்லை (செய்ய முடிவதில்லை).

அகர்த்துமன்யதா கர்த்தும் கர்தும் ஜாஸ்தீஷ்வரச்ய தத் |
ஸாமர்த்யம் தேன தத்வந்த்ரமனாத்யபி ச ஸாதிவத் ||

ஈஷ்வரன் எதையும் செய்யாமலிருக்கவும், அல்லது எதிராக செய்வதற்கும், அல்லது சரியாக செய்வதற்கும் சமர்த்தன். ஆகையால், உற்பத்தியான விஷயத்தைப் போல, அனாதியான விஷயமும்கூட ஈஷ்வராதீனமே ஆகிறது என்று சொல்லும் பிரமாண வாக்கியம் இந்த பிரமேயத்தையே சொல்கிறது.

இவ்வாறு ஸ்ரீஹரியே சர்வகர்த்தன் ஆனாலும், அஞ்ஞானிகளுக்கு இதில் சந்தேகம் வருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஜீவன் அஸ்வதந்த்ரனானாலும், தத்த ஸ்வாதந்த்ர்ய உள்ளவன் ஆகையால், தன் ஸ்வாதந்த்ர்யத்தின் எல்லைக்குள், தன்னாலான முயற்சிகளை செய்ய வேண்டும் என்றும் சிலர் அறிகின்றனர்.

'கர்மண்யே வாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன' - கீதை. அதாவது, கர்ம செய்வதில் மட்டுமே உனக்கு அதிகாரம் இருக்கிறது. கர்ம பலன்களில் எப்போதும் இல்லை என்று சொல்லும் இந்த வாக்கியங்களால், ஜீவனுக்கு சிறிது ஸ்வாதந்த்ர்யம் உண்டு என்னும் பிரமை உண்டாகிறது. ஆனாலும் இவ்வாறு நினைப்பது பிரமை மட்டுமே. ஸ்வாதந்த்ர்யத்தின் விஷயத்தில் ஜீவன் ஜடத்திற்கு சமமானவன். கர்ம செய்வதில் 'அதிகார' என்றால், ஸ்வாதந்த்ர்ய என்று அர்த்தம் அல்ல. கர்மகரண சக்தி உள்ளவன் என்று அர்த்தம். சேதனன் ஜடவிலக்ஷணன் - ஞானேச்சாக்ரியா சக்திகள் அவனின் ஸ்வரூப தர்மங்களாக இருக்கின்றன. ஜீவ ஸ்வபாவம் யோக்யதையினாலும், 'ஹட' என்றும் அழைக்கப்படுகிறது. இது சர்வ ஜீவர்களுக்கு அனாதியும், நித்யமும் ஆகிறது.

ஜீவர்களின் பற்பல செயல்களுக்கு இது முதலான் காரணம். அனாதி கர்மம் இரண்டாம் காரணம். 'பௌருஷ' என்று அழைக்கப்படும் ஜீவபிரயத்னம் மூன்றாவது காரணம். எந்தவொரு கர்மத்தின் சம்பவத்திற்கு காரணமான இந்த மூன்றும் எப்போதும் ஸ்ரீவிஷ்ணு வசத்தில் இருக்கிறது. ஸ்ரீவிஷ்ணு மட்டுமே யாரின் வசமும் இல்லை. ஜீவன் முயற்சி செய்வதும்கூட விஷ்ணுவின் அதீனனாகவே. இவனால் ஸ்வதந்த்ர பிரயத்னமும்கூட முடிவதில்லை. முயற்சி செய்கிறான் ஆகையால், அல்ப கர்த்ருத்வ ஸ்வதந்த்ர்ய இருக்க வேண்டும் என்று அறிவது வெறும் ஊகம் - ஆதாரம் அற்றதாகும்.

ப்ரதிபிம்ப க்ரியாயா: பிம்பக்ரியானுஸ்யூததா |
யதாஷ்னதி ததாஷ்னாதி யதா வக்தி ததைவ ஸ: |
கிமத்ர பஹுனோக்தேன நா஽க்ருதம் க்ரியதே ஜனை: ||
(ஷாண்டில்ய தத்வ)

பிம்பன் உண்டால், ப்ரதிபிம்பனும் உண்கிறான். பேசினால் பேசுகிறான். பிம்பன் செய்யாத எதையும் ப்ரதிபிம்பனும் செய்வதில்லை. பிரதிபிம்பனின் (ஜீவனின்) ஒவ்வொரு செயலும் பிம்பக்ரியா ப்ரவேசம் உள்ளது. உள்ளே நுழைந்து வியாபித்திருக்கிறது - பிம்பக்ரியை. ஆகிய ஜீவ கர்த்ருத்வத்திற்கு

சம்பந்தப்பட்ட பிரமேய விவரங்களை தொகுத்து, புகழ் பெற்ற அபரோக்ஷ ஞானிகளான ஹரிதாசர்கள்,

நோடி நோடிஸுதிஹனு மாடி மாடிஸுதிஹனு
நீடி நீடிஸுவ பிடிவ பிடிஸுவனு
பேடி பேடிஸுவ படவ ரொடெய கொண்
டாடுவர ஒடனாடுவ ஈ மஹிமெ
கீடெந்து ஆவ நுடிவ கெடுவ

என்று விளக்கியிருக்கிறார்கள்.

தத்த ஸ்வாதந்த்ர்ய என்னும் விஷயத்திற்கு மேலும் சில விஷயங்களை இங்கு சொல்ல வேண்டியது அவசியம். ஸ்ரீஹரி தன் ஞானானந்தாதி அனந்த குணங்களால் மிகவும் அபின்னனே ஆகியிருக்கிறான். குணஸ்வரூபனே ஆகியிருக்கிறான். ஸ்வாதந்த்ர்ய என்னும் குணமும் ஸ்ரீஹரி ஸ்வரூபத்தினால் அபின்னமே. ஆகையால், ஸ்வாதந்த்ர்ய தானம் என்றால், தன்னையே கொடுப்பவன் என்று அர்த்தம்.தத்த ஸ்வாதந்த்ர்ய என்பது தன் நாமக ஸ்ரீஹரிரூபமே ஆகியிருக்கிறது. ஸ்ரீஹரி அனந்தாம்சங்களைக் கொண்டவன். ஒவ்வொரு அம்சத்திற்கும் மூல ரூபத்திற்கும் அத்யந்த அபேதங்கள் உள்ளன. அனைத்து அம்சங்களும் கர சரணாதி அவயவங்களைக் கொண்ட சிறப்பு ரூபங்களே. பரஸ்பர அபின்னரூபங்களே ஆகும். இப்படியான அற்புத மகிமோபேதனான ஸ்ரீஹரி, ஜீவர்களுக்கு ஸ்வாதந்த்ர்யத்தை தானம் அளிப்பது என்றால், ஸ்வாதந்த்ர்ய நாமகனான தன் ஒரு அம்சத்தை ஜீவரில் யதா யோக்யமாக நிறுவி, அந்த ரூபத்தினால் தான் செய்தத்தை ஜீவர்கள் மூலமாக செய்விக்கிறான் என்று அர்த்தம். இந்த பிரமேயத்தை நிரூபிக்கும் சில பிரமாண வாக்கியங்கள் இவ்வாறு உள்ளன.

* ததா ச ஸ்வாதந்த்ர்யதானம் நாம தத்ரூபேண ஜீவப்ரவேஷ: (சலாரி)
ஸ்வாதந்த்ர்ய தானம் என்றால், தன் நாமக தன் ரூபத்திலிருந்து ஜீவனில் பிரவேசிப்பது - என்று அர்த்தம்.

* தத்தஸ்வாதந்த்ய நாம்னா வை ஹரேரீஷேன ஸர்வதா |

ப்ரேரித: கர்மகுர்வாணோ ந மே ஷக்தி: கதஞ்சன ||
(பிரகாஷ சம்ஹிதா)
தத்த ஸ்வாதந்த்ர்ய நாமக ஶ்ரீஹரியின் ரூபத்தினால் ப்ரேரிதனாகி கர்மத்தை செய்கிறேன் அல்லாமல், நானே செய்யும் ஷக்தி எனக்கு சிறிதும் இல்லை.

இவ்வாறு அனைத்தையும் தான் செய்து ஜீவர்கள் மூலமாக செய்விக்கும் ஶ்ரீஹரி சர்வகர்த்தன் - பூர்ண ஸ்வதந்த்ரன். ஜீவனின் தகுதி ஆகியவற்றிற்கேற்ப, அவர்களால் ஆகவேண்டிய கர்மங்களை தான் செய்து செய்விக்கிறான் என்பது பொதுவான நியமம். அது அவனின் சங்கல்பம். இந்த ஞானம் திடமாக நின்றால், ஜீவனால் எந்த தவறுகளும், என்றும் நிகழாது.

பூர்ணகர்மாதி காரணங்களால் சம்பவிக்க தக்கதான விதி நிஷேதங்களின் மீறல்கள் அல்லது கர்மாசரணையில் லோப தோஷம் போன்ற தவறுகளை மன்னித்து, திரும்ப அத்தகைய தவறுகள் நடக்காதவாறு அருளவும் என்று பிரார்த்திப்பது ஒன்றே சரியானவழியாகும். ஸர்வஸ்வதந்த்ர கர்த்த என்னும் ஞான தார்ட்யத்தை சம்பாதிப்பதற்கு, க்ஷமா சமுத்திரனும் பக்தவத்ஸலனுமான ஶ்ரீஹரி, பக்தனின் அந்த பிரார்த்தனையை தவறாமல் செய்வேன் என்று சொல்வதில் எந்த சந்தேகமும் இல்லை.

அன்ய மத நிராகரணத்துடன், வைஷ்ணவ சித்தாந்த தத்வங்களின் நிச்சய ஞானத்தை அடைந்து, ஸ்வாதந்த்ர்யாதி அனந்த ஷுப குண பூர்ணனான ஶ்ரீரமாரமணாபின்ன ஶ்ரீலட்சுமி ஹயக்ரீவஸ்வாமியே ஸர்வோத்தமன் என்று திடமாக நம்பி, அவனின் நித்ய தாசன் என்னும் பாவத்தைக் கொண்டு, பக்தியுடன் அனன்யமாக அவனையே சரணடைவதைத் தவிர, நித்ய நிர்துக்கானந்த அனுபவ ரூபத்தின் மோட்சத்திற்கு வேறு வழி இல்லை என்று, ஶ்ரீவாதிராஜ யதிவரேண்யர் இந்த கிரந்தத்தின் மூலமாக சஜ்ஜனர்களுக்கு உபதேசம் செய்கிறார்.

ஆசார்யா: ஶ்ரீமதாசார்ய: ஸந்து மே ஜன்மஜன்மனி

மதான்யன்யானி ஸர்வாணி தோஷஜாலைகபாஞ்சி ஹி

தோஷலேஷோऽபி நாஸ்த்யஸ்மின் மத்வசித்தாந்த ஏவ ஹி ||

ஏதத்ஸத்விஷயம் குண்டக்ரியா க்ரந்தென ஸாதயன்
வாதிராஜ குருஸ்ரேஷ்டச்சகாரானுக்ரஹம் ஸதாம் ||

கிரந்த ஸ்யார்த்தவிவரணம் யதாமதி க்ருதம் மயா
ஸ்ரீமத்ஸுதீந்த்ர தீர்த்தானாம் மத்குரூணாம் ஹ்ருதப்ஜக: ||

ஸ்ரீகிருஷ்ண விட்டலஸ்ரீஷ: ப்ரீயதாம் சேவயானயா
யாசேऽந்த:கரணஷுத்திம் த்ருடபக்தி விவ்ருத்தயே ||

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**ஓம் தத்ஸத்**

***